THE

# Viveka Chintamani Series

EDITED BY

C. V. SWAMINATHA AIYAR






# KANTHIMATHI:

*A NOVEL IN TAMIL.*

"I NEED not repeat that your work of diffusing wester knowledge, the wisdom of European *belles letters*, as we as the popularised results of science among your peopl is of great importance and deserves not only the sympatl of every one who believes in progress, but also the assis ance of the Government, in whose interest it is to rai the standard of intelligence to the highest possib evel."—*Dr. Paul Carus.*

The Viveka Chintamani Series.

# KANTHIMATHI:

## A NOVEL IN TAMIL.

(AFTER SCOTT'S TALISMAN,)

BY

K. V. SUBHAYYA IYAR, M. A., L. T.

# காந்திமதி

கெ. வி. சுப்பய்யாஐயர், எம். எ., எல். டி.,

இயற்றியது.

Madras:
PUBLISHED BY
C. V. SWAMINATHA AIYAR,
SECRETARY, DIFFUSION OF KNOWLEDGE AGENCY, TRIPLICANE.
1902.

# EDITOR'S PREFACE.

## விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்.

### முகவுரை.

தமிழ்ப்பாஷை சிறந்ததும் இனியதுமென்று அப்பாஷாபண்டிதர்கள் அதைப்பற்றிப் பேசுங்கால் பெருமை கொண்டாடினும், அப்பாஷைப்பயிற்சி தற்காலம் தமிழைச் சுயபாஷையாக உடையாருள்ளும் விர்த்தியடையாமல் க்ஷீணித்துவருகிறவிஷயம் யாவரும் அறிந்ததேயாம். யாவரும் அறிந்தும், அப்பாஷையை அநாதரவுசெய்வது பிசகென்று பல்லோர்கூறியும், அதையாதரித்து அப்பாஷையின் பயிற்சியை விர்த்திசெய்யவும், அதன்மூலமாக உபயோகமான அறிவைச் சனங்களுக்குள் பரவச்செய்யவும், பலர் ஒன்று சேர்ந்து பெருமுயற்சி செய்து பயன் விளைவித்ததைக்காணோம்.

தற்காலம், உபயோகமானதும் ஊதியமளிப்பதுமான அறிவு, பெரும்பாலும் ஆங்கிலேயபாஷை மூலமாகவே பெறுவது எளிதாகவிருக்கின்றது. ஆகையால் இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷையிலுள்ள புஸ்தகங்களையே மேன்மேலும் வாசிக்கப்பிரியம் கொண்டவர்களாகிறார்கள். தமிழ்ப்பாஷைப்பயிற்சி பலவிதத்திலும் அசட்டை செய்துவிடப்பட்டதால், அப்பாஷையில் அவர்களுக்குச் சாதாரணமாய்த் தேர்ச்சியின்றிப் போய்விட்டது. இங்கிலீஷ் படிக்காத ஜனங்களுக்கு நித்தியப்படி ஜீவனத்திற்குப

யோகமான அறிவு பலவகையில் வேண்டிய தவசிய மாயிருந்தும், சுயபாஷையில் அவர்கள் தாமாக வாசித்துக் கிரஹிக்கத்தக்க உபயோகமான புஸ்தகங்கள் அதிகமின்மையால், அவர்கள் அறிவையடைய ஆவல்கொண்டும் ஏற்ற வழியின்றித் தவித்துச் சும்மா இருந்துவிடுகிறார்கள். இப்படித் தீராப்பொறியாகச் சும்மாவிருக்கவேணடி நேரிடுவது வழக்க பலத்தால் சோம்பற்றனமாகமாறி அறிவை யடையவேண்டுமென்கிற ஆசையே இல்லாமற் போகிறது.

இவ்வாறாக, இங்கிலீஷ் படித்தவர்களுக்கும் தமிழ்ப் படித்தவர்களுக்கும் சாதாரணமாய்த் தமிழ்ப் பாஷை தற்காலத்திற்குபயோகமான அறிவையூட்டக் காரியத்தில் பிரயோசனமற்றதாகப் போகிறது. இதனால் நமது ஜனங்களுக்கும் தேசத்திற்கும் விளையும் தீங்குகள் அற்பசொற்பமல்ல. அவற்றைப்பற்றிப் பேசப்புகின் மிகப்பெருகும். படித்தவர்களெல்லார்க்கும் உபயோகமான அறிவைப்பரவச்செய்யப் பிரயோசனமில்லாத ஸ்திதியிலிருக்கும் பாஷை, மற்றெல்லாவற்றிலும் உபயோகத்தையும் ஊதியத்தையும் பெரிதாகநாடி நடக்கும் 19-ம் நூற்றாண்டிறுதியான இக்காலத்தில், சீக்கிரம் கவனிக்கப்படாவிடிற் சீரழிந்து, சிறப்புக்கெட்டுச் சிதறிப்போகுமென்பதற்குக் கேட்பானேன்! தமிழ்ப்பாஷை சீரழிந்து சிதறிப் போகாதிருக்க அவற்றிலுள்ள ஆதிநூல்களையும் சிறந்த கிரந்தங்களையுமழிந்துபோகாமற் காப்பாற்றவேண்டிய தவசியமென்பதிற்றடையில்லை அத்துடன் அப்பாஷை ஜனங்களால் படித்துக் கொண்டாடப்பட வேண்டுமானால், தற்கால அறிவையூட்டத் தகைமையுடையதாக அதைச் செய்ய வேண்டியதும் அவசியமேயாம்.

இந்த அவசியத்தை உன்னித் தமிழ்ப்பாஷையைச் சனப்பிரீதிக்கிசைந்ததாகச்செய்து விர்த்திக்குக்

கொண்டுவர இரண்டு அம்சங்களிருக்கவேண்டியது அத்தியாவசியகம். ஒன்று : இங்கிலீஷில் கற்றறிந்தாராயிருப்பதுடன் தமிழிலும் தேர்ச்சிபெற்றோர் சாதாரண ஜனங்களுக்குப் புலப்படு நடையில் உபயோகமான விஷயங்களை எழுதுவதோடு, தமிழிற் பயிற்சியில்லாத இங்கிலீஷ் படித்தவர்கள் அப்பாஷை பயின்று அதில் ஒருவாறு தேர்ச்சியடைய வகையும் காட்டி எழுதவேண்டியது முதலவசியம். அவர்கள் எழுதினவை ஒரு சிறு புஸ்தகமாகவோ பிரசங்கமாகவோ வெளியிடப்பட்டு, மிகவும் நெருங்கி வரையறுக்கப்பட்ட சிறுவட்டமான சிலர் நடுவே மட்டும் வழங்கி அமுங்காது, படித்தோர் பாமரர் யாவராலும் படிக்கப்பட்டு நாடெங்கும் வழங்கி வரத்தக்க வசதிவேண்டியதிரண்டாவதவசியம். அத்தியாவசியகமான இவ்விரண்டு முக்கியாம்சங்களும் ஒருங்கு பொருந்தியிருந்தால்தான், நாடெங்கும் அறிவு பரவி, கற்றோரும் மற்றோரும் கருத்திற் கலந்து, நமது தேசத்தார் தமக்குள் தாமே பிரிவினையடையாது, கற்றவர்போனவழி மற்றவர் பின்தொடரவும், பின்தங்கினோரை முன் செல்லவைக்கக் கற்றவர் கவனித்துழைக்கவுமாக இப்படி எல்லவரும் ஒருமித்து முன் நகர நம்மவர் ஜாதிமொத்தத்தில் சீரடைந்து முன்னுக்கு வர வழியுண்டாகும். இந்த இரண்டு அம்சங்களையும் பொருந்த அமைத்து மேலே சொன்ன விதம் ஒருவழி பிறப்பிக்கவேண்டுமென்று தான் "அறிவைப்பரவச்செய்யும் ஏற்பாடு"* ஒன்று தயார்செய்து அவ்வேற்பாட்டின்படி 1892-௵ மே௴ முதல் **விவேகசிந்தாமணி** என்னும் பத்திரிகை நடத்தப்பட்டு வருகிறது.

இப்பொழுது அவ்வேற்பாட்டிற்கு இசையவே, மேற்படி **விவேகசிந்தாமணி**யில் வெளியான விஷ

---

* *Vide* Editor's Introductory Article in Vol. I, No. 1, of the Viveka Chintamani for May 1892.

யங்களில் முக்கியமானதும் நிரந்தர உபயோகமானது மான அரிய விஷயங்களைத் திரட்டி "விவேகசிந்தாமணிப் பிரசுரங்கள்" என்னும் பொதுப்பெயரிட்டுத் தனிப்புஸ்தகங்களாக அச்சிட்டு எல்லாருக்கும் உபயோகமாகும்படி பிரசுரித்துவரத் துவக்கியிருக்கிறோம்.

இத்தலைப்பெயரின்கீழ்ப் பிரசுரிக்கப்படும் புஸ்தகங்கள் யாவரும் விசேஷமாக விரும்பத்தக்கவைகளானது பற்றிச் செலவையும் சிரமத்தையும் கருதாது நல்லமாதிரியாகத் தளமான காகிதத்தில் அச்சிட்டு, நாணயமான உயர்ந்த கட்டடம் செய்து வெளியிட்டு வரத் தீர்மானித்திருக்கிறோம்.

தமிழ்ப் பாஷாபிவிர்த்திக்கு இடையூறாகவுள்ள குறைகளில், ஜனங்கள் சாதாரணமாக வாசிப்பதற்கினிமையான கிரந்தங்களில்லாக் குறையுடன், நல்லமாதிரியில் நாணயமாக அச்சிட்டுக் கண்ணுக்கு ரமணீயமான ரூபத்தில் புஸ்தகங்கள் வெளியிடப் படாமலிருப்பதும் ஒரு பெருங்குறையென்பது மனப்பூர்வமாய் நம் புத்திக்குப்பட்ட விஷயமாயிருப்பதால், அக்குறையை நிவர்த்திக்க நம்மாலான முயற்சி செய்துளோம்.

ஜனங்கள் ஏராளமாக இப்புஸ்தகங்களை வாங்கி வாசித்து ஆதரிப்பார்களானால், இன்னும் அநேக புஸ்தகங்கள் வெளியிடுவது சாத்தியமாகும்.

ஆகையால் இவ்வேற்பாட்டின் பிரயோஜனத்தை யுணர்ந்த விவேகிகள் யாவரும், இத்தலைப்பெயரின் கீழ் வெளியாகும் புஸ்தகங்களை எல்லாரும் வாங்கி வாசிக்கும்படி போதிப்பார்களென நம்புகிறோம்.

1896. C. V. S.




# காந்திமதி.

I

## அதிகாரம்—1.

சூரியன் கீழ்த்திசையில் உதயமாயினன். அவன் வரவைத் தெரிவிப்பதற்காகக் குயில்களும் கிளிகளும் தங்கள் தங்கள் ச்ரிங்காரமான வாய் திறந்து கூவிக்கொண்டிருந்தன. தென்றலும் மல்லிகை, முல்லே, இருவாக்ஷி, சண்பகம் முதலிய புட்பங்கள் விரிவதினல் வெளிப்படும் கந்தத்தைச் சுமந்து எங்கும் உலாவியது.

பகலவன் வரவர ஆகாயத்தில் மேனேக்கிச் செல்லவே விந்தய பர்வதத்தின் பள்ளத்தாக்கிலுள்ள தன்னந்தனியாக அமைக்கப்பட்ட ஒரு பர்ணகசாலே பனியினின்றும் உன்னதமாக வெளிப்பட்டது. இவ்வாசிரமத்தின் கூரை நாணலினல் வேயப்பட்டு நாலாபக்கமும் வைத்து வளர்க்கப்பட்டுவருகிற பூஞ்செடிகளின் கொடிகளினல் தழுவப்பட்டிருந்தது. இக்குடசம் வைக்கப்பட்டிருந்த சுத்தத்தைக் கவனிக்கும் பக்ஷத்தில் சச்சிதாநந்தஸ்வரூபியான சாம்பசிவனைத் தனியாய்ப் பணிந்து புகழ்வதற்கு உலகத்தைத் துறந்துவந்த ஓர்

மகரிஷியின் வாசஸ்தலமென்றே துணியற்பாலது. இம்மகரிஷியின் இல்லத்தின் வாசலினின்று நாலாபக்கமும்பார்த்தால் சித்திரக்குள்ளரைப்போல் சின்னஞ் சிறியனவாகத் தோன்றுகின்ற பெரிய பசிய மரங்களடர்ந்த உன்னதமான பர்வதங்கள் சூழ்ந்திருந்தன. கீழ்த்திசையை நோக்கிக் கட்டப்பட்டுள்ள இக்குடிசைக்குத் தென்புறத்தில் ஒரு அருவி காக்கையினும் கருத்த மேனியை யுடைய மணற் பூமியின்மேல், பக்கத்தினின்ற குன்றினின்றும் தப்பினேன் பிழைத்தேனென்று குதித்தோடியது.

இவ்விதமாக பர்வதத்தின் மத்தியில் நிர்மாணிக்கப்பட்ட இவ்வாசிரமத்தின் கூடத்தின் வடக்குச் சுவர்ப்பக்கமாய் ஒரு பெரியலிங்கமும், செம்பினுற்செய்த வோர் விக்கிரகமும் வைக்கப்பட்டிருந்தன. பக்கத்தில் தூபக்காலிலிருந்து வாசனைப்புகை கிளம்பி அக்கூடமுழுவதும் சூழ்ந்து மனேகரப்படுத்திற்று. ஒரு செப்புத் தாம்பாளத்தில் இரண்டு கதலியும் ஒரு தேங்காயும் ஒரு புளியங்கொட்டைப் பிரமாணமுள்ள சூடமும் வைக்கப்பட்டிருந்தது. தர்ப்பையினுல் வேயப்பட்டுள்ளதோர் தட்டில் பலவிதமான புஷ்பங்கள் நிறைந்திருந்தன.

இக்கூடத்தில் இப்பூஜை சாமான்களின் பக்கத்தில் யாரோ ஒரு பெரியவர் சப்பளங்கொட்டின காலும் இரண்டு முழந்தாள்களின் மேற்படிந்த கைகளும், மூடிய கண்களுமுடையராய் நிஷ்டையிலிருந்தனர். இவருக்குத் தெற்கே பத்தடி தூரத்தில் அக்கூடத்தின் முற்றத்தில் ஒரு வில்வமரம் வளர்க்கப்பட்டு வந்தது. அம்மரத்தின் பக்கத்தில் அதில் சார்ந்து ஒருவர் இவ்விருடியைப்போல் கால்களை மடக்கி உட்கார்ந்திருந்தார். ஆனால் கூப்பியுள்ள கைகளின் விரற்களிலமைந்தவடுக்களினாலும் இடுப்பில் கட்டிய கத்தியினாலும் மேலே தரித்துள்ள கவசத்தினாலும் இவர் உலகத்தைத்துறந்த இருடியல்ல, போர்க்களத்தில் புகழ் சம்பாதிக்க முயலும் யுத்தவீரனென்று துணியவேண்டியிருந்தது.

இவன் பார்வைக்கு மிக்க கம்பீரமான புருஷன் காளமேகம்போற் கருத்த புருவங்களுக்குக்கீழ் வாசஞ்செய்யும் கண்களினின்று, தைரியமும் காருண்ணியமும் பிரகாசித்தன. அவ்வீரன் முகத்தின் மத்தியில் அமைந்துள்ள நீண்டுவளைந்த நாசியினால் அதிதீவிரமாய் விஷயங்களையறிந்துகொள்ளும் சக்தியுள்ளவனாகத் தோன்றினன்.

உருண்டு திரண்டு வழுமுண்டுள்ள கலைக் கால்களைக்கொண்டு சரீரத்தின் மற்ற பாகங்களின் பலத்தையும் வீரத்தையும் ஊகித்துக் கொள்ளக்கூடியதாக விருந்தது. எல்லா அவயவங்களைக்காட்டிலும் நயனங்கள் இப்புருஷன் ஒரு நாள் பாராளும் கண்ணியத்தை யடைவானென விசதமாகப் பறைசாற்றின.

அக்கூடத்தில் இவ்விருவரையும் தவிர்த்து வேறொருவருமில்லை. இடை இடையே கூசிக்கும் பக்ஷிகளின் துவனியைத்தவிர வேறொரு சப்தமின்றி அவ்வாசிரமமுழுவதும் அமரிக்கையாயிருந்தது. ஆனல் திடீரென அவ்விருடி நிஷ்டையினின்றும் விழித்து பக்கத்திலிருந்த மணியை இடது கையால் பற்றியெடுத்து அடித்துக்கொண்டே வலது கரத்தால் ஒரு வில்வதளத்தை யெடுத்து தன் முன்னிருந்த சாம்பசிவாம்சம் ஆவாஹனம் செய்யப்பட்ட சாலிக்கிராமத்தின்மேல் அருச்சித்தார். அக்காலத்தில் வெகுகாலமாக எண்ணெயென்பது கண்டிராமல் ஒன்றுசேர்த்து தலையின் முன்னே முடியப்பட்டுள்ள குடுமியையுடைய ஒருவன் அவர் எதிரே வாய்புதைத்துக் கைகட்டி நின்றான். அவனைப் பார்க்குமள

வில் அம்மகரிஷியின் சிஷனைப்போல் தோன்றினன்.

இப்படி பக்தி விசுவாசத்துடன் எதிர் நின்றவனைப்பார்த்து இருஷி "போதாயனு, இராஜஸ்திரீகள் இன்னும் வரவில்லையா? தீபாராதனைக் காலமாய்விட்டதே" யென, அதற்குச் சீடன், மகாபயத்துடன் "இதோ வருகிறார்கள்" என்றுசொல்லி வாய் மூடுமுன்னமே மூன்று ஸ்திரீகள் இருஷியின் எதிரே தோன்றினர். அவர்களில் ஒருவர் தன் அரையிலுடுத்திய காஷாயப்புடைவையினலும், யாக்கையை அழகுபடுத்துவதற்குத் தன் பதிவிரதா தர்மத்தைத்தவிர வேறு ஆபரணமுடையவளா யிராமையினலும் அம்மகரிஷியின் பத்னியென்றே நன்கு விளங்கிற்று. ஆனல் மற்ற இருவரும் தங்கள் விசால நயனத்தினலும் சந்திரபிம்பம் வெட்கி மறையும்படியான காந்தியையுடைய முகமும தாமரைப் புட்பங்களையொத்த முன்னங்கைகளும், பாதங்களுந்தவிர மற்றெங்கும் கவர்ந்துள்ள பீதாம்பரத்தினலும் இராஜஸ்திரீகளென்று வாய்திறவாது தெரிவித்தனர். முகச்சாயலினல் அவ்விருவரும் தாயும் மகளுமெனத் தோன்றிற்று. தாய்க்கு சுமார் முப்பது வயதிருக்கும். மக

ளுக்குப் பதினான்குக்குள்ளாகவே மதிக்கலாம். இச்சிறுமியின் அழகை முழுதும் வர்ணிக்க சக்தியிலை. ஆனால் பிரம்மன் தான் சிருஷ்டித்தொழிலைக் கற்றவுடன் பரீக்ஷார்த்தமாகவும் கைதேறவேண்டியதற்காகவும் இரம்பை முதலிய தேவகன்னிகைகளைச் சிருஷ்டித்துப் பிறகு தன் சிருஷ்டித்தொழிலின் முழுவல்லமையை இவ்வுலகிலுள்ளவர்களுக்குக் காட்ட வேண்டுமென்றே இச்சிறுமியையும் சிருஷ்டித்தனன் என்கிற தேவரகசியம் மாத்திரம் நமக்குத் தெரியும்.

இவ்வளவு ரூபலாவண்ணியமமைந்த அங்கனையும் அவள் அன்னையையும் நோக்கி பகரிஷி "வாருங்கள், தீபாராதனைக்காலம் இது தான், தெரிசியுங்கள்" என்று சொல்லிக்கொண்டே தாம்பாளத்திலிருந்த கூடத்தை யெடுத்து சமீபத்தில் எரிந்துகொண்டிருந்த தீபத்தில் கொளுத்தி ஆராதனைசெய்தார். அப்பொழுது இராஜஸ்திரீகள் வாய்திறவாது கன்னத்தில் இருகரத்தாலடித்துக்கொண்டனர். ஆனால் வில்வமரத்தண்டை இருந்தவர் மாத்திரம் "ஹா ஹா" என்று சொல்லிக்கொண்டு கபோலத்தில் போட்டுக்கொண்டனர். இச்சப்தம் கேட்கவே இராஜஸ்திரீக

ளில் சிறுமி, இச்சப்தம் எங்கேயிருந்து வருகிற தென்று பார்ப்பதுபோல் திரும்பி வில்வமரத் தண்டையுள்ள புருஷனை நோக்கினள். தியா ராதனையில் கவனமுள்ளவர்போலிருந்த அவ் வீரனும் அப்பொற்றொடியை நோக்கினன். அத்தருணத்தில் இதொன்றுமறியாத இருடி, அம்மங்கையை விளித்து "இதோ இத்தாம் பாளத்திலிருக்கிற தீர்த்தத்தை நிர்மாலிகைப் புட்பங்களோடு எடுத்துக்கொண்டுபோய் வில் வமரத்தடியில் கொட்டிவிட்டுவா" எனச்செப் பினர். இவ்விராஜகன்னிகையும் ஆசிரியன் ஆக்ஞையை நிறைவேற்றுவதில் மிகவும் ஆசக் தியுடையவளாய் மிக்க சந்தோஷத்துடன் அவைகளை யெடுத்துக்கொண்டுபோய் வில்வ மரத்தடியில் கொட்டும்பொழுது (அகஸ்மாத் தாகவோ அல்லது வேணுமென்றோ அது நமக்குத்தெரியவராது) ஒரு புட்பம் அதன் பக்கத்தில் வீற்றிருந்த வீரன்பேரில் விழுந்தது. இவ்விஷயத்தை யறிந்த அத்தாமரை முகத்தி னள் இருடியின் உத்தரவு நிறைவேறினவு டனே தாம்பாளத்தை இருந்தவிடத்தில் வைத்து மிகவும் பக்தியுடன் அப்பெரிய வர்முன்னிற்க, அவர் இராஜஸ்திரீகளில் பெரியவளைப்பார்த்து "சுலோசனா,

நீ யாதொன்றுக்குமஞ்சவேண்டாம் இவ்விபூதியை யெடுத்துக்கொண்டுபோய் அரசன் சரீரத்தில் பூசினால், சுரம் நீங்கிவிடும். ஆதியில் பாண்டியநாட்டில் சமணவரசன் விபூதியினால் சுகமடையவில்லையா? நானும் வருவேன், பிரதோஷம் நான்குதினமிருப்பதால் கூடவில்லை" என்றுசொல்லி சிறுமியை நோக்கி "காந்திமதி, உன்புத்திக்கும், கல்விக்கும், அழகிற்கும் இசைந்தபடி ஒரு புருஷனை ஈசுவரகடாக்ஷத்தினால் கூடிய சீக்கிரத்திலடைவாய்; நம்முடைய ஆசிரமத்திலிருந்து மான் ஒன்றைப்பிடித்துக்கொண்டு போனாயே அதைச்சுகமாக வளர்த்துவா" என்றுரைத்தனர். காஷாயாம்பரதரியாயிருந்த அவ்விருடியின் பத்னி தன் கணவனை நோக்கி "உதித்து பத்துநாழிகையாய்விட்டதால் போஜனத்திற்கு அகத்திற்கு அழைத்துக்கொண்டுபோகிறேன்" என, அதற்கு அவர் "அப்படியே செய், இதோ நானும் வருகிறேன்" என்று பகர்ந்து வீரனை ஆக்வயித்து "வீரசேனா! இங்கேதானேயிரு, இராஜஸ்திரீகளை அழைத்துக்கொண்டுபோய் விட்டுவிட்டுவருகிறேன், நாமிருவரும் போஜனத்திற்குப்போகலாம்" என்று இராஜஸ்திரீகளோடு தானும் புறப்பட்டார்.

## அதிகாரம்—2.

ஆச்ரமமுழுவதும் நிசப்தத்திலாழ்ந்திருந்தது. அவ்விடத்தில் வீரசேனன் மாத்திரமிருந்தனன். அவனும் ஆழ்ந்தசிந்தையிலமிழ்ந்தவனாயினன். ஆச்ரமவாயிலில் மேய்ந்துகொண்டிருந்த மான்கள் துள்ளிக்குதிக்கிற சப்தந் தவிர வேறு யாதொரு சப்தமுங்கேட்கவில்லை.

இருஷியும் இருஷிபத்நியும் முன்னே வழிகாட்ட பின்னே சுலோசனையும் கடைசியாக காந்திமதியும் ஆச்ரமத்தைவிட்டு போஜனத்திற்காக வெளியேபோயினரென்று சொன்னோமல்லவா? அப்போது காந்திமதி அக்கூடத்தைவிட்டு அகலுந் தருணத்தில் சங்கம் போன்ற தன் கழுத்தைத்திருப்பி வீரனைப் பார்த்ததுபோல் தோன்றிற்று. அத்தருணம் முதல் வீரனும் வாய்பேசாது யோசனையில் சிக்கினவனாயினன்.

அரைநாழிகை கழிந்தது. வீரன் பேசலுற்றான்:—

" அகஸ்மாத்தாயிருக்கக்கூடுமோ—புஷ்பம் விழுந்தது—இச்செந்தாமரைப்புஷ்பம்? ஒருக்காலுமிராது. அதை யெடுத்து நழுவவிட்ட விரற்களைப்பார்த்தேன். அவள் தாமரை

முகம் மலர்ந்திருந்ததே; புன்னகையும் அதரங்களினின்று ஜனித்ததே; கண்களின் கறுப்பு விழிகளும் நான் எங்கே எங்கே யென்று சுழன்று பார்த்தனவே; அகஸ்மாத்தாயிருக்கக் கூடுமோ? ஆச்ரமத்தை விட்டு நீங்கும்போது திரும்பிப்பார்த்ததும் அகஸ்மாத்தா? நயனங்களின் இமைகள் வாவாவென அழைத்தன போலிருந்தனவே; ஆஹா, செவ்வானத்தின் வழியாய் ஊடுருவிச்சென்று வருகிற மாலை வாய்ச் சூரியன் கிரணங்களைப்போல் செம்பட்டினின்றும் தனித்து வெளிப்பட்ட விரல்களினின்றும் அப்பாதின சரீரகாந்தியையும் இலக்ஷணத்தையும் காணுவேன். என்ன சௌந்தரியம்! என்ன ரூபம்! நமக்குக் கிட்டாத பொருளோ! இதுவரையிலும் என்னை அவள் நயனத்தினால் சிற்சில சமயங்களில் நோக்கியிருக்கின்றனளே யொழிய வாய்திறந்து பேசியவளல்லள். புஷ்பம் விழுந்ததும் அகஸ்மாத்தா? காந்திமதி, காந்திமதி, காந்திமதி, ருசிகரமான நாமம். ஓ செந்தாமரைப்பூ, என்ன பாக்கியம் செய்தாய்! உன்னிலும் அதிக ரூபமுள்ள கைகளின் ஸ்பரிசத்தையடைய என்ன தபஸ் செய்தாய்! காந்திமதி உன்னைத் தூதனுப்பினளோ? உன்னைக் காந்திமதியைப் பார்ப்பது

போல் சதாபார்ப்பேன், 'என் கவசத்திலிரு.' (என்று சொல்லி அப்புட்பத்தைத் தன் மார் போடணைத்து முத்தமிட்டு ஹிருதயத்தின் சமீபத்தில் கவசத்தினோர் பாகத்திலிருத்தி னன்.)

"காந்திபதீ, திருவையொப்பாய்! கொம்பே! தீஞ்சொல்லாய்! பாவாய்! தொடியே! தேனே! அமிர்தே! இனியவுயிரே! சீரடியொல்கி சிலம் பொலியப் பூநிலத் துலவும்பொழுதும் அந்நிலத் திலன்றி என் மனமாகிய மலர்மேலேநடப்பாய்.

"நினது திங்கள் மதித்த முகத்திலுள்ளன வாளோ! கயலோ! கூற்றோ! வேலோ! போதோ! வண்டிருப்பினும் இடைமுறியும் இயல்பினளே! நினை ஏத்துவேன்! நான் கடல் போல் மறுகி நையும்படி மறைந்து நீங்குதல் நினக்குக் குணமாமோ!"—

எனப் பலவிதமாக வருந்தும்போது "சங் காா சம்போ" வெனச் சத்தம் கேட்க இருஷி வருகிறாரெனவறிந்த வீரன் முன்போல் வாய் பேசாதிருந்தனன்.

---

## II.

### அதிகாரம்—3.

நம் சரித்திரத்தின் காலம் கி. பி. பதினாறும் நூற்றாண்டு. அப்பொழுது இந்துஸ்தானத்தை அரசாண்டுவந்த ஆக்பர் மகாசக்ரவர்த்தி சகல தேசத்தரசர்களையும் தன் வசப்படுத்தி மிகப் பராக்கிரமத்துடன் அரசாண்டுவந்த விஜய நகரத்தின் மஹாராஜனாகிய கிருஷ்ணதேவராயனைத் தோற்கடித்து அவன் மகள் காந்திமதியைத் தான் விவாகம் செய்துகொள்ளவேண்டுமென்கிற எண்ணத்துடன் சகல பரிவாரங்களோடும் படையெடுத்துவந்து விஜயநகரத்தின் கோட்டைவாயிலின் முன்பாக கூடாரமடித்து பத்துநாள் அகோரமான யுத்தம் செய்தனன். இவ்யுத்தத்தில் ஆக்பர் சேனாவீரர்களிலனேகர் மடிந்தபொழுதிலும் துருக்க சக்ரவர்த்தியின் ஊக்கத்தினாலும் தைரியத்தினாலும் சண்டை முடிவிற்கு வராமல் நீடித்துக்கொண்டுவந்தது.

இவ்விதமாக சண்டைசெய்து கிருஷ்ண தேவன் இராஜ்ஜியத்தை அபகரித்துக்கொள்ள வேண்டுமென்பது ஆக்பரின் கருத்தல்ல. ஆக்பர் அரசாண்டுவந்த காலத்தில், அவன் தகப்பன் ஹுமாயூன் நாளிலேயே சேனையைச்

சேர்ந்து சேவகம் செய்துவந்த ஆப்கன் ஜாதியார் அடக்கக்கூடாத வேட்டைநாய்களைப் போல் இரத்தவெறிகொண்டு சமயம்வாய்க்குமானால் ஹுமாயூனைத் தள்ளிவிட்டதைப் போல சக்ரவர்த்தியையும் சிம்மாசனத்தினின்றும் நீக்கித் தங்கள் இனத்தாருக்குப் பட்டங்கட்டவேண்டுமென்கிற துர் எண்ணங் கொண்டவர்களாயிருந்தனர். மொகலாயர்களிலநேகர்கூட ஆக்பரைப்புகழவில்லை. ஏனெனில் ஆக்பர் எம்மதத்திலும் சார்புற்றவனாய் ஒரு மதத்திலும் நிரந்தரப்பற்றில்லாதவனாயிருந்தனன். மகம்மதின் மதத்தை நிலைநாட்டவேண்டுமென்று எண்ணங்கொண்ட மகம்மதியப் பிரபுக்கள் யாவரும் ஆக்பரைத் தங்கள் மனதிலேயே வெறுக்கலாயினர். இவ்வித வேட்டைநாய்களையும் காட்டுப்புலிகளையும் சுபாவத்தில் திருப்திசெய்வது அசாத்தியமென வறிந்த துருக்க சக்ரவர்த்தி, சிங்கம்போல, சௌரியமும், கண்ணியமும், நன்றியறிதலும், சத்தியம் பிறழாமையுமுள்ள இராஜபுத்திரர்களை வென்று அவர்களில் அநேகருக்குத் தன் சைன்னியத்தில் தளகர்த்தர் உத்தியோகம் கொடுத்தும் தானும் இராஜபுத்திரர்களுடைய குமாரத்திகளை விவாகஞ்செய்துகொண்டும்

பரஸ்பர அந்நியோந்நியத்தை உண்டுபண்ணி மொகலாயர்களையும் ஆப்கன் ஜாதியாரையும் அவர்கள் துர் எண்ணங்கள் நிறைவேறவிடாது தடுப்பதே இராஜ்யத்திற்குப் பலம் எனத் தீர்மானஞ் செய்தனன். இவ்வெண்ணத்துடன் தான் இப்பொழுது விஜயநகரத்தை ஜெயிக்க முயன்றதும்.

தன் சைன்னியங்கள் யுத்தத்தில் கலைந்து போகவே ஆக்ராவுக்குச் செய்தியனுப்பி இன்னம் பதினாயிரம் காலாட்படை தருவித்தனன். அத்தருணத்தில் திடீரென ஹிந்து சக்ரவர்த்திக்கு சுரங்கண்டு அதிகரிக்க, கிருஷ்ணதேவன் சிற்றரசர்கள் சக்ரவர்த்தி சுரத்தினின்றும் சொஸ்தப்பட்டு வருமளவும் சண்டை நிறுத்தி வைக்கவேண்டுமென்கிற எண்ணத்துடன் மூன்று திங்களுக்குச் சமாதானம் செய்தனர். ஆக்பரும் தற்காலத்துக்குச் சமாதானம் செய்வதில் மனமுள்ளவனாயிருந்தனன். ஏனெனில் தன் சைன்னியங்கள் மடிந்துபோனதோடுகூட தன் சேனாதிபதிகளில் சிலரும் தக்ஷிண சக்ரவர்த்தியைப் பிடித்துள்ள சுரங்கண்டு மிக அவதிப்பட்டார்கள். அப்படிச் சமாதானம் செய்ய மனமுள்ளவனாயிருந்தபொழுதிலும் ஆக்பர் தன் சைன்னியங்களை வடக்கே யனுப்ப

இஷ்டமில்லாமல் விஜயநகரத்திலேயே நிறுத்தி வைத்தான்.

இவ்விதமாகச் சமாதானம் செய்யப்பட்டதென்ற சேதிகேட்கும்போது, கிருஷ்ணராயன் சுரத்திஞல் அவஸ்தைமேலிட்டுப் படுக்கையில் சதாபுரண்டு ஆராட்டப்பட்டுக்கொண்டிருந்தனன். சுபாவமாகவே ஸ்படிகம்போல் பிரகாசிக்கின்ற இரண்டு நயனங்களும் சுரவேகத்திஞலும் கோபத்திஞலும் முன்னரிலும் பதின்மடங்கு அதிகமாய், வாரி யொதுக்கப்படாது முன்வந்து புரண்டுகிடக்கும் மயிர்க்கால்களினிடையே கிரணங்கள் வீசி ஜ்வலித்தன. ஒழுங்கின்றிப் பரந்திருக்கும நீண்ட அடர்ந்த மீசைகள் சுரத்திஞல் காய்ந்துவரண்டு வெடிப்புக்கண்டிருக்கும் மேலுதடைக் கவர்ந்திருந்தன. யாதொன்றிஞலும் மூடப்படாதிருந்த இருபுயங்களும் ஒருவாறு இளைத்திருந்தபொழுதிலும் அபரிமிதமான பலத்தை சூசிப்பித்தன.

சுரம்வாய்ப்பட்ட இச்சக்ரவர்த்தியின் சமீபத்தில் நின்றுகொண்டிருந்த வீரன், வயதில் சுமார் ஐம்பது இருக்கலாம்; ஆஞலும், முப்பது வயதுதாஞுடைய கிருஷ்ணராயஞுக்குச் சமபலமுடையவனெனத் தோன்றினன். அவன் உருண்டமுகத்தின் மத்தியில் செங்குத்தாய்

வளர்ந்து கெம்பீரத்தோடு பிரகாசிக்கும் நாசிகள் அமைச்சன் புத்தி தீட்சண்ணியத்தைக் காட்டின. அவன் கண்களின் ஊக்கத்திஞல் குடிகளையும் சத்துருக்களையும வாய்பேசாது கண்ணேக்கிஞலேயே அடக்கி யாளத்தக்க வீரியமுடையவனெனத் தெரியவந்தது.

இவ்விருவரும் இருந்த மண்டபம் பாதி வைத்தியசாலையைப்போலவும் பாதி வீரர்களின் இருப்பிடம்போலவும் தோன்றிற்று. அரசன் தலைமாட்டில் ஒரு 'பீரோ'விஞள் பலவிதமான ரசாக்களும், மாத்திரைக் கற்களும் இருந்தன. அதுவும் தவிர அம்மண்டபம் முழுவதும் ஒருவிதமான சுகந்த மருந்து வாசனையடித்துக்கொண்டிருந்தது. ஏனெனில் துற்காற்றுகள் அணுகாவண்ணம் வைத்தியர்கள் அவ்வறைக்கு அவ்விதம் வாசனை கட்டியிருந்தனர். அரசன் வலது பக்கத்தில் ஒரு பருத்த பட்டாக்கத்தி உறையின் உள் நின்று, புத்தினின்று பாம்பு சீறுவதுபோல், பிரகாசித்தது. இடது பக்கத்துச் சுவரில் கேடயமும் பல ஈட்டிகளும் தொங்கிக்கொண்டிருந்தன. சக்ரவர்த்தியின் கால்மாட்டில் கட்டிலின் பேரிலேயே ஒரு கதை வைக்கப்பட்டிருந்தது. அதுதான் கிருஷ்ணராயன் உயிர் ஆயுதம்: அதை விட்டு தூக்கத்திலேயும் பிரிவதில்லை.

இவ்வறையின் வெளிப்பக்கத்தில் இரண்டு மூன்று அரண்மனை உத்தியோகஸ்தர்கள் அரசனுக்குச் சுரம் அதிகரிப்பதைக்கண்டு வருத்தப்பட்டு மனம் நொந்துகொண்டு நின்றனர். இவ்வியாகூலம் இவர்களை மட்டுமல்ல, விஜயநகரத்திலுள்ள குடிகள் யாவர்க்கும் பரவிப் பிடித்தது.

"கௌதமர் இன்னம் வரவில்லையா? இம்மா" என அரசன் வெகுநேரம் பேசாமலிருந்து திடீரெனவினவ,

மந்திரி.—"அவரை இட்டுக்கொண்டு வருவதற்காகத்தான் நம்மரண்மனைப் பொற்றொடிகள் போயிருக்கின்றார்கள்."

அரசன்.—ஆஹா! விந்தய பர்வதத்திற்கா? அது ஆக்பர் இராஜ்ஜியமே, துருக்கராயின் வாய்ப்பட்டால்?

மந்திரி.—தாங்கள் பயப்படவேண்டாம். ஆக்பர் பிரயாணம் செய்யும்படி உத்தரவு கொடுத்திருக்கின்றனன். அதினூற்றான்.

அரசன்.—அப்படியா! பேஷ், துருக்கனானாலும் வீரன்; சத்தியவந்தன். யுத்தகாலத்திலும் உத்தரவு கொடுத்தனனோ?

மந்திரி.—அரச, மூன்று மாதத்திற்குச் சமாதானம் செய்திருக்கின்றார்களே?

அரசன்.—"சமாதானம்! தெரியுமே! நம் வீரர்கள் மந்திரிகளுக்குச் சமானம். வீரமில்லாதவர்கள்; சமாதானமேன்? ஆஹா! இக்கதையைச் சுழட்டி ஆக்பர் தன்னைடப்பிளக்கும் நாள் எந்நாளோ?" என்று சொல்லிக்கொண்டே பக்கத்தில் கிடந்த கதையை எடுத்துத் தன் தலைக்குமேல் சுழற்ற,

மந்திரி.—"சக்ரவர்த்தி, என்ன, பைத்தியமோ?" என்று சொல்லி யரசனைப் படுக்கையில் விழுத்தினன். திம்மராயன், அரசனைப் பாலியத்திலேயே யவன் தகப்பன் விட்டுவிட்டு இறந்துபோக, தன் மகனைப்போல் பாவித்து வளர்த்து வந்ததினால், அரசன்மேல் மிகுந்த விசுவாசமுள்ளவன். மகாராஜனும் திம்மனைப் பிதாவைப்போல் மதித்து அவனிடத்தில் பயபக்தியுடையவனாயிருந்தனன். இப்படிக் கோபாவேசத்தினால் கதையையெடுத்துச் சுழற்றித் தன் சுரத்தை யிராஜன் அதிகரித்துக்கொள்வான் என்ற பயம் ஜாஸ்தி திம்மனுக்கு.

அரசன்.—"பைத்தியமா? எனக்குத்தான் பைத்தியம், அவர்களுக்கும் பைத்தியமோ? அம்மைசூர் ராஜனுக்கு, அம்மதுரையான், நாய் பிடிக்கிக்கொளத்தான், இவர்களுக்கென்ன? பைத்தியமில்லை, பெண்தன்மை. நான் அசௌக்கியமா யிருந்தாலென்ன? ஏன் சண்டை செய்யக்கூடாது! கிருஷ்ணராயன் சாவு பாதக்கண்டத்தை மிலேச்சனுக்குத் தத்தம்செய்து விடுவதோ? அவர்கள் ஏன் ஒன்று சேர்ந்து சேனுதிபதி யொருவனைத் தெரிந்தெடுத்துக்கொண்டு சண்டைசெய்யக்கூடாது?"

மந்திரி.—மகராஜ், அப்படியேதான் நடக்கும் போலிருக்கிறது,—தங்களுக்கிஷ்ட மிருந்தால்.

அரசன்.—"ஆஹா, அப்படியா? எனக்குச் சொல்லாமல் எல்லா விஷயங்களும் நடக்கின்றனபோல் தோன்றுகின்றன. சமாதானமானதும், அவர்கள் சேனுதிபதி தெரிந்து எடுக்கப்போவதும், ஒரு விஷயமும் எனக்குச் சொல்லவில்லையே! நல்லதிருக்கட்டும். யார் தளகர்த்தன் ஆகலாம் திம்மா?" மகாராஜன் இம்மாற்றங்

களைப் பகன்றபொழுது, கண்கள் சிவந்தன, மீசை படபடத்தது; கைகள் பக்கத்திலுள்ள கதையை நாடின.

மந்திரி.—சௌரியத்தையும், கண்ணியத்தையும் பார்த்தால், விசுவநாதநாயக்கன் ஆகலாம்.

அரசன்.—மதுரையாறு? பாண்டியகுலத்து மூளைகளாகிய இளவரசர்களின் வேர்பிடுங்கிய கொடரிக்காம்பா? யோக்கியன்தான்! ஆக்பர் சௌந்தரியமான பெண்கள் தருகிறதாகச்சொன்னால் மகம்மதியனாய்விடுவான். அவன்தான் யோக்கியன். இன்னம்?

மந்திரி.—அல்லது இராமச்சந்திரவர்மன், வரலாம்.

அரசன்.—வானராசாரம் நிறைந்த கேரளத்தரசன் சேனாதிபதியா? நாலுபொன்னை சாராயம் வாங்கிக்கொடுக்கிறதுதானே? சேனாதிபதித்துவத்தைக்காட்டிலும் அதை அதிகமாக விரும்புவான்.

மந்திரி.—என் மைசூர் ராஜன் ஆகலாம்.

அரசன்.—ஜயசிங்கனா? அவன் திருடனே. மகா கபடன். நான் பேசும்பொழுதெல்

லாம் உதட்டைமடித்துக்கொள்வான். இருந்தாலும் வீரன்.

மந்திரி.—கடைசியாகக் கர்னாடகதேசத்தரசன் தான்.

அரசன்.—"ஒருவேளையாகலாம். ஆனால் எனக்கு ஒருசந்தேகம். அவன் தன் சரீரத்தைத் தானே தூக்கமுடியுமோ?"

என்று இப்படிப் பேசிக்கொண்டிருக்கும் போது, வெளியேநின்ற உத்தியோகஸ்தர்களில் ஒருவர் வந்து, சக்ரவர்த்திக்கு வந்தனம்செய்து, திம்மராயனை நோக்கி, "ஐயா, உம்மை யுடனே பார்க்கவேண்டுமென்று யாரோ ஒருவர் சொல்லுகிறார். அவர் நிற்கின்றனர்." எனத் திம்மராயன் அரசனிடத்தில் உத்தரவு பெறாமலும் வாயைத்திறவாமலும் தத்க்ஷணமே வெளியேபுறப்பட்டுப் போயினன்.

---

## அதிகாரம்--4.

உலகத்திலுள்ள சீனா, ஜப்பான், பர்மா, முதலிய தேசங்களைக்காட்டிலும், நீர்வளம், நிலவளம், மலைவளம் மிகுந்த, பூமாதேவியின் திருநெற்றியாகிய பரதக்கண்டத்திற்குத்

திலகமாய் விளங்கும் தட்சிணதேசம், ஸ்ரீமத் சங்கரர், மத்வர், இராமாநுஜர், முதலிய வைதிகாசாரியர்களும், அப்பர், சுந்தரர், மாணிக்கர், ஞானசம்பந்தர் முதலிய ஆகமாசாரியர்களும் திருவவதாரம் செய்தருளி பூமியினின்றும் பரச்சமயவேர்பிடுங்கி வைதிகமதத்தை யருளிய திவ்யபூமியாயுள்ளது.

அப்பூபாகத்தை யரசாண்டுவந்த நிருபனாகிய கிருஷ்ணராயன், அனாதிமுக்தபதியாகிய பரமசிவனையன்றி அறிவினர்களாலே பதிகளொத்தித்துணரப்பட்ட பசுக்களைத் தெய்வமென்று கருதாத மெய்யறிவினையும், உள்மாசை நீக்கும் பெருமையையுடையதென்று வேதத்தின் உட்பொருளாகிய உபநிடதங்களினாலே துணிந்து அறுதியிடப்பட்ட அருமருந்தாகிய விபூதிமேல்வைத்த பொன்னைப் பரிபாலிக்குந் தன்மையையும் உடையவனாகிக் காருண்ணியமே மனமுவந்து குடிகொண்டவனாயுள்ளவன்.

இத்தகைய காருண்ணியமும் வீரமும் தெய்வபக்தியுமுடைய கிருஷ்ணராயன், புண்ணிய பூமியாகிய தட்சிணத்தை மிலேச்சர்கள் படையெடுத்து வந்தார்கள் எனக் கேள்வியுற்றவுடனே, தனக்குக் கப்பம் கட்டிவரும் சேர, பாண

டிய, மைசூர், கேரள, கர்னாடக, இராஜர்க ளுக்கு நிரூபம் எழுதி, அவரவர்கள் தங்கள் தங்கள் சைன்னியத்துடன் விஜயநகரம் வந்து சேர்ந்து சக்ரவர்த்தியுடன் கூடி துருக்கனை வேதபூமியினின்றும் துரத்துவதற்கு யத்தனம் பண்ணவேண்டுமென்று கடுமையான உத்தரவு பிறப்பித்தனன். அக்கட்டளைக்கு இயைந்த வாறே சிற்றரசர்கள் யாவரும் தங்கள் தங்கள் படையுடன் விஜயநகரம் வந்துசேர்ந்து துருக் கனுக்கு விரோதமாக கிருஷ்ணதேவன் துவ ஜத்தின் கீழ் நின்று வீரயுத்தம் செய்தார்கள்.

ஆனால் பூமகள் நெற்றியிலுள்ள திலகத்தின் சிறந்த வாசனையைப்போல் எங்கும் தன் செல் வச்சிறப்பு வியாபிக்கப்பெற்ற சோழமண்டல நாட்டரசன் மாத்திரம் சக்ரவர்த்தியாகிய கிருஷ்ணதேவனுக்குக் கப்பம் கட்டினவன் அல்லன். பலமுறை படையெடுத்து வந்து ஜயிக்க முயன்றும், சோழதேசம் அவன் கைக் குள்ளாகவில்லை.

அத்தகைய வலிமை சோழநாட்டிற்கு உண் டானது அதின் தெய்வநதியாகிய காவிரியாற் றால்தான். இளங்கோவடிகள் சொல்லியவாறு,

"கரியவன் புகையினும் புகைக்கோடி தோன்றினும்
விரிகதிர் வெள்ளித்தென்புலம் படரினும்

சால்பொருடிப்பிற் கருங்குரலெற்றொடு
குன்முறிக்கொன்றூப் பெயல்வளஞ் சுரப்பக்
குடமலைப்பிறந்த கொழும்பஃறாரமொடு
கடல்வளனெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப்புதுநீ ர்''

ஆகிய பொன்னெடுங்குன்றின்வீழ் அருவி,

விலங்கிவில்லுமிழ் வெங்கதிர் மணிபாவைரன்றி [தை
குலவு வெண்டிரைக் குரைகடலுடுத்தவிரிபார்மடந்
யலர்முலைத்தலைத் துயல் வருமாரமொத்துளது.

என்று சொல்லும்படியாக சகலவளப்பத்தையும் தரக்கூடிய நதி. அதனுற்றன் செல்வச் செருக்கு அதிகரிக்கவே பலமும் வீரமும்புத்தி நுட்பமும் சோழநாட் டரசர்களுக்குச் சுபாவத்திலே உண்டாயது.

"அக்பர் விஜயநகரத்தைத்தானே படையெடுத்துவந்து இருக்கிறான். நமக்கென்ன நாம் ஏன் நம் சத்துருவாகிய கிருஷ்ணராயனுக்கு சகாயம் பண்ணவேண்டும்" என்கிற சிந்தை சோழதேசத்தரசனுக்குக் கிடையவே கிடையாது. கிருஷ்ணராயன் தனக்கு துருக்கன் படையெழுச்சியைப்பற்றித் தெரிவித்துத் தன் ஒத்தாசையை வேண்டும்பட்சத்தில் தன்னுலியன்றமட்டும் உதவிபுரிவதாகவே எண்ணியிருந்தனன். ஆனுலும் கிருஷ்ணராயன் சோழ

னுக்குக் கடிதம் எழுதவும் இல்லை. ஆள் அனுப்பவும் இல்லை. என்றாலும் சோழதேசத்தில், சைன்னியங்களை நடாத்தும் விஷயத்தில் மிகப் பிரபலமான கீர்த்திபெற்ற நம் வீரசேனன், தன் நிருபனாகிய சோழனிடத்தினின்றும் உத்தரவு பெறுமலே மிலேச்சர்களைத் தக்ஷிணத்தினின்றும் துரத்தவேண்டுமென்று எண்ணங்கொண்டு, ஒரு ஆயிரம் வீரர்களுக்கு அதிபதியாய் விஜயநகரத்தை வந்து சேர்ந்தனன்.

வீரசேனன் விஜயநகரத்தில் துருக்கர்பேரில் செய்த பலயுத்தங்களில் ஜயத்தையேயடைந்ததுமன்றி சைன்னியம் நடாத்துவதில் தனக்குள்ள சாமர்த்தியத்தை விசதமாசக் காட்டினதினுல், கிருஷ்ணதேவன் அவனைத் தன் சைன்னியங்களுக்கும் அதிபதியாக நியமித்தனன்.

இதையெல்லாம் பார்த்த திம்மராயன் சோழதேசத்தவர்களை முன்னரிலும் பதின்மடங்கதிகமாக வெறுக்க வாரம்பித்தனன். காவிரித்தண்ணீர் குடித்தவர்களை நம்பலாகாதென்றும், அவர்கள் கிருஷ்ணராயன் கைக்கத்திக்கு அஞ்சா வேட்டைநாய்களென்றும், அவர்களரசன் செருக்குற்றவேடுவன் என்றும் பலமுறை

திம்மராயர் சொமூர்களைவைததோடுகூட, வீர சேனனை சக்ரவர்த்திப்படைகட்கு சேனாதி பதியாய் நியமித்தலாலுண்டாகக்கூடிய இடை யூறுகளைப்பற்றியும் தீங்குகளைப்பற்றியும் கிருஷ்ணராயனுக்குப் பலமுறை போதித்த னன். ஆனாலும், சக்கரவர்த்தி திம்மராயனுக்கு கொஞ்சம்கூட செவிகொடாது, சௌரியத்தை மெச்சா வீரன் வீரனல்லவெனப்பகர்ந்து முற் கூறியவாறு சைன்னியாதிகாரத்தை வீரசேன னுக்கே கொடுத்தனன். அக்காலந்தொட்டு அமைச்சன் சேனாதிபதியைக் கண்டபொழு தெல்லாம் உதட்டைக்கடிப்பதும் தனக் குள்ளே வைவதுமாயிருப்பான். பிரதானிக் கும் வீரசேனனுக்குமுள்ள பரஸ்பர அந்நி யோந்நியம் இப்படியிருக்க, கூடாரத்தைவிட்டு வெளியேவந்தபொழுது திம்மராயர் தன் முன்னே வீரசேனனைப்பார்த்தனன் என்று சொல்லவே இச்சரித்திரம் வாசிப்போர் அமைச்சன் முகக்குறிகளையும் மனத்தோற்றங் களையும் எளிதில் ஊகித்துக்கொள்ளலாம். திம் மன் முகத்தில் உதித்த பொறாமையின் குறி கள் யாவையும் வீரசேனன் நன்றாய் அறிந்த வன்; ஆனாலும் தான் வந்த காரியம் முடிய வேண்டுமென்கிற எண்ணத்துடன் அமைச்ச

னுக்கு வந்தனம்செய்து தான் கொஞ்சம் பேச வேண்டியிருக்கிறதென்று பகர்ந்தனன்.

தீம்மன்.—அப்படியா, நல்லது. சீக்கிரம்சொல்லும். சக்ரவர்த்தி அசௌக்கியமாயிருக்கிறார். நான் போகவேண்டும்.

வீரசேனன்.—நானும் சக்ரவர்த்தி விஷயமாய்த்தான் வந்திருக்கின்றேன். இப்பொழுது கிருஷ்ணராயரைப் பார்க்கலாமோ?

தீம்.—முடியாது. சத்திரத்திற்குள் நுழைவதுபோல் நினைத்தபொழுதெல்லாம் அரசன் சமுகத்திற்பிரவேசிக்கலாகாதென்று தெரியாதோ?

வீரன்.—உம்முடைய ஸ்வபாவம் புதிதல்ல. நான் வந்தவிஷயம் இதுதான்: சோழ தேசத்தினின்று என்னுடன் கூடவந்த என்னருமைத்தோழர்களில் ஒருவனுக்கு அதிக கடூரமான சுரங்கண்டு கிருஷ்ண தேவரைப்போல் மிகுந்த அவஸ்தைப் பட்ட சங்கதி ஆக்பர் கேள்வியுற்று தனக்கு வைத்தியம்செய்யும் ஒரு துருக்கனைச் சில அத்தாட்சிப்பத்திரங்களோடு என்னிடத்தில் அனுப்பினன். அத்து

ருக்க வைத்தியன் சுரத்தை அதிசீக்கிரத்தில் சொஸ்தப் படுத்தினதோடு கூட கிருஷ்ணதேவருக்கும் வைத்தியம் பார்ப்பதாக ஒப்புக்கொண்டனன். அதுவும் தவிர அவனைக் கிருஷ்ணதேவரை நேரில் போய்ப்பார்க்கும்படி அக்பர் உத்தரவு பண்ணினதாகவும் சொல்லுகின்றனன்.

தீர்.—துருக்கவைத்தியனா? மருந்துகொடுக்கின்றானோ? அல்லது விஷங்கொடுக்கின்றானோ?

வீரன்.—பிரபு, நாம் பயப்படவேண்டாம். அவன் உயிரல்லவா பிணை.

திம்.—நன்றாய்ப்பேசினீர். கிருஷ்ணதேவன் உயிருக்கு இவன் மொட்டைத்தலையா பிணை? வெகுயோக்கியம்!

வீரசே.—அக்பர் சத்தியம் தவறாதவன் என்பது தங்களுக்குத் தெரிந்தவிஷயமே. அச்சக்கரவர்த்தியினிடத்தினின்றும் இவ்வைத்தியன் சிபார்சு கடிதம் வாங்கிவந்திருக்கிறான். இன்னம் என்னவேண்டியது நமக்கு.

திம்.—நல்லது. இவ்விஷயத்தை ஆலோசித்துத்தான் செய்யவேண்டும். நீர் போய்

விட்டுவாரும். நான் எல்லாவற்றையும் அரசனுக்குத் தெரிவித்துப் பதில் சொல்லுகிறேன்.

இப்பதிலைக்கேட்டமாத்திரத்தில் "சரிவருகிறேன்" எனச்சொல்லி யுத்தரவுபெற்றுக் கொண்டு ஷீரசேனன் தன்னிருப்பிடம் போயினன்.

---

## அதிகாரம்—5.

அர.—நீ சொல்லுவது நிரம்ப ஆச்சரியமாயிருக்கின்றது. சோழனு துருக்கனைப்பற்றிப் பேசினது?

திம்.—ஆம், பிரபோ.

அர.—இச்சோழன் மகா சௌரியவான், யோக்கியன்; அல்லவா? திம்மா.

திம்.—அது தங்களுக்கல்லவா தெரியும்.

அர.—வதந்தி எப்படி என்றல்லவா கேட்கின்றேன்?

திம்.—(வெகுநேரம் மௌனமாயிருந்து) அப்படித்தான் சொல்லிக்கொள்ளுகிறுர்கள்.

அர.—எப்படி?

திம்.—வீரனும், யோக்கியனும்.

அர.—அதற்குக்கொஞ்சங்கூடச்சந்தேகமில்லை. அவனை நான் தளகர்த்தனாக நேமித்த நாட்கொண்டு படைகளெல்லாவும் திருப்தியடைந்து அவனையே மெச்சுகின்றன. அவன் ஒரு நாய் வைத்திருக்கிறான். அது மிகுந்த புத்திநுட்பமுள்ளது. அதை விட்டு அவன் ஒரு நாளும் பிரிவதில்லை. சோழதேசத்து ஜந்துக்களே மகா புத்திசாலிகள் போலும். அந்நாய் சௌக்கியமாயிருக்கிறதா?

தீம்.—(உதட்டைக்கடித்துக்கொண்டு) இராஜ இராஜ, நேற்றயதினங்கூடப்பார்த்தேன், அது தன் எஜமானனோடு கூட வந்திருந்தது. வீரசேனன் போகின்ற இடமெல்லாம போகின்றது. சோழன் கௌதமர் ஆச்ரமத்திற்குப் போனபோது கூடத் தானும் போகவேண்டுமென்று பிடிவாதம் செய்ததாம். வீரசேனன்தான் வழியின் சுற்றை யோசித்து இங்கேயே விட்டுவிட்டுப் போயினனாம்.

அர.—ஆசிரமத்திற்குப் போனானா? அங்கே இராஜஸ்திரீகள் போயிருக்கின்றார்களே? நல்லதிருக்கட்டும். ஆசிரமத்திலா இத்துருக்க வைத்தியனைப் பார்த்தான்?

வீரசேனன் ஆசிரமத்திற்குப் போனானென்று சொல்லவே அரசன் கோபங்கொண்டு பதறிப்பேசினதின் கருத்தை யறியமுடியாமல்,

திம்.—மகாராஜ். அங்கேயில்லை. வீரசேனன் ஸ்நேகிதர்களில் ஒருவனுக்கு சுரம்காண அதை சுவஸ்தப்படுத்த ஆக்பர் தன் வைத்தியனை அனுப்பினானும்?

அர.—"ஓஹோ, நல்லது. நீ உடனே போய் அவ்வைத்தியனை இட்டுக்கொண்டுவா."

என்று அரசன் கட்டளையிட திம்மராயனும் அந்த க்ஷணமே புறப்பட்டுப் போயினன்.

திம்மராயர் வெளியேபோன அரை நாழிகைக்கெல்லாம் வீரசேனன் கூடாரத்திற்குள் நுழைந்து அரசன் முன்னின்றான். இவன் திம்மராயனை எதிரே சந்திக்கவில்லைபோற் றோற்றுகின்றது. சந்தித்திருந்தால் திம்மனும் கூடவந்திருப்பான்.

வந்தனம்செய்த வீரசேனனைப்பார்த்து,

அர.—திம்மனைப் பார்க்கவில்லையோ?

வீர.—இராஜசேகர, இல்லையே.

அர.—நல்லது. நீ சோழதேசமல்லவா?

வீர.—ஆம, அரச. நான் பலமுறை தங்களுக்குச் சொல்லியிருப்பதுபோல் என் அரசன் சோழன்தான்.

அர—நானல்லவா உனக்கரசன். நீ என் சேனுதிபதி அல்லவா?

வீர.—மகாராஜ, வாஸ்தவமே. ஆனாலும் எனக்குத் தாங்கள் யாதொருசம்பளமும் கொடுக்கவில்லை. கண்ணியத்திற்காகவே சேனுதிபதித்துவத்தை ஒப்புக்கொண்டேன். நான் ஒப்புக்கொண்ட வேலையில் குற்றங்குறைவிருக்கும்பட்சத்தில் மட்டுமே தங்களுக்கு நான் கட்டுப்பட்டவன். இதர விஷயங்களில் எனக்குச் சக்ரவர்த்தி சோழமகாராஜனே யொழிய வேறொருவருமில்லை.

அர.—பேஷ்! நல்லபட்டம். சக்ரவர்த்தி! நல்லபெயர். எவ்வளவு இராஜ்ஜியங்கள் கப்பம் கட்டுகின்றன! கிடக்கின்றது என்று விட்டுவிட்டேன். இல்லாவிடில் கப்பங்கட்ட அடித்திருப்பேன். என்னைத் தவிர தக்ஷிணதேசத்தில் சக்ரவர்த்திகளும் இருக்கின்றார்களோ?

இப்படி அரசன் பதட்டமாகப்பேசவே திடீரெனச் சோழன் வலதுகை தன் இடுப்பினின்

றும் தொங்கிக்கொண்டிருந்த கத்தியின்பேரில் படிய, சொல்லுகிறான் :—

"மகாராஜாவே, தாங்கள் பலதடவை முற்றுகைபோட்டு பிடிக்க முடியாமற்போன விஷயத்தை யான் ஞாபகப்படுத்தினால் தங்களுக்கு இன்னம் கோபம் உண்டாகும். தஞ்சாவூர் உங்கள் படைக்கஞ்சினதல்ல. துருக்கனோடு சண்டைசெய்யும் விஷயத்தில் தங்களோடுசேர்ந்து சேனாதிபதியாய் சமாதானத்தோடு இருக்கின்ற நானே தாங்கள் சோழ இராஜ்ஜியத்தை எதிர்க்கும் பட்சத்தில் தங்களுக்கு நிரந்தரபகைவனாகி தங்களையே எதிர்ப்பேன்."

அர.—(இவ்வீரம்பொருந்திய வசனத்தைக் கிருஷ்ணராயன் கேட்கவே சந்தோஷமடைந்து) இவ்வளவு யோக்கியன்போல் பேசுகிற நீ வரம்புகடந்து நடக்கிறாய் அல்லவா?

வீர.—(அரசன் வசனங்களின் கருத்துப்புலப்படாது) நிருப, யான் ஒருக்காலும் அப்படிச்செய்யேன். அது சோழதேசத்தவர் குணமல்லவே.

அர.—நீ கௌதமர் ஆச்ரமத்திற்கு போனதில்லையா?

வீர.—(அரசன் இன்னவிஷயத்தைப் பற்றிப்பே சப்போகின்றான் எனவறிந்து வெட்கத் தோடு பயத்தையும் அடைந்தவன்போல் தலையைக் குனிந்து) ஆம் போயிருந் தேன்.

அர.—அங்கே நம்மாண்மனைப் பொற்கொடிகள் ஏற்கனவே போயிருந்த விஷயம் உனக் குத் தெரியுமல்லவா?

வீர.—தெரியும், மகராஜ், ஆனால்—

அர.—என்ன 'ஆனால்.'

வீர.—அரச,—

அர.—வாயைமூடு, நீ அதிகப்பிரசங்கி, உன் உயிரைமதிப்பாயே யானால் பத்திரம்.

வீர.—பிரபோ, என் உயிரை திரணத்திற்குச் சமானமாக மதிக்கின்றவன் யான் என் பது தங்களுக்குத் தெரிந்தவிஷயம்.

அர.—பிறன் சொத்தை அவன் உத்தரவில்லா மல் கிரகிக்க மனதில் நினைப்பதே தோஷ மென்று உனக்குத்தெரியாதோ? க்ஷத்தி ரிய முறைமை தவறாதே!

வீர.—அரச, யான் செய்வதெல்லாம் க்ஷத்தி ரிய தர்மத்திற்கு விரோதப்படாதே— இன்னம்—

அர.—நிறுத்து—போதும்—நீ சோழதேசத்தவ னுயிருந்தாலும் நம்மனஸ்தாபத்திற்குக் காரணமானால் உன்னுயிர் உன்னுடைய தல்லவென்பது உனக்குத் தெரிந்திருக் கட்டும்.

வீர.—அப்படித் தாங்கள்—

அர.—"நிறுத்து, என்று சொன்னேனே: முன் நில்லாதே, சீக்கிரம் போய் நிம்மனை வைத்தியனோடு அனுப்பு" என்று அரசன் கோபமாகச்சொல்லவே வீரசேனன் அர சனிருப்பிடத்தை விட்டு வெளியே ஏகி னன்.

அந்தக்ஷணமே ஒரு வேலைக்காரன் உள்நு ழைந்து அரசன் முன் கைகட்டி வாய்பு தைத்து நின்று "இராஜாதி இராஜ, இராஜ மார்த்தாண்ட, மதுரைராஜனும், கோளப்பிரபு வும் வந்திருக்கின்றனர்" என, அரசன் "நல்லது, நாராயணா மெத்தையைச்சரியாய்ப்போடு,—சூ-என்ன வியர்வை-கொஞ்சம் விபூதிகொண் டுவா-இட்டுக்கொண்டு சுத்தமாகத் தோன்று வோம், தீர்த்தமும் கொண்டுவா" என, நாராய ணன் நடுநடுங்கிச் சொல்லுகிறான்: "என்னாண் டவனே, சுரத்தில் தீர்த்தம கொடுக்கவேண் டாமென்று உத்தரவு பண்ணியிருக்கின்றாரே" என, அரசன் "என்னடாஅது! என்னைக்

சொல்ல நினைத்திருக்கிறீர்களோ? நல்லதிருக்கட்டும்; விபூதியைக்கொண்டுவா" என்றனன்.

---

## அதிகாரம் 6.

ஆசாரவாசலில் நின்ற வீரர்களில் ஒருவன் மதுரையையாண்டுவந்த விசுவநாத நாயக்கன். இவன் மிகவும் உயர்ந்து, இலட்சணக்குறைவு படாது மெலிந்த புருடன். அவனுக்கு வயது ஐம்பதிருக்கலாம். நெற்றியில் புலப்பட்ட மடிப்புகளினாலும் பார்ப்போர் பேரில் தைக்கும்படியான கடூரப்பார்வையினாலும் வஞ்சனையில் மகாசூரனெனத் தெரியவந்தது; ஒட்டின கன்னங்களும் அமர்ந்த உதடுகளும் இவன் பதட்டமாகப்பேசாமல் சகல செய்திகளையும் தன் மனதிலேயே வைத்து மறுகும் தன்மையனெனப்பகர்ந்தன. அவன் வலது தொடைப் பக்கத்தில் தொங்கும் கத்தியின் உரையின் குறுகிய அகலத்தைப்பார்க்கின் வெகுபெயர்களை மடித்து இரத்தவாற்றில் நீந்திப்போய் சிம்மாசனத்தை அடைந்தவனெனத் தெரியவரும்.

இவன் பக்கத்தில் நின்ற நாற்பது வயதுள்ள வீரன் கேரளதேசத்தின் செங்கோலை நடாத்திவந்த இராமச்சந்திரவர்மன். பார்வைக்குக்குள்

ளமாயும் சுறுசுறுப்பாயுமுள்ளவன். ஆனால் சிவந்த கண்கள் மட்டும் இவன் சுராபானம் செய்வதில் மிகப்பிரீதியுள்ளவனென வெளியிட்டன. சுபாவத்தில் தர்மசிந்தனையையுடையவனாயினும் பிறர்சொல்கேட்கும் தன்மை ஜாஸ்தியாதலால் தன் இராஜ்ஜியத்திலேயும் சத்புருஷனெனப் பெயரெடுப்பதில்லை.

இவ்விரண்டு வீரர்களும், அரசன் உள்ளே வரும்படி உத்தரவு அனுப்பவே, இராஜசமுகத்திற் பிரவேசித்தார்கள்.

**கிருஷ்ணராயன்.**—விசுவநாத், இராமச்சந்திர வர்ம வாருங்கள், வாருங்கள், இவ்வாசனத்தில் வீற்றிருங்கள்.

**இருவரும்.**—ஸ்ரீமகா இராஜாதி இராஜ் வந்தனம்.

**கிரு.**—வந்தனம், தாங்களிருவரும் சேர்ந்து வந்தது எனக்கு மிகுந்த சந்தோஷத்தைக் கொடுத்தது.

**இராமச்சந்.**—தங்கள் சரீரம் மிகவும் மெலிந்து போய்விட்டதே.

**கிரு.**—ஏதோ, தெய்வசங்கற்பம். நல்லது. நம் சைன்னியங்கள் நன்றாக சண்டைபோடுகின்றனவா? திருப்தியாக விருக்கின்றார்களா? தாங்கள் ஏதோ சம்பள பாக்கி

வைத்திருந்ததாகக் கேள்விப்பட்டேன். அது கூடாது. திருப்தி யடைந்தால் தான் அவர்கள் நன்றாக யுத்தம் செய்வார்கள்.

விசுவநாதன்.—இல்லையே. முன்பே பட்டுவாடா செய்தாய்விட்டதே.

கிருஷ்ணரா.—சரி, பிமிலிப்பட்டணத்தின் அரணைப் பழுது பார்க்கவேண்டுமென்று கடிதம் எழுதியிருந்தீர்களே, அது ஆய்விட்டதா?

விசு.—பிரபோ, அது கோளத்தாசர் செய்ய வேண்டிய வேலையன்றோ?

கிருஷ்ணரா.—பிரதான்ஜி!—ஓஹோ, வெளியே போயிருக்கின்றார். நல்லதிருக்கட்டும். நான் கோளத்தாசருக்குக் கடிதம் எழுதச்சொல்லுகிறேன்.

இரா.—பிமலிப்பட்டணத்திற்கு ஆக்பர் சைந்நியம் போகாமல் வீரசேனன் தடுத்துவிட்ட சங்கதி தங்களுக்குத் தெரிந்திருக்கலாம்.

கிருஷ்ண.—ஆமாம். என்றாலும், மறுபடியும் ஆக்பர் அப்பட்டணம் போக முயலலாம்; கிருஷ்ணா நதியின் தென்புறத்திலுள்ள

குன்றங்களில் நம் சைந்நியங்களில் சில வற்றைக் காவல் வைக்க வேண்டியது. அப்புறத்தில்தான் அந்நதி ஆழமற்றிருக் கிறது. அதைச்சுலபமாகத் தாண்டி ஆக்பர் சைந்நியம் அப்புறம்போகக்கூடும்.

விசு.—வீரசேனர் ஏற்கனவே அங்கொரு சைந் நியம் போயிருக்கும்படியாகவும், இன்னம் ஒன்று ஜயபுரத்தின் பக்கத்திலுள்ள குன் றுகளையும் சூழ்ந்திருக்கும்படியாகவும் உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

இரா.—மகா இராஜ, அது அவசியமான விஷ யம். ஆக்பர் சைந்நியத்தில் பாதி ஜயபு ரத்திற்குச் சமீபத்தில் ஜக்தல்பூரில் இருக்கின்றன. ஜக்தல்பூர் ஒரு பள்ளத் தாக்கு ; வேண்டுமானல் திடீரென நம் சைந்நியங்கள் குன்றினுச்சியினின்று தாக் கினல் ஆக்பர் சைந்நியம் மடியவேண்டி யதுதான்.

கிரு.—வீரசேனன் புத்திசாலி நல்லயோஜனை செய்தான். ஆனல் இப்பொழுது சண் டைசெய்யக்கூடாது. சமாதானம் செய் திருக்கிறீர்களாமே?

விசு.—அவ்விஷயத்தைப்பற்றித் தங்களோடு ஆலோசிக்கவேண்டுமென்று நாங்களிரு

வரும் வரைதபொழுது திம்மராயர் "சக்ர வர்த்தி அசௌக்கியமானதினால், நீங்கள் இப்பொழுது பார்க்கமுடியாது; ஆனாலும், சமாதானம் செய்து விடுங்கள், நான் உத்தரவுகொடுக்கின்றேன்" என்று செப்பினார்; அதைக்கொண்டுதான் நாங்கள் உடன்படிக்கை செய்துவிட்டோம்.

கிரு.—உடன்படிக்கையா!!

இரா.—இல்லை. சமாதானம். மூன்றுமாதத்திற்கு.

கிரு.—சரிதான். அதுதானே கேட்டேன்.

நல்லது, விசுவநாத நாயக்கர், நீர்கொண்டு வந்த சைன்னியம் எவ்வளவு?

விசு.—பிரபோ, காலாட்படை ஐயாயிரம், குதிரைப்படை ஆயிரம், இவைகளில் சிகாகோல் யுத்தத்தில் இரண்டாயிரம் காலாட்படையும் ஐம்பது குதிரைப்படையும் மடிந்தன.

இரா.—என்னுடைய சைன்னியமும் அவ்வளவுதான். காலாட்படை மட்டும் ஒரு நூறு கூடக் கொண்டுவந்தேன். அவைகளில் அநேகம் முன்னமே மடிந்து போயிருக்கும். ஆனால் வீரசேனன் அவைகளின்

ஒத்தாசைக்குத் தக்கசமயத்தில் வந்து காப்பாற்றினன்.

கிரு.—இச்சண்டையினால் நம் குடிகளுக்கு ஏதாவது துன்பமுண்டோ?.

விசு.—பிரபோ அது தான் இருக்கப்பட்டவாச்சரியம்; ஆக்பர் துருக்கனுனாலும் நிரம்ப நல்லவன்; தன் சைன்னியங்களுக்கு சத்துருக்களின் குடிகளைக் கொள்ளையடிக்கக்கூடாதென்றும் எவ்வித இம்சையும் செய்யக்கூடாதென்றும் கடுமையான உத்தரவு பிறப்பித்திருக்கிறுனும்.

கிரு.—யோக்கியன் தான்.— இச்சண்டையினால் நிரம்ப பண நஷ்டம்.

இரா.—அதினால் என்ன? குடிகளின் வரியைத் தூக்கினால் சரிப்பட்டுவிடும்.

கிரு.—ஆஹா, ஹா, ஹா—நல்லயோசனை— நல்லயோசனை—அரசர்கள் கண்டபடி தங்கள் இஷ்டப்பிரகாரம் செய்யும் சண்டைகளுக்குக் குடிகள் தான் பிணையோ? யோக்கியம். நம் அரசர்கள் கப்பம் ஜாஸ்தியாகக் கொடுக்கவேண்டியதாயிருக்குமேயொழிய குடிகளை வீணில் வதைக்கலாகாது.

இதைக்கேட்டவுடனே, சரீரத்தில் மின்சார வோட்டம் ஓடினதுபோல் விசுவநாதன் சரீரம் நடுக்கம் எடுக்க இராமச்சந்திரனைப்பார்த்து உதட்டைக்கடித்தனன். இராமச்சந்திரனுக்கு இத்தகைய சூட்சும தந்தி வியாபாரங்கள் தெரியாததினால் "ஏன் என்னைப்பார்க்கிறீர், மதுரையாரே?" என்று தொப்பென பூசணிக்காயைப்போட்டு உடைப்பதுபோல் இரகசியத்தை வெளியிட்டனன்.

இராமச்சந்திரன் கேட்ட கேள்வி கிருஷ்ணராயர் காதில் படாததினால் "என்ன சொன்னீர்!" என்று வினவ, விசுவநாதன் "ஒன்றுமில்லை நான் —" என்று முடிப்பதற்குள் திம்மராயர் உள்ளேபுகுந்து சக்ரவர்த்தியைப் பார்த்து "பிரபோ, இராஜாதி இராஜ, மன்னிக்க வேண்டும்: இன்றையதினம்தான் சுரம்கொஞ்சம் மெள்ளமாக விட்டடித்தது; அதற்குள் இவ்வளவு பேச்சுப்பேசினால் உஷ்ணங்கொண்டு சுரத்தை விருத்திசெய்யாதா?" "விசுவநாதநாயக்கர்—உங்களுக்கு இப்பொழுதுதான் ஒழிந்ததோ?" எனக் கேட்போர் நடுங்கும்படி கருச்சிக்க, மதுரையானும் கோளத்தானும் அரசனிடத்தினின்று உத்தரவு பெற்றுக்கொண்டு வெளியே புறப்பட்டனர்.

அப்பொழுது சூரியாஸ்தமனமானதினால் மிகவும் இரம்மியமான தென்றல் வீசிக்கொண்டிருந்தது. வானத்தில் மேற்குப்பக்கத்திலுள்ள மேகங்கள்யாவும் தகதகவென காய்ச்சியெடுத்த தங்க அந்தரவிமானங்களைப்போல் அங்குமிங்கும் உலாவின. பசும்புற்றரை யாவும் மஞ்சள் குளித்ததுபோல் முன்னரிலும் அதிகமாக நயனங்களுக்கு உத்ஸாகத்தை உண்டுபண்ணின. வீடுவந்துசேரும் ஆடுமாடுகளின் சப்தத்தோடு பட்சிகளின் கூச்சல்கள் கூடியிருந்துவான வீணைகானம்போற்றிரண்டு செவிக்கினிய அமிர்தத்தை ஊட்டுவித்தன. அவ்வேளையிற்றான் சிநேகிதர்கள் ஒருவர்களோடொருவர் கூடிசேர்ந்து உலாத்துவது. அவ்வேளையிற்றான் கணவனும் மனைவியும் ஒருவரோடொருவர் உப்பரிகையின் மேனின்று காற்றுவாங்கிக்கொண்டு சல்லாபவார்த்தை பேசுவதும்; அவ்வேளையிற்றான், அஞ்சாத நெஞ்சையுடைய சதியாலோசனை செய்யும் மானிடர்களும் ஒன்று கூடி குடிகெடுக்கும் எண்ணங்கள் எண்ணுவதும்.

ஆகையால் விசுவநாதநாயக்கன், தான் சொல்லவேண்டிய இரகசியங்களை யெல்லாம் கிருஷ்ணராயர் கூடாரத்திற்குநேரே யரை

நாழிகைதூரத்திலுள்ள மைதானத்தில், இராமச்சந்திரவர்மனுக்குத் தெரிவிப்பதாகத் தீர்மானம்செய்திருந்தனன். ஆனால் கூடாரத்தின்வெளியே கொஞ்சதூரம், இருபுறமும் யுத்தவீரர்கள் பாராக்காத்துக்கொண்டிருந்ததினால் இருவரும் வாய்பேசாது நேரேசென்றனர். பாராவுத்தியோகஸ்தர்கள் தங்கள் துப்பாக்கியை உயரத்தூக்கி மதுரை யரசனுக்கும். கேரளநிருபனுக்கும் வந்தனம்செய்த விஷயமும், விசுவநாதநாயக்கன், இராமச்சந்திரவர்மனைப்பார்த்து "நாம் அம்மைதானத்தில் போய் காற்றுவாங்குவோம்" என்று சொன்ன செய்தியும், அதனால் அவர்களிருவருடன் வந்த சைன்னிய வுத்தியோகஸ்தர்கள் வந்தனம் செய்துவிட்டு தங்கள் தங்கள் இருப்பிடத்திற்குப்போன சமாசாரமும் நாம் சொல்லாமலே இதை வாசிப்போர் அறிந்துகொள்ளலாம்.

இருவரும் மைதானத்திற்கு வந்துசேர்ந்தார்கள். திடீரென,

விசுவநாதநாயக்கன்.—இராமச்சந்திரவர்மரே, கிருஷ்ணராயன்சொன்னதைக்கேட்டீரா?

இராமச்சந்திரன்.—என்ன, என்ன ?

விசுவ.—உமக்கு எல்லாம் அலட்சியந்தான்,

நாளைக்குக் கொடுக்கும்போதல்லவோ தெரியும்.

இராம.—என்ன, சொல்லும், நான் கவனிக்கவில்லை.

விசுவ.—இராம்ஜீ, நல்லகவனம். கிருஷ்ணராயன் பேச்சோடுபேச்சாக, "நம் சிற்றரசர்கள் கப்பம் ஜாஸ்தியாகக்கொடுக்கும்படிசெய்வேன்" என்று சொன்னது உம்முடையகாதில் படவில்லையோ?

இராம.—ஆமாம், ஞாபகம்வந்தது. ஆனாலும் சிற்றரசர்கள் என்றும், கொடுக்கும்படி செய்வேனென்றும், கிருஷ்ணராயர் சொல்லவில்லையே?

விசுவ.—அப்படியாகில் நான்சொல்வது அபத்தமோ?

இராம.—மன்னிக்கவேண்டும். அப்பொழுது நான் வேறு ஞாபகமாகவிருந்துவிட்டேன்.

விசுவ.—கிருஷ்ணராயன் நல்ல திருடனே. சொல்லாதுபோல் சொல்லிவிட்டான்.

இராம.—அதினாற்றான் குடிகள் அவன்பேரில் மிகவும் பட்சமாகவிருக்கின்றார்கள்.

விசுவ.—என்ன பட்சம்.

இராம.—என், அரச, என் இராஜ்ஜியத்தில் குடிகள்யாவும் தங்கள் திருவிழாக் கொண்டாடும்பொழுதெல்லாம், "ஜய விஜயீபவ, கிருஷ்ணராயருக்கு, ஜயவிஜயீபவ," என்று பிரார்த்திக்கின்றனர். அவர்களுக்கு நேரரசனுகிய என்னைப்பற்றிக் கவனிப்பதேயில்லை. நான் ஒருதடவையில், இராஜ்ஜியத்தில் வருமானம் மட்டுக்கட்டியிருப்பதைப்பார்த்து, உப்பு வியாபாரிகளின் வரிகளை விருத்திசெய்ய அவர்கள் தங்களுக்கு நஷ்டம் நேராதபடி உப்பின் கிரயத்தை அதிகப்படுத்தினர். இது எப்படியோ கிருஷ்ணராயனுக்குத் தெரிந்து அத்தகைய வரிகள் அநியாயமென்றும், குடிகளின் ஜீவாதாரமே லவணமாயிருக்க அதின்பேரில் எப்படி வரி போடலாமென்றும் கண்டித்து எனக்கு அர்ஜி எழுதினன். அவ்வர்ஜியை வெளியிட்டு வரியை நான் தள்ளவே குடிகள், வியாபாரிகள் யாவரும் ஒன்றுசேர்ந்து கிருஷ்ணராயன் தீர்க்காயுசுக்கு சொக்கப்பனை கொளுத்தினர்.

விசுவ.—உம்முடையபேரிற்றான் பிசகு இருக்கின்றது. அப்படி அர்ஜிகள் கிடைக்கும்

பட்சத்தில் நீராகச்செய்ததுபோல் வரியைத்தள்ளிவிட்டால், பின்னால் யோஜித்து நம்மரசர் இப்படிப்பட்ட நல்விஷயத்தைப்புரிந்தனர் என பிரஜைகள் யாவும் உம்மை மெச்சிக்கொள்ளும். இப்படித்தான், நான் ஒருதடவை வண்டிவைத்திருப்பதற்கும் ஆடுமாடுகள் வைத்திருப்பதற்கும் வரிபோட அதற்கு கிருஷ்ணராயன் "நீர் சீக்கிரத்தில் பாதைகளில் நடப்பதற்கும் வரிபோடுவீரோ" வெனக் கேள்விகேட்டு ஒருகடிதம் எழுத அதைப் பார்த்த தக்ஷணமே நானாகச்செய்ததாக வரியைத்தள்ளிப் பிரசுரஞ் செய்துவிட்டேன். இது எப்படியிருந்தபோதிலும், நம் இராஜ்ஜியகாரியங்களில் இப்படியவன் தலையிட்டுக்கொள்ளலாமா?

இராம.—முன்னாளையில் நம் பிதாக்கள் கப்பம் மாத்திரம் கட்டிக்கொண்டிருந்தார்கள்.

விசுவ.—நம்மை யவன் அரசனாகமதிக்கவில்லை. ஏதோ சம்பளம் கொடுத்து தேசங்களைத் தன்னிஷ்டப்பிரகாரம் ஆண்டுவர நேமித்த ஆஸாமிகளாக நினைத்திருக்கின்றனன்.

இராம.—நமக்கென்றே இவன் தோன்றியிருக்கின்றனன். இதர இடங்களில் அப்படியில்லை.

விசுவ.—இதர இடங்களிலா? ஆக்பர் இராஜ்ஜியத்தில், சிற்றரசர்களும், நபாபுகளும் அவர்கள் 'அடித்தது கொள்ளைதான்.'

இராம.—அப்படியில்லையாம். ஆக்பர் நல்லவன் தானும் நல்ல தந்திரியாம்.

விசுவ.—அவன் எல்லாருக்கும் நல்லவன்.

இராம.—நாம் என் செய்வது? ஈசுவரசங்கல்பம்.

விசுவ.—என்னசெய்வது? தன்காரியத்தில் தானே முயற்சிசெய்யாதவனுக்குக் கடவுள் உதவிபுரியார்.

இதைக்கேட்டமாத்திரத்தில் இராமச்சந்திரவர்மன் ஏதோ ஆலோசித்துக்கொண்டிருந்தனன். அப்பொழுது, சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு,

விசுவ.—ஒரு நல்லயோஜனை யிருக்கின்றது.

இராம.—என்ன?

விசுவ.—இருந்தாலும் அதை உமக்குச் சொல்லக்கூடாது.

இராம.—எனக்கொளித்த இரகசியம் கூட உண்டா? சொல்லும்.

விசுவ.—நீர் ஒட்டைவாய்; நாமிருவரும் சேர்ந்து முயற்சியெடுத்தால்தான் அது முடியும்.

இராம.—சொல்லும்: சமயம் வந்தால் நானும் உம்மைக்காட்டிலும் தந்திரிதான்.

விசுவ.—ஆக்பர் கிருஷ்ணராயனைக்காட்டிலும் நல்ல எஜமானன்.

இராம.—ஆமாம். அவன் பட்சத்தில் நாம்போனால் குடிகளே நம்மைத்தூறுவார்களே.

விசுவ.—சகோதரரே, நான் சொல்லுவதைக் காதுகொடுத்துக் கேட்கவேண்டும். நமக்கு இராஜ்ஜியம் வேண்டுமானாலும் நம்மூதாதைகளைப்போல் அதிகாரத்துடன் அரசாளவேண்டுமானாலும் அதற்கு ஒரேவழி யிருக்கின்றது. அதைச்சொல்லட்டுமா? நீர் பின்வாங்குவீர்.

இராம.—இல்லை சொல்லுங்கள் பிரபோ.

விசுவ.—எனக்குப் பிரபுப்பட்டம் வேண்டாம். நான் சொல்லுவதைக்கவனியும்: ஆக்பர் நமக்கு அதிபதியாகும்பட்சத்தில் நமக்

குப் பூர்ணாதிகாரம் வந்துவிட்டது. அவன் இராஜதானி, டில்லி; அது வெகுதூரத்திற்கு அப்புறம் இருக்கின்ற பட்டணம். காலாகாலத்தில் கப்பத்தை மறைப்பிவிட்டோமேயானால் இங்கே தட்சிணத்தில் நாம் 'அடித்தது கொள்ளைதான்.' அங்கிருந்து நமக்கு உத்தரவு வருவதற்குள் ஆறுமாதமாகும். நமிஷ்டப்பிரகாரம் சைந்நியத்தை பலப்படுத்தலாம்.

இரா.—ஆமாம், அது சரிதான். அக்காரியத்தை முடிப்பதெப்படி?

விசு.—கிருஷ்ணராயன் திடகாத்திரனாயிருக்கும்வரையில் நம்மெண்ணம் நிறைவேறாது.

இம்மாற்றங்களைக் கேட்ட மாத்திரத்தில் இராமச்சந்திரவர்மருக்கு தேகம் வியர்த்தது, மயிர் சிலிர்ப்பெடுத்தது. தலை குனிந்து நின்றனர்.

விசு.—நல்லகாரியம். வாயினாற் சொன்னதிற்கு உமக்கு இவ்வளவு பயமானால் காரியத்தை முடிப்பதெப்படி? யுத்தகளத்தில் ஒரு நாழிகைக்கு நூறாகத் தலையைவெட்

டிக்குமிக்கும் சாமர்த்தியமுள்ள நீர் இத
ற்கு அஞ்சலாமா.

இரா.—அதை நாமா செய்வது?

விசு.—அதற்கு நீர் பயப்படவேண்டாம், தக்க ஆசாமிகள் இருக்கின்றார்கள். என்னுடைய கூடாரத்திற்கு நேற்றுவந்த பக்கிரி தக்க வேலைக்காரன் அவனுக்கு இப்படிப் பட்ட விஷயம் ஜலபட்ட பாடுதான்.

இரா.—அதினால் நம்முடைய கீர்த்திக்கு ஹானி நேரிட்டாலோ?

விசு.—என் நேரிடும். அவைகளை அவசரப்படாமல் செய்யவேண்டும். முதலில் கர்னுடகதேசத்தரசனுக்கும் அவனுக்கும் மித்திரபேதம் செய்து,—

இரா.—ஆமாம், சாம, தான, பேத, தண்டம் இவைகளில் ஒன்றைப்பிரயோகம் செய்தால்தான் காரியம் முடியும்.

விசு.—கர்னுடகத்தான்தான் அவனுக்கு மிக்க உதவி.

இரா.—போதும் அதோ யார் வருகிறது? கிருஷ்ணராயர் பட்டாளத்து சுபேதாரும் அவுல்தாரும்போல் தோன்றுகிறது.

விசு.—ஆமாம் நடையைப்பார்த்தால் அப்படித் தானிருக்கிறது; மறக்கவேண்டாம். வந்தனம், போய்விட்டுவருகிறேன்.

இவர்கள் ஒருவரை யொருவர் வந்தனம் செய்து பிரிந்தனர். இராமச்சந்திர வர்மன் தெற்குமுகமாகவும் விசுவநாதநாயக்கர் வடக்குப்பக்கமாகவும் ஏகினர்.

இவர்களுடைய குணகுணங்களைப் பற்றி வருணிப்பதற்கு நமக்கு அவகாசமில்லை. இவர்கள் முதலில் ஹீனஸ்திதியிலிருந்து பிறகு மகா கடோரமான வஞ்சனையால் அரசர்களானதினால் பேசும்பொழுது ஒரு கம்பீரமும் பெருந்தன்மையும் இல்லை. இச்சரித்திரம் வாசிப்போர்களுக்கு நடந்ததை நடந்தபடியே சொல்லவேண்டுமென்கிற எண்ணத்துடன் அவர்களிருவரும் பேசும்பொழுது சொன்ன வார்த்தைகளையே உபயோகித்து இச்சம்பாஷணையை எழுதினோம்.

---

III.

அதிகாரம்—7.

---

இடம்: பூஞ்சோலை.

கமலாம்பாள்.—சகி, நைடதமே மிகவும் நேர்த்தியான கிரந்தம் அதன் வாக்கின் நடை இலட்சணமாயிருக்கின்றது.

விசாலம்.—அதைச் செய்தவர் யாரென்றுனக்குத் தெரியுமா? அதிவீரராமபாண்டியனல்லவா?

கம.—பாண்டியனா? ஓரரசனுக்குக்கூட இவ்வளவு சொற்பொலிவு மேவிய கிரந்தம் செய்ய அவகாசமிருந்ததோ? அக்கிரந்தத்தின் நடையில் ஒரு கம்பீரமும் ஓட்டமும் பொருந்தியிருக்கின்றது. அப்பாண்டியர் அலங்காரத்தில் சமர்த்தர். அவர் வருணிப்பு யாவும் யாம் பாரா வஸ்துக்களைப் பார்வைக்குக் கொண்டுவந்துவிடத்தக்கன.

விசா.—அவர் சாமர்த்தியம் அலாதி. இல்லறத்திற்கியைந்த விஷயங்களைப்பற்றி இயம்பும்போது ஏனைய கவிகளுக்கிராத

ஒரு லளிதமும் சொற்பொலிவும் அவருக்குண்டு. பக்திமார்க்கமாய்ப் பாடல்கள் இயைக்கும்பொழுது கன்னெஞ்சையும் கரைக்கத்தகுந்த பதங்கள் பிரயோகிப்பார்.

கம.—பக்திமார்க்கமாயும் பாடல்கள் செய்திருக்கிறாரா?

விசா.—நீ படித்தது இவ்வளவுதானா? திருக்கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருக்கருவைவெண்பா வந்தாதி முதலியன அவர் செய்தவை யல்லவா?

கம.—ஆமாம். அப்புத்தகங்களிலிருந்து நமது காந்திமதி பாடல்கள் பாடுவதைக் கேட்டிருக்கிறேன்.

விசா.—காந்திமதி நேற்றையதினம் பாடிய பாட்டை சொல்லு பார்ப்போம்.

கம.—(பாடுகிறாள்.)

சிந்தனையுனக்குத்தந்தேன் திருவடியெனக்குத் தந்தாய்
வந்தனையுனக்குத்தந்தேன் மலரடியெனக்குத் தந்தாய்
பைந்துணருனக்குத்தந்தேன் பரகதியெனக்குத் தந்தாய்
கந்தனைப்பயந்தநாதா கருவையிலிருக்குந்தேவே.

விசா.—இதல்லடி, இதல்ல.

கம.—ஆமாம். இதுதான். நமது காந்திமதி, இது பரிவர்த்தனை யலங்காரமென்று கூடச்சொல்லவில்லையா?

விசா.—அது சரிதான். இதற்கப்புறம் ஒன்று பாடினளே அதைச்சொல்லு.

கம.—(பாடுகிருள்.)

ஆதவன் மதிபாரனல் வெளிபுனல் காலரு மறையெச்
சனென்றெட்டுப்
பேதமாமுருவாயருவமாய் நிறைந்தபெரியோ னுற்ற
நாலுன்னை
ரதிஞானுணர்வெனுணருமாநந்தா யிளநிலாப்பசுங்
கொழுந்தணிந்த.
சோதியே, கருவையொப்பனை களபத்துணை யுமை
தழுவுகாதலனே.

விசா.—நீ பாடுவதற்கும் காந்திமதி பாடுவதற்கும் எவ்வளவு வித்தியாசம். குட்டை குட்டையாக முடித்து விடுகிருய்.

கம.—நீயொன்று பாடு பார்ப்போம்.

விசா.—கைடதத்திலிருந்தா?

கம.—ஆம்.

விசா.—(பாடுகிருள்.)

அறனான்றா னாறுங்கடந்தச் சீதையொருத்தியாவி
யுய்யப்
பெருவான்மலைகளணைத்து நெடுங்கடல்வாய்ப்பெய்
தபெருங்கவிகள்
சிறுகாலுயிர்க்குந் தமிழ்வரையை முந்நீரகத்திற்செ
த்தியவே
இறுகாமலைத்தணைத்துறையு மடவார் பலருமுய்
வாரே.

கம.—ஆஹா இதைக் காந்திமதி பாடவேண்டும். வினோதம்போலிருக்கும். இப்பாட்டிற்குப் பதவுரை சொன்னதோடு கூடக் கருத்துரையும் எனக்குச்சொன்ளுள்.

விசா.—கருத்துரையைச் சொல்லு.

கம.—சீதையின்பொருட்டு மலைகளைக் கடலிற்போட்ட குரங்குகள் பொதியமலையையும் கடலிற்போட்டிருக்குமேல் கணவரைப்பிரிந்த மாதர்கள் பலரும் உயிர் வாழ்ந்திருப்பார்கள். ஏனெனில் அம்மலையினின்று புறப்படும் தென்றல் அப்போது இடமகன்று உயிரிழக்கு மென்ருள்.

விசா.—அப்படிச் சொல்லிவிட்டு, "அது உண்மைதான்.—ஆ—" என்று பெருமூச்சு விட்டதைக் கவனிக்கவில்லையா?

கம.—காந்திமதிதானே—ஆமாம். ஏனடி அப்படி?

விசா.—அவளுக்குச் சுயம்வரகாலம் வந்தும் இன்னம் விவாகம் நடக்கவில்லையல்லவா, அதினாற்றான்.

கம.—ஆனால் அவள் அப்படி யாரை நினைத்துச் சொல்லியிருக்கக்கூடும். எனக்குத் தெரிந்தமட்டும் அவள் ஆசை வைத்த அரசர்கள் யாவருமிலரே.

விசா.—ஒரு வாரத்திற்குமுன் நானவளுடன் சம்பாஷித்துக்கொண்டிருந்தேன். அப்போது இங்கே வந்திருக்கக்கூடிய சகல அரசர்களையும் வருணித்து அவர்கள் பேரில் அவளுக்கு இச்சையிருக்கின்றதாவெனப் பரீட்சித்தேன். அவள் ஒவ்வொருவருக்கும் ஒரு குற்றம் கற்பித்தாள். எனக்கும் அவளாசை நாடிய மன்னன் யாவன் என நன்கு புலப்படவில்லை

கம.—அதை நாம் நன்றாக அறியவேண்டியது அத்யாவசியகம். அவள் சரீரம் நாளுக்குநாள் மெலிந்து சோர்வடைகின்றதே. காரணமோ தெரியவில்லை. மார்பு

பருத்து, இடை சிறுத்து கனங்கள் ஒட்டிப்போயு மிருக்கின்றமைத சரீரம் மெலிந்தாலும் வளர்பிறைச் சந்திரனைப்போல காந்தியும் பொலிவும் அதிகரித்து விளங்குகின்றது. ஆதலால் அவனுக்கு வியாதியில்லை.

விசா.—பொறு, இதோ பாடிக்கொண்டு வருகிறாள். அவள் மனதை யறியலாம். பேசாமலிரு.

காந்திமதி.—(பாடிக்கொண்டு வருகிறாள்.)

சங்கரனே, கங்காதரனே, சம்பாசிவ, க[illegible]னே
சங்கர, [illegible], [illegible]னே, சம், போக[illegible], காத[illegible]னே,

முக்திநெறியறியாத மூர்க்கரொடுமுயல்வேனைப்
பக்திநெறியறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலமறுவித்துச் சிவமாக்கியெனையாண்ட
அத்தனெனக்கருளியவா றார்பெறுவாரச்சோவே.

விசாலம்.
கமலம்.
} வந்தனம், மாதே, வந்தனம்.

காந்திமதி.—வந்தனம், சகிகாள்.—என்ன எங்கும் மாவின் வாசனை மனோகரப்படுத்துகின்றதே. கட்டோர்காள், நீங்கள் கண்டீர்களோ, அதோ தழுவுவதற்குக் கொம்பின்றிக் கீழே விழுந்து தவிக்கும்

முல்லைக்கொடியைப் பார்த்திருந்தும் அதன் விசனத்தை நீக்காதிருக்கின்றீர்கள். ஆடவர்கள் கண்கள் தைத்தலினால் வாடிய மாதர்கள் முகத்தை யொத்த தாமரைகள் யாவும் வண்டினங்கள் ஏறி மிதிப்பதினால் இடருறுவதைப் பார்க்கவில்லையோ? வீணையினிசையை யொத்த கண்டத்தினையும் சிவந்த நயனங்களையும் உடைய பெண்குயில்காள் கூவுதல் ஒழிமின். ஆண் குயில்கள் மனம கல்லினாலும் கண்கள் அம்பினாலும் ஆக்கப்பட்டதென அறியீர்களோ? அன்றில் பட்சிகாள் இவ்விடத்தை யகல்மின். உங்கள் கதி மாதர்களுக்கு ஏக்கத்தையும் துன்பத்தையும் உண்டுபண்ணும்.

**விசாலம்.**—என்ன, காந்திமதி, திடீரென நம் பூங்காவனத்தை வருணிக்க வாரம்பித்தனை, காரணம் யாது?

**காந்.**—விசாலம், உண்மையிலேயே, இப்பட்சிகளையும், தாவுகோலின்றி வாடும் கொடியையும் பார்க்கும்போது ஸ்திரீகளாகிய நமக்கு மனமிரங்காதா? நாமும் புருஷர்களா?

மக.—அகத்திலுள்ளது முகத்திற் றெரியுமென் பது உண்மையேயாயின் நீ பகர்ந்தசொற் கள்யாவும் கண்ணாடிபோல் உன் மனஸ்தி திலை வெளியிடுகின்றனபோல் தோன்று கின்றது.

விசா.—உனக்கு விவாகப்பருவம் அணுகியதா தலின் இவ்வாறு மனம் நொந்து பகர்ந் தனே.

காந்.—சகிகாள், நீவிர் சதிபாலோசனையில் வல்லீர். விவாகப்பருவம் அணுகின் என்னை.—அக்கடன் முடித்தல் எந்தை பொறுப்பன்றோ? யானதைக்குறித்து சிந் திப்பதின் பயன் யாது?

கம.—அவ்விஷயம் முடிப்பது உன் தந்தைய தாயினும் உன் மனோரதத்திற்கு விரோ தமாக அவர் ஏகார். க்ஷத்திரிய ஸ்திரீ களுக்கு விவாகமுறைமை ஸ்வயம் வரமே. ஆதலின் எப்புருஷனை வரிப்ப தென நீ முன்னரே ஆலோசித்திருக்க வேண்டியதன்றோ? நம் சக்ரவர்த்திக் குக் கப்பங் கட்டிவரும் பற்பல தேயத்த வர்கள் படங்கள்யாவும் என்னிடத்தி லுள. இன்னம் சுயேச்சையாய் நம் சக்

ரவர்த்தியுடன் சம அந்தஸ்துள்ளவர்களாய்ச் செங்கோல்நடாத்திவரும் மன்னர்கள் உருவமும் நம்மரண்மனைச் சித்திரக்காரன் வரைந்திருக்கின்றனன். அவைகளை யுனக்குக் காண்பிக்கின்றேன். அப்படங்களில் உனக்கு யாது மனதிற்கிசைந்ததென்ன செப்புவையாகில் நாங்கள் அவ்விஷயத்தை நிறைவேற்ற முயலுவதில் சித்தராயிருக்கின்றோம். உன்னைத் திருப்தி செய்வதற்கன்றி வேறே யாது செய்வதற்கு யாங்களிங்கு இருக்கின்றனம். தாய்க்கொளித்த சூலுளதோ? எங்களுக்கொளித்த இரகசியமுண்டோ? காந்திமதி, யாது சொல்லுகிறாய். உன் தேகமோ நாளுக்கு நாள் உருகுகின்றதே.

காந்.—ஓஹோ, கமலா, நீ மெத்தப்படித்தனை போலும்.

விசா.—கமலா, அப்படங்களைக் கொணர்வாயாகில் பொழுது போக்கலாம். யானும் பார்க்கவேண்டுமென்று ஆவலுற்றிருக்கிறேன்.

கம.—இதோ வருகிறேன் (கொண்டுவரப் போக.)

**காந்.**—கமலம் சிற்சில சமயங்களில் முற்றக்கற்றவர்போல் பேசுகிறாள்.

**விசா.**—காந்திமதி. அவள் சொல்லுவது முழுதும் சரியே. அது எப்படியிருந்தாலும் நாம் அப்படங்களைப் பார்த்து வேடிக்கையாயிவ்வந்திப்பொழுதைக் கழிக்கலாம்.

**கம.**—(வர) விசாலம், ஓடிவா, ஓடிவா, இப்படங்கள் நழுவி விழுகின்றனவே. பிடி, பிடி.

**விசா.**—சரி, நானிப்படங்களைப் பார்க்கின்றேன். காந்திமதி, நீ வருணிப்பதில் மிகச் சமர்த்தி; எங்களுக்குப் பாடம் சொல்லும்பொழுதெல்லாம் நீ வருணிப்பதைக் கேட்டிருக்கிறேன். இப்படங்களை ஒவ்வொன்றாகத் தருகிறேன். நீ யவைகளைப் பற்றி எங்களுக்கு விசதமாகச்சொல்லு: இந்தா—இதோ—விசுவநாத நாயக்கன் படம்.

**காந்.**—நயனங்களைப் பார்! வஞ்சகன் போற்றோன்றுகின்றனன். முகத்தில் இராஜ தேஜஸ் கிடையாது. குரூபி—இதை எறி—வேண்டாம்.

**விசா.**—இது கர்னாடக தேசத்தரசன்.

காந்.—பிரமன் தன்னிடத்திலிருந்த சாக்குயாவையும் செலவழித்துவிட்டான் போலிருக்கிறது. இவ்வளவு ஸ்தூல சரீரமும் இவ்வுலகத்திலிருக்கின்றதோ? கலங்கிய நீரில் தோன்றும் சூரியன்போல் அவன் மனம் முகத்தில தெரியவில்லை.

விசா.—இதுதான் விஜயாகுநாத சோழன் படம.

காந்.—ஓஹோ, இவரை நான் பார்த்திருக்கின்றேன். இவர் அதிக ரூபலாவண்ணிய முடையவர். அதிக விருத்தாப்பியர்.

விசா.—நீ ஒருபொழுதும் பார்த்திருக்க மாட்டாய் அவர் இங்கே நம் இராஜ்ஜியத்திற்கு வந்ததேயில்லை. இப்படத்தைப் பார். இவனும் சோழனதான். ஆனல் இராஜவம்சத்தைச்சேர்ந்தவன் அல்லன். நம் சைன்னியங்களுக்கு அதிபதி; இவன் பெயர் வீரசேனன்.

காந்.—(வெகுநேரம் உற்றுப்பார்த்து) போதும்; எனக்குத் தலைவலிக்கின்றது. இப்படத்தை நான் வைத்திருக்கிறேன். பின்னை இதைப்பற்றி யுனக்கு வருணிப்

பேன். தென்றல் அதிகமாக வீசவீச எனக்கு சரீரம் ஜாஸ்தியாக உஷ்ணமா கின்றது. காரணமறிகிலேன். கமலா, இவ்வெண்பட்டையும் இப்புட்பமாலை யையும் பன்னீரில் நனைத்துக்கொண்டுவா அதை மேலே போர்த்துக்கொள்வோம்.

விசா.—என்ன, காந்திமதி, இராஜாதிராஜாக்கள் படங்களிருக்க அவைகளை யெல்லாம் பாராது போதுமென்றாயே.

காந்.—அவர்கள் அரசர்களாயின் நமக்கென்ன?

கமலம்.—இல்லை, அவர்களுடைய படத்தை யெல்லாம் கண்ணுறாது, நம் சக்ரவர்த்தி யின்கீழ் குற்றேவல் செய்யும் இச்சோ முன் படம் வந்ததட்சணமே நிறுத்திவிட் டாயே.

காந்.—கமலா, நீ வாயறியாது பேசுபவள். இவ் வீரன் குற்றேவல் செய்வதாக உனக் கெப்படித் தெரியும். அவன் கண்ணி யத்திற்காகவே அவ்வுத்தியோகத்தை ஒப்புக்கொண்டதாக என் தந்தை திம்ம ராயரிடம் அடிக்கடி சொல்ல நான் கேட் டிருக்கிறேன். நீயொன்று மறியாது கண்டபடி பிதற்றல் தர்மமன்று.

விரா.—அது எப்படியிருந்தபோதிலும் இவன் சோழன்; நம் சக்ரவர்த்திக்கு அடங்காத தேசத்தவன்; இவ்வீரசேனன் அதிக இறுமாப்புப் பிடித்தவனும். ஒருவரையும் இலட்சியம் செய்வதில்லையாம். ஆனால் வேலையில் சமர்த்தனும். அமர்க்களத்தில் அவனுக்கு அமரர்களும் ஈடாகார்களாம். இவ்வளவு சாமர்த்தியமுள்ளவனுக்கு அடக்கமல்லவா இருக்க வேண்டும். அது இல்லை.

காந்.—விசாலம், நீயுமென்ன, இப்படி யாரம்பித்துவிட்டாய். சோழனாயிருப்பதும் அவன் குற்றமா. வீரனென நீயே பகர்கின்றனை. ஒருவரையும் இலட்சியம் பண்ணாமல் சத்தியத்திற்கு மட்டும் கட்டுப்பட்டுப் பேசுதல் க்ஷத்திரிய வீரர்களின் ஸ்வபாவம். அது அவர்க்கு ஆபரணமாகுமே யொழிய ஒரு குணக்குறைவாகாது.

சம.—நீ இப்படி இப்புருஷனுக்குப் பரிவதைப் பார்த்தால்—

காந்.—போடியம்மா, இப்படியே பரிகாசம் செய்கின்றீர்கள். நான் திருவாசகம் வாசிக்கப்போகின்றேன்.

(போகின்றாள்.)

விரா.—கமலா, பார்த்தனையா, காந்திமதி வலை யில் அகப்பட்டனள். வீரசேனனைத் தான் அவள் வரிக்கின்றாள்.

கம.—இவ்வளவு ரூபத்திற்கும், இவ்வளவு படிப் பிற்கும் அவன் இயைந்த புருஷன்தான்.

விரா.—அவனுக் கென்னடி, மகாசூரன் கல்வி யில் தேர்ந்தவனும்.

கம.—இவளுக்குத்தான் என்ன. இவள் படிப் புக் கென்குறைவு. சமஸ்கிருத பாஷை யில் நாடகாந்தம் அறிந்தவள். தமிழின் தான் கேட்கவேண்டியதில்லை. அவள் அன்றையதினம் எழுதியிருந்த உபந்யா சத்தைப் பார்த்தனையா? எவ்வளவு நேர்த்தி.

விரா.—நாழிகையாய்விட்டது போவோம்வா.

(போகிறார்கள்.)

---

## அதிகாரம்—8.

நாம் இப்பொழுது காந்திமதியின் பூஞ்சோலை யினின்றும் தட்சிண சக்ரவர்த்தியின் கூடா ரத்திற்கு வந்துவிட்டோம். கிருஷ்ணராயர் வழக்கம்போலவே கட்டிலில் சாய்ந்தாற்போல்

படுத்துக்கொண்டிருந்தார். அருகில் ஒரு ஆசனத்தில் அவர் பிரதானி திம்மராயர் கையில் ஒரு நிரூபத்தை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். இவர்களுக்கு எதிரே ஒரு பொற்சிம்மாசனத்தில் யாரோ ஒருவர் மிகவும் கம்பீரத்துடன் வீற்றிருந்தனர். அவர் சரீரம் யாவும் பார்வைக்குப்புலப்படவில்லை. காற்றோட்டத்திற்காகவோ மற்றெவ்விஷயத்திற்காகவோ, மிகவும் 'தொளதொளப்பான' அங்கியினால் அவர் யாக்கையின் மேற்பாகம் முழுதும் மூடப்பட்டிருந்தது. இரண்டுபாதங்களும் கொஞ்சமேனும் வெளிக்குத்தெரியாமல், கோஷா ஸ்திரீகளைப்போல், பாதரட்சைக்குள் ஒளிந்துகொண்டன. முகத்தினின்றும் உற்பத்தியாகி கண்டத்தின் முன்பாக ஓடி நடுமார்புவரையிலும் எட்டி மிகக்கம்பீரமாய்த் தழைந்திரா நின்ற தாடியினால் சாதாரணமாய்த் தெரியக்கூடிய கழுத்தின் முன்பாகமும், முகத்தின் ஏறக்குறைய அர்த்தபாகமும் மறைந்துபோயின. மேலுதடுகளின்மேல் கூரைபோட்டதுபோல படர்ந்து வளர்ந்திருக்கும் மீசை, தன் செழிப்பினாலும் மிகவும் பயங்கரமாய் முறுக்கிட்டு காதளவோடி வளைந்திருப்பதினாலும் தன்பேரில் அப்புருஷருக்குள்ள பட்சத்தையும் விசுவாசத்தையும் தெரிவித்தது.

கண்டத்தின் பின்பாகமாவது பார்வைக்குப் புலப்பட்டதோவெனில் அதுவும் இல்லை. அப் புருஷர் சிரசைச்சுற்றி, விந்தயபர்வதத்தைப் போல் உன்னதமாயும் ஏற்றத்தாழ்ச்சியாயும் வளர்ந்து, பின்பக்கம் தோளளவு ஓடிப் பின்னர் கழுத்தைச்சுற்றி வந்து மார்பின் முன்னால் விரிந்து விழுந்த தலைப்பாகை, தெரியக்கூடிய பாகங்களையும் முற்றிலும் மூடினது. இராமாயணத்தில் சொல்லப்பட்டுள்ள தண்டகாரண்ணியமென்னும் வனத்தைக்காட்டிலும் மிகவும் அடர்ந்த அக்காடியின்மேனின்றும் ஏழையவர்களைத் தன் கனத்தால் நசுக்கித் தூள் பண்ணக்கூடிய அத்தலைப்பாகைக் கீழ் நின்றும் பளீர் பளீர் என்று ஒளிவீசி இரண்டு நயனங்களும் பிரகாசித்தன. கொஞ்சம் புலப்பட்ட நெற்றியினின்றும் அப்புருஷன் ஸ்வர்ணவர்ண முள்ளவனெனத் தெரிந்தது. இடை இடையே மேனோக்கித் தாடியையொழுங்கிட்டு மாரோடு மார்பாய் தடவிக்கொடுத்து போஷித்து வந்த வலதுகையின் விரற்களினின்றும் அவர் சரீராகிருதி ஒருவாறு ஊகிக்கலாயிற்று.

“ஆக்பர் பொர்சுக் கடிதம் கொடுத்திருக்கிறாரா பிரதான்” எனச்சக்ரவர்த்தி கேட்க, திம்மராயரும் “பிரபோ, இதுதான், நான்

வைத்திருப்பதுதான்'' என்று சொல்லித் தன் கையிலிருந்த கடிதத்தை அரசன் கையிற்கொடுத்தனர். அக்கடிதத்தை விரித்து கிருஷ்ணராயர் வாசிக்க வாரம்பித்தார். அக்கடிதம் இந்துஸ்தானியில் எழுதப்பட்டிருந்தது. அப்பாஷையில சக்ரவர்த்திக்கு மிகத்தேர்ச்சி ; ஆயினும் இச்சரிதம் வாசிப்போர்களுக்கு ஒருவேளை அந்தபாஷை தெரியாமலிருக்கக்கூடுமென நினைத்து நாம் இங்கு மொழிப்பெயர்த்து எழுதுகிறோம்.

கடிதம்.

"அல்லாவின் தாடியின் கிருபையினால் (அரசன் நகைக்கின்றனன்) தட்சிணதேசம் முழுவதும் ஆண்டுவரும் நமது சகோதரராகிய கிருஷ்ணராயருக்கு நபிகளின் அருளும் முகம்மதின் கடாட்சமும் உண்டாவதாக.

"நம் சகோதரர் கொடுமையான சுரத்தினால் வருத்தப்படுவதாகத் தெரியவந்தது. அதைக் கேட்டு வருத்தமடைந்தேன். இருந்தபொழுதிலும் நம்மாலாவது ஒன்றுமில்லை. அல்லாவின் மனதின்பிரகாரம் யாவும் நடப்பது திண்ணமெனவே முகம்மதுவும் சொல்லியிருக்கின்றனர்.

"இக்கடிதம் கொண்டுவரும் சையிட் அப்துல்லா வைத்தியத்தில் மகாநிபுணர். நமக்கு அவர்தான் அரண்மனைவைத்தியர். அவருடைய யோக்கியதையைப்பற்றியும் சாமர்த்தியத்தைப்பற்றியும் நாம ஜாஸ்தியாக எழுத வேண்டியதில்லையென்று நம்புகிறோம். அவ்விஷயங்களை நம்சகோதரரே பரிட்சித்து அறிந்துகொள்ளலாம். கூடிய சீக்கிரத்தில் நம்சகோதரரை சுரத்தினின்றும் சுவஸ்தப்படுத்தும்படி அல்லாவைப் பிரார்த்திக்கும்

அக்பர்."

இக்கடிதத்தை யரசன் புன்னகையுடன் வாசித்துவிட்டுப் பின்பு முன்னிருந்ததுபோல் அதை மடித்துக்கொண்டே தன் பிரதானியைப்பார்த்து "திம்ம, அக்பர் கடிதத்தின் மரியாதையையும் கம்பீரத்தையும் பார்த்தீரா? இவ்வளவு பெருந்தன்மை துருஷ்கசக்ரவர்த்திக்கு இருப்பது உலகத்திற்கு ஓர் ஆச்சரியமாயிருக்கின்றது."

திம்மராயர்.—பிரபோ, இத்துருஷ்கசக்ரவர்த்தியின் பெருமையை என்னென்று சொல்வேன். இராச்சிய தந்திரத்தில் மகாநிபுணர். குடிகளுக்கு சிநேகர். சத்துருக்களுக்கு சிம்மம்; துஷ்டர்களுக்கு கண்ட

கன்; சிஷ்டர்களுக்கு பரிபாலகன்; தயை, தாட்சண்ணியம், ஜீவகாருண்ணியம். வீரம் யாவும் அவரிடத்தில் குடிகொண்டுள. சைன்னியம் நடாத்துவதில் சமானரகிதன். தேகபலாட்டியமும், கம்பிரமும் பார்ப்போருக்கு அச்சத்தை யுண்டுபண்ணத்தக்க நயன தீட்சண்ணியமுமுடையவர்.

கிருஷ்ணாராயர்.—திம்ம, நீரவரைப்பார்த்திருக்கின்றீரோ.

திம்மராயர்.—இல்லை, அரச, அதை நாம் ஊகித்துக்கொள்ளக்கூடாதா? கண்ணாடி எப்படி முகத்தின் பிரதிபிம்பத்தை விளக்கிக்காட்டுகின்றதோ அப்படியே அரசர்களின் செங்கோன்மை, கொடுங்கோன்மை யாவும் பிரஜா வாக்கினால தெரியவரும். ஆக்பர் புகழ்ச்சியே இந்துஸ்தானத்தவர் மனதிலும் வாக்கிலும் உள்ளது.

கிரு.—எவ் இரக்கமின்றி கொள்ளையடிக்கும் டைமர் வம்சஸ்தவன் அல்லவா?

திம்ம.—இருந்தாலென்ன? கள்ளியின்வயிற்றில் அகில் பிறப்பதில்லையா?

கிருஷ்ண.—அதினாற்றான் நான் இத்துருக்க வைத்தியனையும் இப்பொழுது வைத்தி

யம் செய்யத்திர்மானம் செய்யப்போகின்றேன்.

திம்ம.—பிரபோ! அதற்கும் இதற்கும் கொஞ்சங்கூட சம்பந்தம் இல்லை. ஒரு அரசன் தன் தேயத்தில் நல்லவனாக இருக்கக்கூடும். ஏனைய தேயத்தரசர்களுடன் பழகும்பொழுது சாம-தான-பேத-தண்டம் என்பதில் ஒரு தந்திரத்தைப் பிரயோகிக்கக்கூடும். பிரஜைகளை கண்ணுக்குக்கண்ணாகப் பார்த்துவந்த அநேக அரசர்கள் வஞ்சனையினால் மாற்றரசர்களை வென்று ஜயமடைந்ததை நான் கண்கூடாகப்பார்த்திருக்கின்றேன். ஆதலின் தாங்கள் தயவுசெய்து இத்துருஷ்கவைத் தனை மரியாதையாக நீக்கப் பிரார்த்திக்கின்றேன்.

கிருஷ்ண.—திம்ம! என்ன பிதற்றுகிறீர். அவ்வீரனுடைய நல்லெண்ணத்தை ஒருவிநாடியளவும் சந்தேகிப்பதே மன்னிக்கக்குறைவு அன்றோ. இத்தகைய பெருந்தன்மையரைப்பார்த்திலேன். அப்படியிருந்தபொழுதிலும் என்னுயிரல்லவா போகின்றது. நீரென்னத்திற்கு இவ்வளவு ஆத்திரப்படுகின்றீர். (இதைச்சொல்லிவிட்டு,

திம்மர் என்ன மறுமொழி பகர்வாரென அறிந்தவர்போல், தலைதுனிந்து புன்னகை நகைத்தனர்.)

திம்ம—அரச, இம்மாற்றம் பகர்வது அறிவுடையோர்க்கு அழகன்று என நான் பலதரம் தங்களுக்குச் செப்பியிருக்கின்றேன். தங்கள் உயிர் தங்களுடையதல்ல. விஜயநகரத்துப் பிரஜைகளது. தாங்கள் கண்டபடி தங்கள் உயிரை அபாயத்திற்கு உட்படுத்துவீர்களேயாகில் நான் என்னுயிரை இலட்சியம் செய்யாமல் தங்களை அப்படிச்செய்வதினின்றும் தடுப்பதற்கு சித்தனுயிருப்பேன். (இம்மாற்றம பகன்ற பொழுது திம்மராயர் கண்கள் படபடத்தன.)

கிருஷ்ண.—திம்ம! க்ஷமிக்கவேண்டும். நீர் சொல்லுகிறபடி செய்யத்துணிவேன். ஆயினும் இத்துருக்கவைத்தியனை நீக்குவது தர்மமன்று. நீங்களே இவனைப் பரீட்சித்தபிறகு வைத்துக்கொள்ளுவதற்கும் நீக்குவதற்கும் தீர்மானம் செய்வீர்.

திம்ம.—(முறுவலித்து) நல்லது! (துருக்கவைத்தியனைப் பார்த்து) சையிட் அப்டல்லா சாகிப்பு! உமக்கு நம் சக்ரவர்த்

தியின் நோயைத்தீர்ப்பதற்கு தைரியம் உளதோ?

டையிட்.—அமைச்ச, இதைக்காட்டிலும் பதின் மடங்கு அதிகமான குரூர வியாதிகளை யான் அல்லாவின் அருளால் தீர்த்திருக்கின்றேன். இப்படித்தான் முன்னம் ஒரு தடவை—

சிருந்தனா.—ஆ. ஆ. போயினன், சிவ, சிவ.—(எனக்கதறி, தலையிணையில் சோகித்து விழுந்தனர்.)

கம்ப.—(கால்கள் தடதடக்க, மனம்பதறி) என்ன செய்வேன்! மயக்கம்போயிருக்கிறதே! நாராயணா, அரண்மனை வைத்தியரை அழைத்துவாபோ.

அருக்கவைத்தியர்.—அமைச்ச, தயவு செய்து கொஞ்சம் உத்தரவு கொடுக்கவேண்டும். கண்மூடிக் கண்திறப்பதற்குள் இம்மயக்கத்தை எவ்விடம் போக்குகின்றேன் என்பதைப்பாருங்கள். அதிகமாகப்பேசினதினால் களைப்புற்று விழுந்தனர். இன்னம் (தாதுவைப் பரீட்சித்துக்கொண்டே) சுரமும் வேகமாக வீசுகின்றது.

திம்ம.—நல்லது, மருந்துகொடும். அரைநாழிகைக்குள் இம்மயக்கத்தைத் தீர்க்கவேண்டும்.

சையிட்.—(இதைக் கேட்டவுடனே, தன் சட்டைகளின் கூட்டத்தில் புதைந்துகிடந்த ஒரு சீசாவை யெடுத்து வலது கையில் பிடித்துக்கொண்டு நெற்றியளவு தூக்கி "பிஸ்மல்லாஹிம், பிஸ்மல்லாகீம், நர்தமேயகோர நபிமதமேயகோரா" என்ற மந்திரத்தை ஜபித்து இடது கரத்திலிருந்த, சிறு பாத்திரத்தில் அவ்வவுஷதத்தைப் பெய்து, திம்மராயரிடத்தில்கொடுத்து அரசனுக்கு ஊட்டும்படி செப்பினன்.

திம்மராயரும் அப்படியே செய்தனர். பத்து விநாடி யாவரும் வாய்திறவாது இருந்தனர். உடனே அரசன் கண்விழித்து "ஆ, என்ன வியர்வை, பசிக்கின்றது, பால்" என, பக்கத்திலிருந்த பாத்திரத்திலிருந்து பாலைப்பெய்து அரசனுக்கு அமைச்சன் கொடுத்தனன்.

சையிட் அப்டல்லா அமைச்சனைப்பார்த்து இன்னும் ஒருதடவை அவுஷதம் அளித்தால் அரசனுக்கு சுரம் மட்டுக்கட்டுமென்றும், நித்

திரை ஏாஸ்தியாக வருமென்றும் சொல்லி வர் புறத்தி மறுபடியும் முன்போலவே மந்திரப் ரயித்து வேறொரு மருந்தில் அரை சா அளவு கொடுத்தனன். அதை வாங்கி சாப்பிட்டதட் சணமே அரசன் நித்திரை வருவதாகச் சொல்லி படுக்கையில் சாய்ந்து தூங்க வாரம் பித்தனன்.

சையிட்.—திப்பமீர! தயவுசெய்யவேண்டாம். நான் போய்வருகிறேன். இனிமேல் கவலையில்லை. தூங்கி எழும்பொழுது வியாதி நீங்கி அரசன் விழிப்பார். அல்லாவின் அருள் வீண்போகாது.

திப்ப.—சையிட்! உம்மைப் பூராவாக நம்பி இக்காரியத்தில் இறங்கிவிட்டேன். ஏதாவது கெடுதி நேரிடுப்பட்சத்தில் என்னுயிர்போவதுடன் உம்முடைய தலைக்கும் வந்துவிடும்.

சையிட்.—மகாராஜ அது நானறியேனோ? சக்ரவர்த்திகளுக்கு வைத்தியஞ்செய்து கூழைப்பாடியாயிருக்கின்றேன். இதோ அரைநாழிகைகழித்து வருகிறேன். உத்தரவுகொடுக்கவேண்டும் (போகின்றார்.)

இவ்வதிகாரத்தை முடிப்பதற்குமுன் ஒரு மாற்றம் பகரவேண்டியிருக்கின்றது. நமது புதுவைத்தியர் சையிட் அப்டல்லாவுக்கு தமிழ் தெரியவே தெரியாது. இருந்தபொழுதிலும் இச்சரிதம் வாசிப்போரின்பொருட்டு அவர் சம்பாஷணை முழுவதையும் இந்துஸ்தானியிலிருந்து மொழிபெயர்த்தனம். இனிமேலும் அப்படியே செய்வோம்.

---

## அதிகாரம்—9.

நாம் இப்பொழுது கர்னாடக தேசத்தரசன் கூடாரத்திலிருக்கின்றோம். அக்கூடாரம் ஸ்தூலமாகவும் விசாலமாகவும் இருந்தது. அதின் மேல்மண்டபம் ஆகாயத்தைப்போல் நீலவர்ணமாய் சித்திரிக்கப்பட்டிருந்தது. அங்குமிங்கும் வெண்மேகங்கள் பறந்தன. சிறுபட்சிகள் பந்தயம் போட்டுக்கொண்டு மேகமண்டலம் வரையில் பறந்துபோயின. மேகங்களின் இடையேநின்று சூரிய கிரணங்கள் வீசின. இவ்வாகாயம் நாலாபக்கமும் பரந்து பூஞ்செடிகளில் சார்ந்து படிந்தது. இப்பூங்கொடிகளை இடை இடையே அநேக தேவகன்னிகைகள் தாங்கினர். இம்மாதுகளின் பாதங்கள்யாவும் தாமரை மலர்களில் வீற்றிருந்தன. அக்கூடா

ரத்தின் கீழ்த்தரையோ பளிங்குக்கற்களினால் இழைக்கப்பட்டிருந்தது. மேலாகாயமும் அதன் மேகங்களும் பட்சிகளும், சூரியனும் நழுவித்தவறி இதற்குள் விழுந்து விட்டன போல் தோன்றிற்று. இல்லாவிடில் அது தெளிந்த நீரையுடைய தடாகமாக இருக்கவேண்டும்; அதில் மேலுள்ள ஆகாயம் பிரதிபலித்திருக்கவேண்டும்; என்று பார்ப்போர் நினைக்கும்படி நிருமிக்கப்பட்டிருந்தது.

அவ்விராஜ சபையில் நடுவே வீற்றிருந்தவர் தான் கர்நாடக தேசத்தரசர். அவர் பார்வைக்கு மிக ஸ்தூலித்த சரீரமுடையவர். தாமே தன்னிடுப்பிலுள்ள அரைஞாணைப் பார்க்கக் கூடவில்லையே எனப் பலமுறை விசனமுற்றிருக்கின்றனர். நாளுக்கு நாள் அவர் அங்கி பெருத்துக்கொண்டு வருவதைப் பற்றி உள்ளுக்குள்ளே சந்தோஷப்பட்டிருக்கிறார். தன் சிம்மாசனம் உலகத்திலுள்ள அரசர்களின் சிம்மாசனத்தைக்காட்டிலும் பெரிதாகவும் பலமாகவுமிருப்பதைக் குறித்து அடிக்கடி பெருமை பேசுவதுண்டு.

இவரது வலது பக்கத்தில் வீற்றிருந்தவர் கோள மகாராஜனாகிய இராமச்சந்திரவர்மா.

இடது பக்கத்தில் வீற்றிருந்தவர் விசுவனுத நாயக்கர். இவர்களின் பக்கத்தில் புடைசூழ்ந்து மந்திரிகளும் சேனுதிபதிகளும் இருந்தனர்.

கோளத்தரசர் (இராமச்சந்திரவர்மர்).—தாங்கள் சொல்லுவது மிகவும் சரிதான். தங்களுடைய சைன்னியத்தின் சௌரியத்தினுற்றுன் கிருஷ்ணராயருக்கு ஜயம் கிடைத்தது.

கர்னுடகதேசத்தான்.—நம்முடைய தேசம் உங்கள் நாட்டிற்கெல்லாம் வடக்கே யிருப்பதினுல் நம்முடைய நன்மையை நீங்கள் கோரிக்கொண்டிருக்கவேண்டியது. இல்லாவிடில் நாம துருக்கருக்கு இளைத்தாலாவது அல்லது அவர்களுடன் சமாதானமாவது செய்து விட்டாலாவது துருக்க சைன்னியம் திரண்டு உங்கள் இராஜ்ஜியத்தின்பேரில் படையெடுத்து வந்துவிடும். இப்பவும் என்ன? என் சேனையில்லாவிடில் கிருஷ்ணராயர் கிருஷ்ணராயர்தான். முன்னமே இராஜ்ஜியத்தை இழந்திருக்க வேண்டும்.

விசுவநாதன்.—பலராமரே, தாங்கள் சொல்லுவதில் கொஞ்சங்கூட பிசகில்லை. ஆனுல்

தாங்கள் செய்த நன்றியை யறியக்கூடிய வறு கிருஷ்ணராயன்? அது இல்லை.

ஸோமசந்திரன்.—நாங்களிருவரும் இரண்டு தினத்திற்கு முந்தி கிருஷ்ணராயனைப் பார்க்கப்போயிருந்தோம்.

பலராமன்.—போயிருந்தீர்களா? போகவேண்டியதுதான்.

ஸோ.—ஆமாம். போயிருந்தோம். அப்போது கிருஷ்ணராயன் சண்டையினாலுண்டான செலவைப்பற்றிப் பேசும்போது தன் சிற்றரசர்களுக்குக் கப்பம் ஜாஸ்தியாக ஏற்படுத்தவேண்டியிருக்கும் என்றனன்.

விசு.—முக்கியமாக கர்னாடகத்தரசனுக்குத்தான் ஜாஸ்தியாகக் கப்பம் ஏற்படும்போலிருக்கிறது என்று சொல்லவில்லையா?

ஸோ.—நீர் ஒட்டைவாயாச்சுதே. நாமதை யேன் சொல்லவேண்டும். மித்திரபேதம் செய்தான் என்ற கெட்டபேர் நமக்கெதற்கு. நமக்கு கிருஷ்ணராயரும் சரிதான், பலராமரும் சரிதான்.

விசு.—ஆனாலும் கிருஷ்ணராயருக்காகத் தன் சைன்னியத்தை பலிகொடுத்த பலராமர்

மேலில் அக்கிருஷ்ணராயனுக்குக் கொஞ்சங்கூட விசுவாசம் வேண்டாமா?

பல.—அப்படிக்கூட கிருஷ்ணராயன் சொன்னான்: அப்பேர்ப்பட்டவன் அல்லன் என நினைத்திருந்தேனே.

ஜோ.—உமக்குக் கொஞ்சங்கூட கபடம் என்பது இல்லை, அரசர்களுக்கு எல்லா தந்திரமும் தெரிந்திருக்கவேண்டும்.

விசு.—கிருஷ்ணராயனுக்கும் கொஞ்சம் பயந்தான். நம் மூன்று பெயருடைய சைன்னியங்களும் ஒன்றுசேர்ந்தால் தான் ஒருவேளை தோற்றுப்போகலாம் என்றது அவன் மனதில் நன்றாகப் பதிந்திருக்கிறது.

ஜோ.—அப்படி நம் சைன்னியம் சேரப்போகிறதும் இல்லை. கிருஷ்ணராயன் கர்வம் அடங்கப்போகிறதுமில்லை.

பல.—ஆனால் தங்களுக்கு அப்படிச்செய்வதில் மனம் இல்லைப்போல் தோன்றுகின்றது. இருந்தாலும் நீர் கபடர்.

ஜோ.—ஒருநாளும் இல்லை. பலராமரே, உங்கள் மனதிற்கு விரோதமாக நான் நடப்ப

துவிட்டோம். நமக்குள் ஒற்றுமையில்லா விடில் நாம் அழிந்தோம்.

வாசு.—இப்பொழுதுமட்டும் கிருஷ்ணராயருக் கும் பலராமருக்கும் கைகலக்கும் பட்சத்தில் என் சைன்னிய முழுவதும் பல ராமர்பக்கம் சேர்ந்துவிடாதா?

நெர.—தாங்கள் செய்த நன்றியை கிருஷ்ண ராயன் நினைக்கவில்லையே என்பதுதான் எனக்கு மனவருத்தத்தையுண்டுபண்ணு கின்றது.

வாசு.—நல்லதிருக்கட்டும். அப்படித்தான் தங் கள் உதவியினால் சண்டைசெய்து ஜய மடைந்தனனே; பிறகு என் தங்கள் கொடியிருந்தவிடத்தில் தன் கொடியை நாட்டி அதற்குப்பக்கத்தில் உங்கள் கொடியை நாட்டியிருக்கின்றனன்.

பல.—அதைப்பற்றி மன்னிக்கவேண்டுமென்று எனக்குக் கடிதம் எழுதியிருக்கின்றனன். அது என் உத்திரவின்பேரில் செய்த விஷயந்தான்.

நெர.—பிரபோ, அப்படிச் செய்வதற்குக் கார ணம் என்ன?

பல.—கிருஷ்ணராயன் தன் கொடி தன் கூடாரத்திற்குமுன்பு இருக்கவேண்டியதென்று நினைத்ததினால் அப்படிச் செய்தனன்.

விசு.—இப்பொழுது தங்கள் துவஜம் எங்கே யெனத் தெரியுமோ?

பல.—ஏன். அதன் பக்கத்திலேயே நாட்டப் பட்டிருக்கிறது.

இரா.—இதெல்லாம் உதாசினமன்றோ? நல்லது நாட்டியும் இரண்டையும் சமதையாக ஊன்றக்கூடாதா? உயர்ந்த பூமியில் தன் துவஜத்தையும் அதற்குச்சற்றே தாழ்ந்தபூமியில் தங்கள் துவஜத்தையும் நாட்டியிருக்கின்றனன்.

விசு.—கிருஷ்ணராயன் துவஜம் தென்றலில் கம்பீரமாகத் தன் இறகை விரித்துப் பறக்கும்போது தங்கள் துவஜம் அதன் கீழ் நின்று தலைகுனிந்து நாணி நின்றது.

பல.—எனக்கு என்ன சொல்லுவதெனத் தெரியவில்லை. என்னை இதுவரையிலும் ஒருவரும் உதாசினமாகப் பேசினதுமில்லை, நடத்தினதுமில்லை. பாம்பரையாக கர்னாடக தேசத்தை யாண்டுவந்தோம். நாங்கள் எங்கள் பிதா தலைமுறைவரையில்

யொரு கட்டிளைதேயில்லை. இப்பொழுது தான் கிருஷ்ணராயர் காலத்தில் நான் அப்படிச் செய்யும்படி நேரிட்டது. நல்லதிருக்கட்டும். நாமேன் அக்கொடியைப் பிடிங்கி யெறியக்கூடாது.

விச.—தங்கள் யோசனைக்குப் பழுதுண்டா. அப்படிச்செய்தால் என்ன? நான் சொன்னது உறுதிதான்.

பல.—"ஆமடா அப்படியா. சுந்தரம் சைன்னியத்தைக் கொண்டுவா."

எனச்சொல்லி படபடப்புடன் பலராமன் தன் சிம்மாசனத்தை விட்டு எழுந்து தன் சேனாதிபதியாகிய சுந்தரராயன் முன்னே செல்ல தனக்குப் பின்னால் அரண்மனை யுத்தியோகஸ்தர்கள் யாவரும் தொடர்ந்துவர, கிருஷ்ணராயர் கூடாரத்திற்கு முன்பாக விருந்த துவஜஸ்தம்பத்திற்கு படபடத்த மீசையுடனும், வெடவெடத்த காலுடனும் சென்றனன். கர்னாடக தேசத்தரசன் சைன்னிய வீரர்கள், உத்திரவு கேட்டவுடனே, டமாரம். பேரிகை டக்கா, முதலிய வாத்திய முழக்கத்துடன் துவஜஸ்தம்பத்திற்குப் போயினர். விசுவநாத நாயக்கனும், இராமச்சந்திரனும்

கூட்டத்தினின்றும் பின்னழுவி மறைந்துபோயினர். பலராயனே துவஜஸ்தப்பத்தினிடத்திற்குப்போய் கிருஷ்ணராயர் கொடியைப் பிடுங்கி எறிந்துவிட்டு அக்கொடியிருந்தவிடத்தில் தன் கொடியை நாட்டினன்.

## அதிகாரம்—10.

துருக்க வைத்தியன் சையிட் அப்டல்லா கொடுத்த அவுஷதம் மகா மகிமையுடையது. அது கொடுத்த தட்சணமே நித்திரைபோன அரசன் ஐந்து நாழிகை அயர்ந்துதூங்கி எழுந்தனன். பிறகு கிருஷ்ணராயருக்கு வழக்கம்போல சுரம் வரவேயில்லை. பத்தியமும் தாராளமாக சாஸ்தியாக சாப்பிட்டார். தனக்குத் தேகத்தில் அவ்வவுஷதத்தினால் உலக்ஷமும் உண்டாயிருப்பதாகவும் சொன்னார். இப்பொழுது தன் கரத்தில் பிரகதாரண்ணிய உபநிஷத்தை வைத்துக்கொண்டு பார்த்துக் கொண்டிருந்தார். திடீரென கூடாரத்தின வெளியே அபரிமிதமாக சத்தம் கேட்கவே, அரசன் தன் பக்கத்தில் நின்ற அமைச்சனைப் பார்த்து அது என்ன என்று பார்த்துவரும்படிச் செப்பினர். அப்படி யுத்தரவுபண்ணி

வாய்மூடுமுன்னமே விசுவநாத நாயக்கன் கூடாரத்திற்குள் நுழைந்து சக்ரவர்த்திக்கு வந்தனம்பண்ணி முன்னே நின்றனன். அவனைப்பார்த்து சக்ரவர்த்தி அச்சப்தத்தின் காரணம் யாதெனவினவ அதற்கவர் "அரச, கேட்கவேண்டும்: கர்னாடகத்தரசன், தங்கள் துவஜம் தன் துவஜத்தின் மேலிருக்கத் தகுந்ததில்லையென அதைப் பிடுங்கிக்கொண்டிருந்தனன். நான் அங்கிருக்கலாகாதென இங்குவந்துவிட்டேன்" எனச் சக்ரவர்த்திக்கு மறுமொழி சொல்ல,

உடனே கிருஷ்ணராயன், ஆலகாலவிஷம் தீண்டிவந்ததுபோல், மகாகோபத்துடன் தன்பக்கத்திலிருந்த கதையைக் கையிலெடுத்துக்கொண்டு எழுந்து கூடாரத்திற்கு வெளியே போயினன்.

கிருஷ்ணராயர் சரீரமோ மெல்லியதான காச்மீர தேசத்து மஸ்லினால்மட்டும் கவசப் பட்டிருந்தது. கையிலுள்ள கதையைத் தவிர அவரிடத்தில் வேறு யுத்த சின்னங்கள் இல்லை. திம்மராயர் கவசாத சரீரத்துடன் வெளியே யுத்தத்திற்கு அரசன் போவதைப்பார்த்துப் பயந்து தானும் பின்னே யோடினர். விசுவநாதநாயக்கனைப்பார்த்து "என்ன உமக்கு

யோசனையில்லை. சக்ரவர்த்திக்கு சரீரம் மெலிந்திருக்கும் சமயத்திலா இப்படி வந்து ஆத்திரம் வரும்படி சொல்லுகின்றது" என்று திம்மராயர் கடிந்து பேசினர். சக்ரவர்த்தி ஆவேசக்கிராந்தராய்ப் போவதை கூடாரத்தின் வெளியே நின்று பார்த்த வீரசேனன் உடனே தன் சைன்னியங்களுக்குத் திரண்டு வரும்படி யுத்தரவு பண்ணித் தானும அரசன் பின்னே சென்றனன்.

உடனே கூடாரமுழுவதும் ஒரு களியுண்டாயிற்று. சிலர் துருக்கர் கூடாரத்திற்குள் படையெடுத்து வந்துவிட்டார்கள் என்றனர். சில இராணுவ உத்தியோகஸ்தர்கள் "என்னத்திற்காக வீரசேனர் சேனையைத் திரட்டிவரும்படி யுத்தரவு பண்ணியிருக்கக் கூடும். ஆக்பர் தான் கூடாரத்தில் நுழைந்திருக்கவேண்டும்" என்றனர். வேறு சிலர், "கொடியில்நெருப்புப் பிடித்துக்கொண்டதாம்" என்றனர். இன்னும் சிலர், பலராமர் யுத்தத்திற்கு வந்திருக்கிறாராம் என்றனர். இவ்விதமாக ஒவ்வொருவரும் தங்கள் தங்களுக்குத் தோன்றிய பிரகாரம் இவ்விஷயத்திற்குக் காரணம் கூறினர்.

இத்தருணத்திற்குள் கிருஷ்ணராயர் துவஜஸ்தம்பத்தைச்சேர்ந்து அங்கே நாட்டப்பட்

ளே கர்ணுடகச்சேத்ரசத்ராசர் கொடியைப்பிடுங்கித் தன் காலின் கீழே போட்டுத் தேய்த்தான். உடனே இதைப் பொறுக்கக்கூடாமல் கர்ணுடகசேசத்ராசன் சேனதிபதியாகிய சுந்திராமன் தன் வாளையுருவி கிருஷ்ணராயர் கழுத்திற்கு நேராக ஓங்கி வீச்சாக வீசினன். இவ்வெட்டிற்குச் சக்ரவர்த்தி தப்பிப்பது அசாத்தியம். ஏனெனில் சுந்திராமன் வாள் யுத்தத்தில் தேர்ந்தவன் அதுவும் தவிர மிகவும் நன்ருகக் குறிபார்த்து வீசினன். என்ருலும், சக்ரவர்த்தியின் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த வீரசேனன் உடனே அவ்வீச்சைத் தன் கேடயத்தால் தாங்கித் தன் வலது கரத்திலுள்ள கத்தியினுல் ஓங்கி வெட்டிச் சுந்திராமன் சிரசைப் பிளந்தனன். அரை க்ஷணத்திற்குள் துள்ளின சுந்திராமன் தலை பூமியிலுருண்டது. சக்ரவர்த்தியும் "பலே, சபாஷ்! வீரன் நீயே. என்னுயிரை நீ கொடுத்தனை" என வீரசேனனைப்பார்த்து மெச்சி, அவ்விடத்திலேயே வீரசேனனுக்கு "மகாராஜன்" என்னும் பட்டங்கொடுத்தனன். இனிமேல் நாம் வீரசேனனை "சுபேதார் பஹதூர் வீரசேன மகாராஜன்" என அழைக்கவேண்டியது.

சக்ரவர்த்தி வீரசேனனைப்பார்த்து "சுபேதார் பஹதூர் வீரசேனா, நீ இதுவரையில் சுபேதாராய் இருந்ததோடுகூட இப்போழுது உனக்கு மகாராஜனெனப் பட்டங்கொடுத்தேன். இக்கர்நாடக நாய்கள், பிறகு இராத்திரி ஒருவேளை வந்து இத்துவஜத்தை முகர்ந்து பார்க்கும். அதற்கு இடங்கொடாமல் இங்கேயிருந்து காத்துக்கொண்டுவருவாய். என்னுடைய கீர்த்தியை நாட்டியவன் நீயே. இவ்விடத்தை விட்டு அசையக்கூடாது. பிறகு நடக்கவேண்டிய விஷயத்தைப்பற்றி யாலோசித்துக்கொள்வோம்" எனச்சொல்லிச் சக்ரவர்த்தி கூடாரத்திற்குத் திரும்பிப்போயினன்.

கர்நாடகதேசத்தவர்களும் தலைகுனிந்துக்கொண்டு தங்கள் கூடாரத்திற்குச் சென்றனர்.

---

## IV.

## அதிகாரம்—11.

---

தேவர்கள் யாவரும் ஒன்றுசேர்ந்து வெவ்வராவினைக்கொண்டு மந்தரம் பிணித்துக் கடல் கடைந்திடுங்காலை அவ்வெண்டிரையுயிர்த்த செம்பதுமை வாணுதல்போல் திங்கள்

விண்ணில் உதித்தனன். அவன் தன் செழுங் கதிர்க்கரங்களாலே மாடப்பாக் தெரிவையின் அம்பரத்தைக்கடவ அவள் வெட்கி வெண்கதிர்ச் சுடரினை ஒளியுற அவித்தாள். அக்கருமத் தினை நோக்கி தாமரை நாணிக் கண் மூடியது. ஆம்பல் மெல்லிதழ் விரித்து நகைத்தது. மகிழ மரங்கள் பூத்தன. நட்சத்திரங்கள் புன்னகை கொண்டன.

சந்திரகிரணங்களால் வெட்டப்பட்ட இருட் துண்டங்களைப்போல் தருக்களின் நிழல்கள் படுத்தன. அல்லிமலர்களின் வண்டுகள் சேர்ந்திசைபாடும் காட்சியானது சந்திரன் தாக்கிய அளவில் சிதைப்பட்ட இருட்களா னவை வாய்விட்டுருகக்கொண்டு அச்சந்திரன் மேனி விபரீடத்து இரங்கிச்சொல்வனபோலு மிருந்தது.

இத்தகைய காட்சியுற்ற வெண்ணிலா இரவில் கிருஷ்ணராயன் பதாகை விண்ணளாவித் தென்றலில் சிறகைவிரித்துப் பறந்தது. இக்கொடி நாம் முன்னரே செப்பியவண்ணம் உந்நதமான குன்றத்தின்மீது நாட்டப்பட்டுள்ளது. அப்பதாகைமரத்தின் சமீபத்தில் அதனுடன் பிணிக்கப்பட்டு ஓர் சுவானம் படுத்திருந்தது. அதன் கருத்த சடையடர்ந்த சரீ

ரத்தின் மத்தியினின்று மின்மினிப் பூச்சிகளைப் போல் இரண்டு நயனங்களின் ஒளி வீசியது. தான் அங்கு வந்திருப்பதின் கருத்தும் தான் செய்யவேண்டிய கருமத்தின் தன்மையும் அந் நாய்க்கு விசதமாகப் புலப்பட்டது போல் தோன்றிற்று.

அந்நாய்க்குப் பக்கத்திலேயே முன்னும்பின்னுமாக வீரசேனன் உலாவிக்கொண்டிருந்தனன். யுத்தசாந்நித்தியமாய் உடையுடுத்து கம்பீரமான நடையுடன் உலாவிய அவ்வீரன் மனதில் பற்பல தோற்றங்கள் ஜனித்தன. அவன் வெளித்தோற்றத்தை வரைந்தேம், அவன் மனதில் உதித்த தோற்றங்கள்யாவை? எத்தன்மையன? எவரைக்குறித்து? இவ்விஷயங்கள் எமக்கு நன்றாகப் புலப்படவில்லை. என்றாலும இரவின் நிலைவையும், வீசும் தென்றலையும், வாசனைபுரிக்கும் புட்பங்களையும் நோக்கும்பட்சத்தில் இவ்வீரனுக்கு காந்திமதியைப்பற்றியே எண்ணங்கள் ஜனித்திருக்கவேண்டுமென்பது எம்முடைய அனுமானம்.

இத்தருணத்தில் எவையும நிசப்தமாயிருந்தன. ஆகாயமாகிய நீலக்கடலில் படகைப் போன்ற சந்திரன் துடுப்பின்றி ஓட்டுபவருமின்றி மேனோக்கிச்சென்றது. நிமிஷங்கள்

பறந்து நாழிகைபோயின. நாழிகைகள் ஹோரைகளாக விஸ்தரித்தன. உச்சியில் வந்தனன் நிசாகரன்.

அப்பொழுது கண்ணுக்கெட்டிய தூரத்தில் சின்னஞ்சிறியதாகிய யாதோ ஒரு உருவம் தோன்றியது. அது அதிவேகமாக கைகளை நீட்டிக்கொண்டு வீரனும் அவன் நிசித்தோழனாகிய சுவானமும் உள்ள இடத்தை நோக்கி வந்தது. அதைப்பார்த்து "பைரவன்" குலைத்தனன். "நான் பிணிக்கப்பட்டுள்ள சங்கிலியை யவிழ்த்துவிட்டால் உடனே போய் அவ்வுருவத்தைச் சின்னபின்னப்படுத்துவேன்" எனஜாடையினாலே வீரசேனனுக்குப் பலமுறைபைரவன் செப்பினன். வீரசேனனும் உலாத்துவதை யொழித்து தொடையில் தொங்கிய கத்தியின்பேரில் கைபடிய, அவ்வுருவத்தைநோக்கி விழிக்கலுற்றான்.

"யார் அது, யார், இத்தருணத்தில் காரணமின்றி நீ யிங்கு ஏகுவதென்னே? நீ நிசாசரனாயினும் உன்னைப்போக்க வல்லவன் யான். வீணில் உயிரிழத்தல் வேண்டாம். மறுமொழி பகரமாட்டாயோ." என வீரன் பகரவே அவ்வுருவம் சமீபத்தில் வந்துவிட்டதனால் கேட்டு நகைத்தது.

உருவம்.—வீரனே, இந்நாயைப்பிடித்துக்கொள்ளும். இல்லாவிட்டால் உமக்குச் சொல்லவந்தவிஷயத்தைச் சொல்லமாட்டேன்.

வீரசேனன்.—பைரவா வாய்மூடு. சித்திரக்குள்ளரே நான்தான் எனச் சொல்லக்கூடாதா? வாய்திறந்தால் முத்தம் உதிர்ந்துவிடுமோ? உம்முடைய பெயர் என்ன? மறந்துவிட்டேன்.

சித்திரக்குள்ளன்.—என் பெயர் விநோதன். என்னங்காணும் சொகுசாயிருக்கே யிங்கே.

வீர.—நல்லதிருக்கட்டும். உம்மை யிங்கே அனுப்பிவைத்தது யார்? எங்குவந்தீர், சொல்லு.

விநோதன்.—ஓய் என்ன மரியாதைதப்பினீர் "சொல்லு" என்று சொல்லுகிறீர்: நான் அரண்மனை விகடகவியெனத் தெரியாதோ?

வீர.—மன்னிக்கவேண்டும். வந்தகாரியமென்ன?

விநோ.—உம்மைக் காந்திமதி வந்து, போங்கணம்.—நீர் "சொல்லு" என்று அவமரியாதையாய்ப் பேசினது—

வீர.—அதான் மன்னிக்கவேண்டுமென்று சொன்னேனே; மேலே சொல்லும். காந்திமதி ஏதுசொன்னாள்?

விநோ.—காந்திமதி வந்து—வந்து—

வீர.—என்ன சொன்னாள்?

விநோ.—இருங்காணும் பதைபதைக்கிறீரே, நடந்துவந்த இளைப்பு மூச்சுவாங்கரது, வரேனிரும்.

வீர.—என்பேரில் கோபம்வேண்டாம். தயவு செய்து சொல்லும்.

விநோ.—காந்திமதி எ. எ. எ. எ. என்னை.

வீர.—என்ன செய்யச்சொன்னாள்?

விநோ.—அட ஏதடாது! திக்கல்வருகிறது கணம். பொறுமே. அப்படியாவது அவசரப்பட்டு சொல்லவேண்டுமென்பது எனக்கு என்ன கர்மசிரத்தை—நீர் எனக்கு என்ன தருகுரீர்.

வீர.—இந்தாரும். இதோ. இதை எடுத்துக்கொள்ளும் (ஒரு பணப்பையைக் கொடுக்க)

விநோ.—காந்திமதி இருக்காளோல்லியோ?

வீர.—சொல்லும்

விநோ.—அவ. வந்து வந்து. வந்து, வந்து.—

வீர.—என்ன? பணம் கொடுத்தபிறகும் இப்படியா செய்வது.

விநோ.—சரிதான்கணம். ஏதோ இந்தப்பணத்தை நீராக்கிகொண்டு கொடுத்துவிட்டீர். உமக்காக இவ்வளவுதூரம் நடந்துவந்ததற்குச் சரியாய்ப்போச்சு.

வீர.—எனக்குத் தெரியாதா அது? மேல்விஷயத்தைப்பேசும்.

விநோ.—ஓய் நான் சொல்லிக்கிண்டேபோறேன். நடுவிலே "சரிதான் கிரிதான், அப்படியாகிப்படியா" ஏதாவது சொன்னீரோ சங்கதியை நிறுத்திவிடுவேன். சொல்றேன் கேளும். பாருங்காணும் காந்திமதி இருக்காளோல்யோ, அவ வந்து. அவதாங்கணம், இராஜாப்பொண், உமக்குத்தெரியாதா அவதாங்கணம் இன்னு. என்ன முழுக்கிறீர்?

வீர.—சரிதான் மேலே சொல்லும்.

விநோ.—வந்துட்டீரே. சொல்லமாட்டேன். என்க்குத்தெரியுமே.

வீர.—இனிமேல் ஒன்றும் அப்படிச் சொல்லவில்லை. விஷயத்தைமட்டும் சீக்கிரமாகச் சொல்லிவிடும்.

விரோ.—தப்பிதம் என்று சொன்னால் சொல்லுகிறேன்.

வீர.—தப்பிதம். சொல்லும்.

விரோ.—கேளும். காந்திமதி உம்மைக்கண்டு தான் உடனே பழைத்துக்கொண்டுவரு வதாகத் தான் சொன்னதாக சொல்லச் சொன்னாள்.

வீர.—காந்திமதியா! என்னையா சொன்னாள்.

விரோ.—என்காணும் பேசினீர்.

வீர.—சங்கதி முடிந்துபோய்விட்டதேயென்று பேசினேன். இதெல்லாம் குற்றமா? என்னைத்தானா கூப்பிட்டாள் சொல்லும்?

விரோ.—ஆமாங்காணும் ஆமாம்.

வீர.—சொல்லியிருக்கமாட்டாளே. நாங்கள் இதுவரையில் ஒருவரையொருவர் நயனத்தினால் நோக்கினதேயொழியப் பேசினதில்லை. அப்படியிருக்க என்னைக் கூப்பிட்டிருப்பாளா? ஸ்திரீகளுக்கே மனது கல்லாச்சுதே. நான் நம்பவில்லை. உம்முடைய பேச்சை விகடமாகத்தான் நினைக்கிறேனேயொழிய நிசமாக நம்பவில்லை.

விநோ.—ஓய் நான் சொல்லுவதை நம்பமாட்டீரோ? இதோபாரும் இந்த மோதிரத்தை; இதைக்காட்டி யழைத்துவரச் சொன்னாள்.

வீர.—அதைத் தயவுசெய்து கொடும் பார்ப்போம்.

விநோ.—தரமாட்டேன். காட்டி யழைத்து வரச்சொன்னாளேயொழிய கொடுக்கச் சொல்லவில்லை.

வீர.—கொடுத்தாலொழிய எப்படி நான் அம்மோதிரம் இராஜகுமாரத்தியது என அறியக்கூடும்.

விநோ.—இந்தாரும். தொலைத்துக்கொள்ளும்.

வீர.—(வாங்கி முத்தமிட்டு) இதுதான். ஹோ பவித்திரமே, என்ன பாக்கியம் செய்தாய்! சதா காந்திமதியின் விரலிலிருக்க நீ முன்ஜன்மத்தில் கொடுத்துவைத்திருக்க வேண்டும். காந்திமதியைப் பிரிந்ததற்கு நீ வருத்தப்படவில்லையோ? ஓ பிரம்மனே! என் இம்மோதிரத்திற்கு நா படைக்கவில்லை. அப்படி நீ நா கொடுத்திருக்கும்பட்சத்தில் காந்திமதியின் எண்ணங்களை இம்மோதிரம் விசதமாகச் சொல்லுமே.

விநோ.—ஓய், என்ன பைத்தியம்பிடித்துவிட்டது. எனக்கு நேரமாய்விட்டது. உடனே புறப்பட்டுவாரும். மோதிரத்தைக் கொடும்

வீர.—அவசரப்படவேண்டாம். இன்னம் கொஞ்சம்நேரம் வைத்திருந்துவிட்டு பிறகு தருகின்றேனே. எனக்குப் பிரியமனாயில்லையே.

விநோ.—கொடுங்கணம் என்றால் என்ன (வெடுக்கென மோதிரத்தை வீரசேனன் கையிலிருந்து பிடுங்க.)

வீர.—விநோதரே நீர் மிகவும் கன்னெஞ்சர்.

விநோ.—சரிதான். "பெண்டாண்டியாத்தே பெரியாத்தே, அவன் திண்டாடி நிற்பான் சரியாத்தே." பைத்தியம், வாருங்காணும். வாரும்.

வீர.—நான் இப்பொழுதே வரவேண்டுமா ?

விநோ.—ஆமாம். கையோடே கூப்பிட்டுக் கொண்டு வரச்சொன்னாள்.

வீர.—காலையில் வரக்கூடாதா. இப்பொழுது நான் வர முடியாதே. இக்கொடியின் காவல் என் தலைப்பொறுப்பாச்சுதே.

விநோ.—நல்லது, வர முடியாதென்று நீர் சொன்னதாக சொல்லிவிடுகிறேன்.

வீர.—நிசத்தையல்லவா பேசவேண்டும்.

விநோ.—ஆமாம். யாரோ நிசத்தைக்கண்டார். வாரும்.

வீர.—போனால் திரும்பிவர நாழிகைசெல்லுமோ?

விநோ.—அது எனக்கு எப்படித்தெரியும்?

வீர.—வரத்தான்வேண்டுமோ?

விநோ.—எனக்கென்னங்காணும், வராவிட்டால் உம்மை இலட்சியம்செய்யமாட்டாள்.

வீர.—ஈசா, யான் என்செய்வது! இப்பொழுது கொடிக்கு ஹானி நேரிடும்பட்சத்தில என்தலைக்கு வந்துவிடும். நம்பிக்கைத் துரோகமாகும். ஆகையால் நான் போவது கூடாதவிஷயம். ஆயினும் என்ன? போய் உடனே திரும்பக்கூடாதா. என் பைரவன் எல்லாவற்றையும் சீராகப் பார்த்துவருவான். நான் இப்பொழுது போகாவிடில் காந்திமதி என்னை உல்லங்கனம் செய்துவிடுவாள்.

இவ்வித ஆலோசனைசெய்து கடைசியாக பைரவனைப்பார்த்து கொடியை சாக்கிரதை யாகப் பார்த்துவரும்படி சொல்லி சங்கிலியை யவிழ்த்துவிட்டு தட்டிக்கொடுத்தான். அந் நாய் வீரசேனன் சொன்ன விஷயங்களை நன்றாக அறிந்ததாக வாலைக்குழைத்து, அவன் கையை நக்கித் தெரிவித்தது. உடனே வீரன் சித்திரக்குள்ளனைப்பார்த்து "வாரும்" எனச் சொல்ல, விகடகவி முன் ஏக, வீரன் பின் ஏகினன். ஏகும் மார்க்கத்தில் ஒருவரோடொருவர் பேசவேயில்லை. கடைசியாக பற்பல கூடாரங்களைக்கடந்து, காந்திமதியின் பூங்காவனத்தை யடைந்தனர். அப்பூங்காவனத்தின் மத்தியில் ஒரு சிருங்காரமான அரண்மனை தோன்றிற்று. அக்கட்டடத்தினின்று பற்பல திபகிரணங்கள் வீசின. அரண்மனைவாயிற் சேர்ந்தவுடனே, சித்திரக்குள்ளன் வீரசேனனைப்பார்த்து "இங்கேயே இரும் உள்ளே போய்ச் சொல்லிவருகிறேன்" எனப் பகர்ந்து உள்ளே நுழைந்தனன்.

---

## IV.

### அதிகாரம்—12.

---

விசாலம்.—கமலா, இன்னம் சித்திரக்குள்ளன் வரவில்லையே. என்? நாழிகையோ ஆய் விட்டதே.

கமலம்.—ஒருவேளை வீரசேனன் வரமாட்டே னென்பகர்ந்திருப்பான். விநோதன் வார்த்தையாடிக்கொண்டிருக்கலாம். விகடகவியின் பேச்சை நம்பி எப்படி வீரன் வருவான், எனக்குத் தோன்ற வில்லை. அவ்வீரனுக்கு வேலையே பிரதானம். அதுவும் தவிர கிருஷ்ணராயர் முன்கோபத்தை நன்றாய் ஆலோசித் தறிந்தவன். ஆனதுபற்றி கொடியைய கன்று வரமாட்டான். வீரத்தையே பெண்மையாகக்கொண்ட வீரன் உன் தந்திரத்திற்கு உள்ளாவானா?

விசா.—கமலா, என்னையும் உன்னைப்போல் நினைத்துக் கொள்ளுகிறையோ? என் வலையில் அகப்படாதவர் யார். நமது இராணி சுலோசனையின்பேரில் கோபங் கொண்டிருந்த சிங்கப்போன்ற நமது

கிருஷ்ணராயரையே லலிதமான வார்த்தைகள்பேசி வசப்படுத்தினேன். அப்படியிருக்க வீரசேனன் எனக்கு ஒரு பொருளா? அதற்குத்தகுந்த ஏற்பாடுகளெல்லாம் ஏற்கனவே செய்திருக்கிறேன்.

கம.—அதென்னடியது? என்ன எனக்குச் சொல்லு.

விசா.—கொஞ்சம் வேடிக்கை பார்ப்போம்; நான் சொல்லுகிறேன், அதைக் காந்திமதிக்குச் சொல்லாதே.

கம.—இல்லை, சொல்லு பார்ப்போம்.

விசா.—இன்றுகாலமே காந்திமதி எண்ணை தேய்த்து ஸ்நாநம் செய்தாளல்லவா?

விசா.—அப்பொழுது தன்கை மோதிரத்தைக் கழட்டி என்னிடத்தில் வைத்திருக்கச் சொல்லிக்கொடுத்தாள்.

கா.—ஆமாம்.

கம.—அதைக்காட்டி யழைத்து வரும்படி விநோதனையனுப்பியிருக்கிறாயோ?

விசா.—பின்னை என்ன என்கிறாய்.

கம.—தெரியுமே, நல்லயோஜனைசெய்தாய்.

விசா.—சரி. இதோ வந்துவிட்டான், (விநோதன் வருகிறான்.) என்ன விநோதா சங்கதி, வீரன்வரவில்லையோ.

விநோதன்.—எமனுக்குத்தப்பின உயிருண்டா? நான்போய்வராத வீரனுண்டா?

கா.—எங்கேயிருக்கிறானடா வீரன்? விசாலம், வேடிக்கை வினையாகமுடிந்துபோகும் என்று நினைக்கிறேன். காந்திமதி கண்டால் கோபித்துக்கொள்வாள்.

இவ்விதமாக இவர்கள் சம்பாஷித்துக் கொண்டிருக்கும்போது அடுத்த அறையிலிருந்து காந்திமதி திடீரென இச்சேடிகளிருந்த அறையில் புகுந்தனள்.

வசந்தகாலத்தின் இரவானதினால் காந்திமதி தன் இடையில் ஒரு சன்னமான பாவாடையுடுத்தியிருந்தனள். அவ்வாடை மிகவும் தழைந்து பாதங்களையும் கவர்ந்தது ஆயினும், அன்னபட்சிகள் மூழ்கிமூழ்கித் தடாகங்களினின்று கிளம்புவதைப்போல், காந்திமதி நடக்கும்போது அவள் பாதங்கள் பாவாடையின் மூட்டத்தினின்றும் இடையிடையே வெளிப்பட்டன. அப்பாதங்களில் அவள் அணிந்துள்ள சிலம்பு கலீர் கலீர் என்று கட்டியங்

கூறி அவள் வரவைத் தெரிவித்தது. அவள் மேலே யணிந்துள்ள "தாவணி" மார்பையும் தோட்களையும் இடுப்பின் முன்பாகத்தையும் மாத்திரம் கவர்ந்ததினால் ஏனைய பாகங்கள் கண்ணுக்கு விரதமாகப் புலப்பட்டன. அவள் புஜங்கைகள் ஸ்வாணச்சாயல் வீசின. பார்ப்போர் முகம் தெரியும்படி அவ்வளவு தேஜஸ் உமிழ்ந்தன. அவிழ்த்திருந்ததினால் தொடையளவுபாவிக் கிடந்த தழைந்த கூந்தலின் கருப்பினாலும், இருபுருவங்களின் நிறத்தினாலும் அவள் முகத்தின் தங்கநிறம் மிகவும் அதிகரித்தது. சந்திரனைத்தோற்கடிக்கும்படியான அவள் தாமரை முகத்தில் இடையிடையே மின்னற்கொடிபோல் புன்சிரிப்புத் தோன்றிற்று.

ஸ்திரிகளும் பார்த்து மோகிக்கக்கூடிய அவ்வளவு ரூபமுள்ள காந்திமதி அவ்வறைக்குள் பிரவேசித்தவுடனே கமலம் விசாலத்தின் முகத்தைப்பார்த்து நகைத்தனள். அதற்கு விசாலம் இடி இடி யெனச் சிரித்து உத்தரங் கூறினள். இதையெல்லாம் பார்த்த காந்திமதி பாதி சிரிப்பும் பாதி கோபமும் கொண்டவளாய் சேடிகளைப் பார்த்து "நீங்கள் இருந்தாலும் மிகவும் வஞ்சனையாளர். இரவும்

பகலும் ஒன்றே; யாதுகாரணைப்பற்றி நகைக்கிறீர்கள்" என்று கோபித்து விநோதனைப் பார்த்து "சித்திரக்குள்ளா சங்கதி என்ன உண்மையைச்சொல்லு" என,

விநோதன்.—"இராஜ இராஜாத்தி, என்னைத் தயவுசெய்து கேட்கவேண்டும். நான் சொல்லவேண்டும், நீங்கள் கேட்கவேண்டும்.

சாந்தபத்.—சொல்லடா சீக்கிரம்.

விசாலப்.—அடே சொன்னைபோ உன் உயிர் உன்னுடையதல்ல. பத்திரம்.

சாந்.—பயப்படாதே சொல், நானிருக்கிறேன்.

விநோ.—இதென்னடாது. சண்டைக் கிடாவுக்கு நடுவே அகப்பட்டுண்ட நரியாட்டமா இருக்கிறேனே. நான் ஆருக்கின்றாது.

சாந்.—விசாலப், இதெல்லாம் உன் விஷயமே. என்ன செய்தாய் சொல்லு.

விநோ.—அம்மா நான் பாட்டுப்பாடுகிறேன், அதிலிருந்து அறிந்துகொள்ளுங்கள்.

சாந்.—பாடு பார்ப்போம்.

விநோ.—

"மோதிரமே, மோதிரமே, மோசம்நீயே போகாதே
மோதிரமே; மோதிரமே, மோசம் நீயே, போகாதே"

சாதனங்கள் பலவெல்லாம்
நீ தானேயே முடிப்பிப்பாய்
வேதனைகள் அறுந்திட
நாதனையே சேர்ந்திடுவாய்.

மோதிரமே, மோதிரமே, மோசம் செய்ய போகாதே, போகாதே (குதிக்கிறான்).

காந்திமதி.—போதும். தெரிந்தது. விசாலம், என் மோதிரம் எங்கே? காலமேகொடுத்தேனே.

விநோதன்.—இன்னம் புரியவில்லையா. அம் மோதிரம் வீரசேனனிடத்தில் இருக்கிறது.

காந்.—அடாடா எப்படிப் போச்சுது? அவ் வீரன் எங்கே? ஆகா, கமலா, விளையாட்டிற்கும் வினைக்கும் பேதம் தெரியாத குழந்தைகள் ஆனீர்களே. விநோதா, வீரன் எங்கே.

விநோ.—நான் உங்களுடன் விகடம்பண்ணக் கூடாது. வீரனு. வீரன்வந்து,—

காந்.—சொல்லடா சீக்கிரம்.

விநோ.—வெளியேயிருக்கிறார்.

இவ்வார்த்தையைக் கேட்டவுடனே, மறுமொழி பகராமல் காந்திமதி வெளியேவந்து

வீரனென்னுடை தோன்றினள். அப்பொழுது, கொடியின்னலைப் பார்த்துக் கண்கூச்சமடைந்தவர்களைப்போல் அவளை நிமிர்ந்து நிமிர்ந்து பார்த்து வீரன் தலை குனிந்தனன். கார்த்திபதி கம்பீரமாய் அவன் முன்னின்று சம்பாஷிக்கலானாள்.

கார்.—மகாராஜ். தாங்கள் கொடியின் காவலை விட்டு எப்படிவந்தீர்கள்; என் தகப்பனார் அறியும்பட்சத்தில் இராஜ்ஜியத்தை விட்டுத் தங்களை நீக்கிவிடுவாரே. ஸ்திரீகள் வார்த்தையை நம்பலாமா? சீக்கிரம் கொடியின் ஸ்தானத்திற்குச் செல்லுங்கள்.

வீரசேனன்.—மோதிரத்தைப் பார்த்ததும் வந்தேன்; அதுவும் தவிர, உடனே வாராவிடில் உல்லங்கனம் செய்யப்படும் எனச் சித்திரக்குள்ளன் சொன்னதினால் அவசரப்பட்டுவந்தேன்.

கார்.—மோதிரம் எங்கே, தங்களிடத்திலிருப்பதாகச் சொன்னானே.

வீர.—இல்லை. விநோதனிடத்திலேயே இருக்கிறது. இவ்விடத்தை விட்டு ஏக எனக்கு மனமில்லை, என்னுள்ளம்—

காந்—வீரசேனமகாராஜ், உம்முடைய வீரத்தையும், தைரியத்தையும் மெச்சினேன். உம்முடைய எண்ணங்கள் வீண்போகா. சீக்கிரம் கொடியிருக்கும் இடத்திற்குச் செல்லும். இல்லாவிடில் உம்முயிர்போம். உம்முயிருடன் என்னுயிரும்போம்.

என்று சொன்னவுடனே வீரன் திரும்பி வந்தவழியைப்பார்த்துச் செல்லலுற்றான். காந்திமதியும் சேடிகளின் அறைக்குட்சென்று கண்டபடியெல்லாம் அவர்களைக் கோபித்துக்கொண்டனள். அவ்விராமுழுவதும் காந்திமதிக்கு நித்திரையே இல்லை. தன் பெயரும் மோதிரமும் ஆகிய காந்தத்தினால் வீரனைத் தன்னிருப்பிடத்தினின்றும் ஆகருஷித்ததைப் பற்றி இராமுழுதும் வருத்தப்பட்டாள். தன் தோழியர்களை வைதாள். இடை இடையே, அதினால் வீரன் மனதை யறிந்ததைப்பற்றியும் சந்தோஷப்பட்டாள்.

---

## அதிகாரம்—13.

வீரன் அதிவேகமாய் காந்திமதியின் கூடாரத்தையகன்று கொடியின் ஸ்தலத்திற்குச் சென்றனன். நடந்து போகும்போதே, காந்திமதியைப் பார்த்ததும் அவள்சொன்ன மறு

மொழியும் அவ்வீரன் மனதில் தோன்றித் தோன்றி அவனுக்குச் சந்தோஷத்தை உண்டு பண்ணின. காந்திமதியின் மனதை யறிந்து கொண்ட விஷயத்தில் தனக்குமிஞ்சின பாக்கியவான் உலகத்திலில்லை யென்பதே வீரனுடைய எண்ணம். சிற்சில சமயங்களில் நடுவழியில் நின்று காந்திமதிசொன்ன வார்த்தைகளைச்சொல்லி சந்தோஷப்படுவான். சற்று ஆலோசிப்பான். சக்கரைதின்னவன் நாக்கைத் துலாவி ருசியறிவதைப்போல் தன் ஆசைநாயகியின் மாற்றங்களை நினைத்து நினைத்து தேகப் புளகிதங்கொண்டனன்.

கடைசியாகச் சோழன் பதாகை யிருக்கும் இடத்திற்குவரும்பொழுது கோழி கூவலாயிற்று. ஏதோ உறுமல் கேட்டது. பைரவன் வாலைக்குழைத்துவந்து ஆபத்து ஒன்றுமில்லை எனச்சொல்லுவான் என்கிற எண்ணத்துடன் வீரன் குன்றத்தின்மீதில் ஏறியபோது, கொடியைக்காணோம்; பைரவன் மூச்சின்றி பிணமாய்க்கிடந்தான்; அவன் சரீரத்திலும் ஐந்து ஆறு காயங்கள் புலப்பட்டன. அவைகளினின்று செந்நீரோடியது.

வீரன் இக்காட்சியைப் பார்த்தான்; திகைத்தான்; விழுந்தான்; புரண்டான்; அழுதான்:—

ஏ பைரவா. எவர் இங்கே வந்தனர். எப்படிக் கொன்றனர், யுத்தகளத்திலும் என்னைவிட்டுப் பிரியமாட்டாயே! யுத்தத்திற்கும் பயப்படமாட்டாயே! உன்னை எப்படி சத்துருக்கள் ஜயித்தார்கள்? உன் சரீரத்தில் ஈட்டியினால் என்ன வருத்தப்பட்டாயோ? நான் ஊணிட்டு உறவுடன் வளர்த்த உன் சரீரம் உயிரற்று இரணப்பட்டிருப்பதை சகிக்கக் கூடவில்லையே என்று புலம்பினான். ஸ்திரீஜாதியைப்போல் திடீரென அழுகைதப்பற்றி தானே வெட்கங்கொண்டு புலம்பலை நிறுத்தினான். யுத்தகளத்தில் உயிரைக் திரணமாய் மதிக்கும் வீரன் தன் சுவானம் இறந்ததற்கு ஸ்திரீகளைப்போல புலம்பினது நமக்கே ஒரு ஆச்சரியமாயிருக்கின்றது.

பிறகு வீரன் தரையினின்றும் எழுந்து காயப்பட்ட நாயின் பக்கத்திலேயே அங்குமிங்கும் உலாத்தினன். சமுத்திரத்தில் ஒரு அலைக்குப்பின் வேறொரு அலைதொடர்ந்து வருவதைப்போல் அவன் மனதில் பற்பல எண்ணங்கள் ஒன்றுக்கொன்று முரணித்தோன்றின. வீரன் நடப்பான், நிற்பான், கீழே குனிந்து நாயைத்தடவுவான்; மறுபடியும் முன்போல் முன்னும் பின்னும் உலாவுவான்;

ஈசனை நோக்குகொள்வான்; தன் கண்ணீரைத் துடைப்பான்.

"ஆ ஹா, நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கின்றதே. மனிதன் எண்ணங்கள் யாவும் அவன் இஷ்டப்பிரகாரம் பூர்த்தியாவதில்லை. பூர்ணசந்திரன் பிரகாசிக்கும் இரவில் மின்மினிப்பூச்சியைப்பார்த்து நட்சத்திரமென்றும் கிளிஞ்சலைப்பார்த்து வச்சிரக்கல் என்றும் திரித்துணர்வதின் நியாயமாயிருக்கின்றது. உலகவாழ்க்கையை சாசுவதமாக எண்ணியிருந்த மானிடர்களுக்குத் திடீரென பயன் தோன்றும்போது நடுக்கடலில் திசை தப்பின மாலுமிபோல் தியங்குகிறார்கள். ஆ ஹா ! என்ன ஆச்சரியம், சற்றுமுன் நானிருந்த சந்தோஷ ஸ்திதியென்ன, இப்பொழுது எனக்கு நேரிட்ட ஆபத்தென்ன. ஈசா, ஈசா, ஈசா, உன் செயல்கள் யாவும் மறைவினைகளே."

இவ்விதமாக வாய்விட்டுத் தனக்குத்தானே பேசிக்கொண்டிருந்தனன் வீரன். திடீரென அவன் பக்கலில் ஒருவன் தோன்றினன். வீரன் ஆழ்ந்த யோஜனையிலும் தற்சம்பாஷணையிலும் அமர்ந்திருந்ததினால் அப்புருஷன் வந்தவிதம் ஆச்சரியமாகவும் திடீரெனவுமே வீரனுக்குத்

தோன்றிற்று. அப்புருடனைப்பார்த்த அளவில வீரசேனனுக்குத் துக்கம் முன்னிலும் பதின்மடங்கு அதிகமாகி விம்மி விம்மி யழத்தொடங்கினன். அதைப்பார்த்து அப்புருடன் வீரசேனனைத்தழுவி, அவன் கண்ணீரைத் துடைத்து நடந்த வர்த்தமானங்களைச் சொல்லும்படி வேண்டிக்கொண்டனன்.

வீரசேனன்.—சையிட் அப்டல்லா, நான் இதுவரையிலும் ஒரு விஷயத்திற்கும் அஞ்சினதில்லை. யுத்தகளத்தை நான், என் தாய் மடியைக்காட்டிலும் அதிகமாக விரும்பினேன். ஆனால் நான் சகிக்கக் கூடாத ஒரு துக்கம் இப்பொழுது எனக்குச் சம்பவித்திருக்கிறது.

சையிட் அப்டல்லா.—வீரசேனரே, பயப்பட வேண்டாம். அவ்விஷயத்தை எனக்குச் சொல்லும். கொடிபோனவிஷயந்தானே.

வீர.—அது உமக்கெப்படித் தெரியும். நீர் அதை எப்படி யறிந்தீர்.

சை.—இது தெரியாதா. நேற்றயதினம் உம்மை கொடிக்குக் காவலாக வைத்த விஷயத்தை நன்றாக அறிவேன். இப்பொழுதோ இவ்விடத்தில் கொடியைக்

காட்டினும். அதனினுல் கொடி காணமற்போயி ருக்கவேண்டுமென்று அனுமானித் தேனேயொழிய வேறுவிதமாகத் தெரி யாது. கொடிபோன விஷயத்திற்கா இவ்வளவு விசனப்படுகிறீர்: உம்முடைய சரீரத்துச் சேதம்வருமென்று பயமோ?

வீர.—சைபிட், என்னுயிர் போவதற்குச் சமா னமாய்ச் சண்டையில் உன்னவர்களோடு யுத் தஞ்செய்து இறக்க மனமுள்ளவனுயினும், ஏற்றுக்கொண்ட கருமத்தை முடிக்காது அவமானத்தினுல் கவரப்பட்டுத் தண் டனையுண்டு இறத்தல் என் மனம் சகிக் காது. மேலும் என் பிராணசிநேகிதனு கிய இந் நாய் இறந்து பிணமாய்க்கிடக் கின்றது. நான் ஐந்து ஆறு வயதுச் சிறு வனுயிருக்கும்போது இந் நாயை எனக்கு இனாமாக என் தந்தை அளித்தார். அக் காலந்தொட்டு இந் நாய் என்னுயிர்த்தோ ழனுய் நித்திரையிலும் என்னை விட்ட கலாதிருந்தது. அதன் மரணமே எனக்கு ஆறாத்துன்பத்தை விளைவிக்கின்றது.

சை.—வீரசேனு, நான் சொல்வதைக்கேளும், இந் நாயை நான் எடுத்துக் கொண்டு போய் என்னிடத்திலிருக்கும் வைத்திய

ஜை.—அக்கவலை தான் உமக்கு வேண்டாமெனச்சொன்னேனே. எனக்கு நாழிகையாய்விட்டது. நான் இந்நாயை எடுத்துக்கொண்டுபோகிறேன். அல்லாவின் கருணையில் மனதை நிறுத்தி மன்னிப்புக் கேளும்.

எனச்சொல்லி வீரசேனனுக்கு தைரியமூட்டி இராஜவைத்தியனாகிய ஜைபிட் தன்னிருப்பிடத்திற்கேகினன்.

## அதிகாரம்—14.

இரவில் நடந்த கருமத்தின் அக்கிரமத்தைக் கேள்வியுற்று முகஞ்சிவந்து அச்செயல் நடந்த இடத்தினை நோக்கவருபவன்போல் ஆதித்தியன் உதயமாயினான். கிருஷ்ணராயனும் படுக்கைவிட்டகன்று பிராதஸ்நானஞ்செய்து காலைக் கடனை முடித்துவிட்டு இரவில்நடந்த விஷயங்களை வீரசேனன் சொல்லவருவான் என்கிற ஆவலுடன் ஒரு பொன் சிங்காதனத்தில் வீற்றிருந்தனன். பக்கத்தில் அவன் உயிரெனச் சொல்லக்கூடிய கதை சீறிக்கொண்டு படுத்திருந்தது. வலதுபுறத்தில் திம்மர் நின்று ஏதோ கடிதம் வாசித்துக்கொண்டிருந்தார். அரசன்

வீர.—சுவாமி, கொடியை யிழந்துவிட்டேன்.

கிரு.—அசாத்தியமான விஷயம். வீரசேனன் காவலை மிஞ்சிக்கடப்பவர் யாவர்? வீரசேனா உன் சௌரியத்தை மெச்சினேன்; நடந்த வர்த்தமான மென்ன.

வீர.—சக்ரவர்த்தி, உண்மையாகவே கொடியை யிழந்துவிட்டேன்.

கிரு.—நீ சொல்வதை நான் நம்பவில்லை, இதோ விசுவநாத நாயக்கன் வருகிறார்; விசாரிப்போம்.—விசுவநாதநாயக்கரே, வாரும், என்ன சமாசாரம்.

விசுவநாத நாயக்கன்.—பிரபோ, கொடியைக் காணோமாம். எங்கும் வதந்தியாயிருக்கிறது. நானும் உண்மையறிய பதாகை ஸ்தலத்திற்குப்போனேன். கொடியைக் காணோம். இரத்தக்குறிகளிருக்கின்றன.

கிரு.—ஆஹா. வீரசேனா நீ சொல்வது நிசந்தானோ? அவ்விரத்தக்குறிகள் என்ன? நீ சத்துருக்களுக்கு உண்டு பண்ணிய இரணங்களின் அறிகுறியோ? வேறு யாது விஷயம்.

வீர.—பிரபோ, நான் இரவில் பூராவாகக் கொடியின் பக்கலில் இல்லை.

கிரு.—ஹா. ஹா, எங்கேபோகிறாய்.

விர.—வேறு இடத்திற்குப்போனேன்.

கிரு.—ஹா, பதிதா, நீ, போக்கிரி. உன்னை விருந்தாக அழைப்பினேனே! என் கதை பெண்கே, நீயிருந்தென்ன செத்தென்ன? உன்னை என் கதைக்கு இரையாக்கு வேன்.

திம்.—ஐயோ, என்ன, இப்படி. நீங்கள் இந்த அப்பாவின் உயிரை உங்கள் கையா லேயே வாங்குவதோ? கொலைபாதகர் கையில் ஒப்புவிப்பதை விட்டு நீங்களே கதையைச் சுழற்றி யடிக்கப்போகின்றீர் கள்.

கிரு.—உண்மைதான். இவனை இன்றையதி னம் மாலைக்குள் தூக்குப்போடுங்கள். நீ, நாயே. சோழநாட்டுத் துரும்பே என்முன் நில்லாதே. நற்குலத்தில் பிறந்தாலல் லவா பெருந்தன்மையிருக்கும். அற்ப நாய்க்குப் பெருமைவந்தால் அதை யறிய அதற்குச் சக்தியுண்டா? என் யசஸ்ஸைக் கெடுக்கவந்த பறையா! வெகுநாளாய் நான் காப்பாற்றிவந்த கீர்த்தியை நீ ஒரு நொடியில் உன் அற்பபுத்தியினால் போக்

கிறாயல்லவா? திம்மரே, நீர் சொன்ன தெல்லாம் நிசமே. இப்பேய்த்துரும்பை நம்பி நம் சைன்னியங்களை ஒப்புவித்தது மிகவும் முட்டாள்தனம்.—சி நாயே, க்ஷத்திரியவீரமில்லா பதிதா, மீசையைப் பாரடா, வெட்கமில்லையா?

திம்.—நான் சொன்னது உங்களுக்கு இப்பொழுதுதான் தெரிந்ததுபோலும். அற்பன் சொல் அம்பலமேறாது என்பதுபோல் நான் சொல்லுவது உங்களுக்கு விஷமாயிருந்தது. அவன் நிற்பதைப் பாருங்கள். ஏதோ மானத்திற்கு அஞ்சினவன்போல் குனிந்த தலை நிமிரவில்லை.

விசுவ.—பிரபோ, வீணாக இவனை இங்கு நிறுத்துவதில் பயனென்னை. சீக்கிரம் கொலையாளர்கையில் கொடுங்கள்,

கிரு.—விசுவநாதரே நீர் சொல்லுவது சரிதான். திம்மரே கொலையாளர்களிடத்தில் இப்பறையனைக்கொடும்.

(என்றுசொல்லி வாய்மூடுமுன்னே திம்மர் வீரசேனன் கழுத்தில் கையைக்கொடுத்து வெளியே தள்ளினார்.)

கிரு.—திம்மரே, நிறுத்தும்; இங்குவாரும். இப்பதிதன் நம்முடைய கீர்த்திக்கு இப்பொ

புதுநாளி லப்படித்தேனும். இதற்கு முன் நம் வைஸ்ணவியத்தில் நல்ல யுத்தம் செய்து இருக்கிறான். மேலும் நாம சொன்ன வார்த்தைகளுக்குப் பதில் பேசாது தலைகுனிந்து தன் குற்றத்தை யறிந்து படிந்து நின்றான்.

தீம்.—ஆகையால் இப்பொழுது இவனை மன்னித்துவிடவேண்டுமோ?

க்ரு.—இல்லை, இல்லை; நான் சொன்னவார்த்தைக்கு இரண்டு இல்லை. தூக்குப்போட வேண்டியதுதான். ஆயினும் இவனைத் தூக்குப்போடுவதற்கு முன்னால் தேவனைப்பற்றிப் பிரார்த்திக்கும்படி விடுங்கள்.

தீம்.—இவ்வளவு பெரிய குற்றம் செய்தவனுக்கு ஜபம் கூடவா? இவனுக்கு இவ்வுலகத்தில் கொலையும் மறுவுலகத்தில் நரகமுமேயொழிய வேறில்லை.

க்ரு.—திம்மனே, நாம் இவன் சரீரத்தைக் கொலைசெய்கிற ஒரு தண்டனைபோதும், அவன் ஆத்மாவையும் கொலை செய்ய வேண்டாம். அவன் ஸ்நாநம் செய்து பூஜைகள்முடிக்கவும், வேண்டுமானால் காசியபரிஷியினிடத்தில் பிராயச்சித்த

மும் செய்துகொள்ளும்படி உத்தரவு கொடுத்தேன். இவனை வெளியேகொண்டுபோம்.

திப்.—கொலைத்தண்டனையடைந்தவர்கள் பிராயச்சித்தம் செய்துகொண்டதை நான் இப்பொழுதுதான் கேட்டேன்.

சிரு.—நல்லதிருக்கட்டும். வெளியே கொண்டேகும்.

என்று சக்ரவர்த்தி சொன்னவுடனே திப்பன் வெளியேதள்ளிக்கொண்டு சென்றனன். சிவநாதனும் கிருஷ்ணராயனும்மட்டும் கூடாரத்திலிருந்தார்கள்.

## அதிகாரம்—15.

வீரசேனனின் அஜாக்கிரதையினால் தன் கீர்த்திக்கு ஹானி நேரிட்டதைப்பற்றி நினைக்க நினைக்க கிருஷ்ணராயருக்கு மனம் வெந்தது. "ஆக்பர் நமக்கு நேரிட்டவைகளை (இதுதான் கிருஷ்ணராயர் மனதில் தோன்றிய எண்ணங்கள்) அறிவானேயாகில் நம்மை எங்ஙனம் மதிப்பான். நம் சிற்றரசர்களோ வஞ்சனையாளர். பாண்டியன், ஒருவனே போதுமானவன். அவன் நம் சிற்றரசக்கிடைகளைக் காப்பதாக

இவ்விதமாகக் கிருஷ்ணராயர் தனக்குள்ளே எண்ணிக்கொண்டிருக்கும்பொழுது ஒரு பெரியவர் திடீரென இராஜ சன்னதியில் நுழைந்தார். அப்பெரியவரைப் பார்த்தமாத்திரத்தில் கிருஷ்ணராயர் "வாருங்கள், வாருங்கள்" என ஆவலுடன் மரியாதைசெய்து தனக்குப் பக்கத்திலிருந்த ஆசனத்தை எடுத்துப்போட்டு வீற்றிருக்கும்படி அப்பெரியவரைப் பிரார்த்தித்தனர். அவர் அப்படியே செய்ய அவரைப்பார்த்து "என் தந்தைக்குத் தந்தையாய் என்னைப் பாதுகாத்து இரட்சித்தருளும் என் கடவுளே, தாங்கள் இங்கு எழுந்தருள யாது தவஞ் செய்தேன்" எனப் பகர்ந்தவுடன், கௌதமர், "அரசகல்யாணா, நீ சுரத்தினால் வருத்தப்பட்ட சங்கதி நம்மாசிரமத்திற்கு வந்து இராஜஸ்திரீகள் சொன்னதினால் தெரியவந்தது. யாக, யக்ஞ தொந்திரவுகளினால் நான் இங்குவந்து பார்க்கக்கூடவில்லை. நான் இப்பொழுது உன்னிடத்தில் ஒன்றுகேட்க வந்திருக்கிறேன். அதற்கு யாது சொல்லுகிறாய்" எனப்பகர்ந்தனர்.

கிருஷ்ணராயர்.—பிரபோ அது யாதெனப்பகரிடில் தாசனேன், என்னாலியன்றதாயின், தலையாலே செய்யக் காத்திருக்கிறேன்.

சௌநகமு.—கிருஷ்ணா, நீ மிகவும் நியாயஸ்தன். சொல் தவறமாட்டாய். குருவினிடத்தில் மிகுந்த விசுவாசமுடையவன்.

கிரு.—அது தங்களது ஆசீர்வாதந்தான்.

சௌந.—உன்னிடத்தில் வீரசேனனென்னு ஒருவன் இருந்தானல்லவா?

கிரு.—பிரபோ, அவன் பெயரை இங்கு உச்சரிக்கவேண்டாம். அவன் நம்பிக்கைத் துரோகி. இராஜத்துரோகி.

சௌந.—இதென்ன சங்கதி? அவன் செய்தது எப்படித் துரோகமாகும். கிருஷ்ணா நீ மிகவும் நியாயஸ்தன். மனுதர்ம சாஸ்திரத்தை நன்றாக அறிந்தவன். நீயே இவ்விதம் சொல்லுவது எனக்கு ஆச்சரியமாயிருக்கின்றது. ஒருவன் ஒரு தகாத காரியத்தைச் செய்திடில் அவன் அக்காரியத்தை வாஸ்தவமாகவே துரோக சிந்தனையுடன் செய்தானா அல்லது நல்லெண்ணத்தோடு செய்து, அது பிள்ளையார்பிடிக்க குரங்காய் முடிந்ததாவென ஆராய்வதல்லவோ நியாயம். வீரசேனன் உனக்குத் துரோகம் உண்டுபண்ணவேண்டுமென்று செய்தவனல்லன்.

சௌந்த.—அரச, கடவுளுக்கு பிறப்பு வித்யாசமில்லை. சூரியகிரணங்கள் எப்படி மலமூத்திராதிகளின்பேரிலும் வச்சிர வைடூரியம் முதலிய ரத்னங்களின்பேரிலும் வித்யாசமின்றி விழுகின்றனவோ அது போல ஈசுவரகடாட்சம் எங்கும் பரவியுள்ளது. இவ் விரசேனன் தாழ்ந்த பிறப்பினன் என எண்ணவேண்டாம். கடவுக்கென்ன தெரியும். அவன் யோக்கியதையை யாதோ?

திரு.—என் ஆண்டவா, இவ்விஷயத்தை விடுங்கள். மனதோ புண்ணாகின்றது.

சௌந்த.—நீ எப்படியாகிலும் அவன் உயிரை மன்னிக்கவேண்டும்.

திரு.—பிரபோ, கேட்பவர் வேறு யாராகவாவதிருக்கும்பட்சத்தில் நான் உதவுவேன். என் ஆண்டவனேவந்து மன்றாடினல் நான் செய்வது யாது; நான் ஒருக்காலும் விரசேனனை மன்னிக்கமாட்டேன். வேண்டுமானல் அவன் உயிருக்குப் பதிலாக என்னுயிரை வாங்கிக்கொள்ளுங்கள்.

(எனக் கத்தியுருவித் தன் கழுத்தில்வைக்க,)

கௌத.—(கையைப் பிடித்துக்கொண்டு) கிருஷ்ணா போறு, போறு; என்னகாரியஞ் செய்யப்போகிறாய். உனக்குக்கூட இவ்வெண்ணம் எப்படித் தோன்றிற்று. தற்கொலை புரிபவற்கு நரகமல்லவா காத்துக்கொண்டிருக்கிறது. உன் துரெண்ணங்களை விடு. நான் வந்து விரசேனனுக்காக மன்றாடுவது உனக்குத் துன்பத்தை யுண்டுபண்ணுவதுபோற் றோன்றுகிறது. நீ இப்பொழுது முன்கோபத்துடனும் கொடுமையிழந்த வருத்தத்துடனும் இருப்பதால் என சொற் பலிதமாகவில்லை. நல்லதிருக்கட்டும்: நான் விரசேனனைப் பார்க்கின்றேன். நீ இடையில் ஆலோசித்து உன் பிரசாக்கினைக் கட்டளையை நீக்கிவிடவேண்டும்.

எனச்சொல்லி ஆசிர்வதித்து கௌதமர் வெளியே ஏகினர்.

---

## அதிகாரம்—16.

---

நாம் இப்பொழுது வந்திருக்குமிடம் காராக்கிரஹம். இராஜத்துரோகிகளும் மற்ற குற்றவாளிகளும் தாங்கள் தண்டனையுறும் வரையில்

ந்தே தஞ்சம். நான் ஆசை வைத்த மாதும் என் எண்ணத்திற்கு இயைந்து நல் மாற்றங்கள் பகர்ந்த தருணத்தில் எனக்கு இக்கதி கிடைத்தது. மானிடர்வாழ்க்கை நீர்மேற் குமிழி. இறந்தன பிறப்பதும் பிறந்தன அழிவதும் சுபாவமாயது. பொட்டிட்டு மையிட்டு முன்னின்று மயக்கும் சிற்றிடைச்சியர் ஆசை யாவும் புள்ளிமான்களைப்பிடிக்க வேடுவர் விரித்தவலையேயாம். இதை யறியாது மானிடர்கள் உலகவாழ்க்கையிலமிழ்ந்திடில் எமன் வருங்காலத்து பிரயாணம் புறப்பட ஆபத்தமாயிரார். ஏ என்னீச என்னீச"

எனப்பலவிதமாக வாய்விட்டுப் புலம்பி ஈசுவரனை நினைக்க,

உரைதடுமாறி என்புநெக்குருக உடலெலாம் மென்மயிர் பொடிப்ப, இருவிழியினின்றும் ஆநந்தக்கண்ணீர் பெருக, அகங்குளிர, உச்சி கூப்பிய கையினனாய், மோட்சவிதாயமாம் பஞ்சாட்சர ஜபபரனாய் நின்று வாய்விட்டு "ஏ, நிர்க்குண, நிரஞ்சன, பிரணவசொரூப, நாமரூபரகித, கைலாசசிகரவாச, உமார்த்தகிருதசேகர, மிருகவஸ்த, பஞ்சாநந, சந்திரசேகர, வியாக்ரசர்மாம்பரதர, பஞ்சகிருத்திய சம்பன்ன, அடியேன் பிழையைப்

பியத்தைக் கொள்ளானோ, எவனந்தர்ப்பகிசுகளி ரண்டும் ரசசாயுள்ள பிரமனாயிருந்து நிகிலமு நிருமிப்பனோ, எவனந்தர் தமசும் பகிர்சத்துவ மும் உள்ள விஷ்ணுவாயிருந்து புரப்பனோ, எவனந்தர் சத்துவமும்பகிர் தமசுமான ருத்திர னாயிருந்து அரைப்பனோ, எவன் குணத்திரயங் களை பெரீஇக்குண ரகிதனாய்த் திகழ்வனோ, எவன் பிரமாதி கப்பபரியந்தங்களாகிய பசுக் களை மலமாயாதிபாசங்களாற் கட்டிக் காரியங் களைச் செய்வித்துத் தான் பசுபதியாய் நிலவு வனோ, எவன் சகல பிரபஞ்சவந்தராத்மாயுள் ளானோ, எவன் ஜீவபேதமின்றி தன் காருண் ணியகிரணங்களை வீசுகின்றனனோ, அவன் கழற்றாமரைகளில் மனதைநிறுத்தித் தியானிப் பாய். நின்னை தூக்கில் போடும் தருணத்திலும், உடலுக்குங் குணங்கட்குமுற்ற விகற்பஞ்சால வுள; யாக்கையோ புல்நுனிமேல் நீர், குணமோ சிலையிலெழுத்து, என நன்கறிவாய். தாவர மாம் அண்டமும் சங்கமாம் பிண்டமும் சமா னமாகலின் பிண்டமாஞ் சரீரத்திலிடைக்கும் பிங்கலைக்கும் நாப்பணுள் சுழுமுனைநாடியும், பிரமாண்டத்திற் பரதக்கண்டத்தில் பழனி மலைக்கும் இமயமலைக்கும் நடுவணுறுவதும் பஞ்சசபைகள் வாய்ந்ததும், நித்திய நிஷ்கள

நிரஞ்சன நிராலம்ப வகண்டாகார சச்சிதா நந்த சுத்தசிவசொருபமத்தியில் எழுந்தருளிய சிதம்பரதேவன் பாதத்தினை ஒரு க்ஷணமும் மறக்காய்."

இவ்விதமாகக்கேட்போர் மனது கரையும்படி உன்னதமான நடையில் தத்வார்த்தங்களால் கருவுயிர்த்த மாற்றங்களில் கௌதமர் பிரசங்கித்தார். இன்னம் அவர்கள் மாயாப் பிரபஞ்சத்தின் தன்மையைப் பற்றியும் மனிதன் நிலைமையைப்பற்றியும் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்கள். இருந்த பொழுதிலும் நமக்கு அவையாவையும் இங்கு எடுத்தெழுத அவகாசமில்லை. இதற்குள் இராஜஸ்திரீகள் கூடாரத்தில் நடந்த வர்த்தமானத்தை எடுத்துச் சொல்லவேண்டியதா யிருக்கிறது.

---

## அதிகாரம்—17.

---

வீரசேனன் கொலைத்தீர்ப்பைக் கேட்ட அளவில் விசாலம் மனம்பதைத்து மூர்ச்சித்துக் கீழேவிழுந்தனள். விழும்போது "அடடா, நானிப்பாவத்திற்காளானேனே" என வாய் விட்டலறினள். கமலமோ ஸ்தம்பமாகத்

திகைத்து நின்றனள். இடை இடையே "எனக்கு இப்படி வருமென்று தெரியுமே" என்று சொல்லி கன்னத்தில் கையை வைத்து அதன்பேரில் தன் தலைப்பாரத்தை உறுத்துவாள். இதரவேலைக்காரர்களும் சேடிகளும் "சேனாதிபதி தூக்குக்குப் போகிறாராமே, என்ன அநியாயம். பாழுந் தெய்வத்திற்குக் கண்ணில்லையே" எனச் செப்பி வருத்தப்பட்டார்கள்.

சக்கிரவர்த்தியின் உத்தரவைக் கேட்ட பொழுது காந்திமதி திருவாசகம் வாசித்துக் கொண்டிருந்தனள். வேலைக்காரன் "அம்மா வீரசேனமகாராஜனா" எனச் சொல்லி முடிப்பதற்கு முன்பாக காந்திமதி "என்னடாது, என்னடா, என்னடா" என்று பதைபதைத்துக் கேட்க, சேவகன் "என் தாயே தூக்குப் போடும்படி உத்தரவுபண்ணியிருக்கிறார்" என்று முடித்தான்.

இதைக் கேட்டமாத்திரத்தில் இடியின் சத்தத்தைக் கேட்ட அரவம்போல் மயங்கி புஸ்தகத்தினால் முகத்தைப் போர்த்துக்கொண்டாள். இவ்விதமாக அரைநாழிகை சென்ற பிறகு புஸ்தகத்தை எடுத்து மேசையின்பேரில் எறிந்துவிட்டு பெருமூச்செறிந்தாள். அது

பெரிய மலைப்பாம்பின் சிரமலைப்போலிருந்தது. அவள் குவளைய நயனங்களினின்றும் முத்துக்களைப்போல் ஜலம் ததும்பியது. அவளை யறியாது அஜ்ஜலம் கண்ணாடியைப்போல் பிரகாசித்த கன்னங்களின் வழியாய்ப் பிரவாகித்தது.

சற்று இவ்விதியில் சலனப்பட்டுப் பிறகு சமேலென தன்னறையை யகன்று தன் மாதாவின் அறைக்குள் புகுந்தனள். சுலோசனை தன் மகள் கண்ணும் கண்ணீருமாய் வருவதைப் பார்த்து மனம் சகியாது எடுத்து மார்போடணைத்து மடியில் போட்டுக்கொண்டு "காந்தா, காந்தா, என்னடா பயலே, என்னடா, எனழுகிறாய், அய்யோ, சொல்லமாட்டேனென்கிறாயே, உனக்கு சுரம் வந்துவிடுமே, மிருதுவான சரீரமாச்சதே. காந்தம், என் மனம் சகிக்கவில்லை, சொல்லடியம்மா, உன் தந்தை யறியும்பட்சத்தில் என்னைத் திட்டுவார். நீ யழும்படி நான் உனக்கு குறை வைக்கவில்லையே" எனப் பலவிதமாக வினவினள். காந்திமதி தன் தலையை நிமிர்த்தி தன் தாயின் முகத்தோடு தன் முகத்தை யணைத்து "அம்மா, அம்மா" என விஷயங்களைப் பிறப்பிப்பதற்குமுன் துக்கம் அடைத்து அதில் சொற்களும் முழுகின.

இவ்விரு முகங்களும் ஒருமுகமாய்த் திரண்டது மந்தமாருதமாய்வீசும் தென்றலில் இரண்டு தாமரைகள் ஒன்றுபட்டதுபோலிருந்தது. அப்புட்பங்களின் தேனை யருந்தவந்த வண்டுகளாகிய நான்கு நயனங்களும் ஒன்றோடொன்று போர்புரிந்தன. இவ்விரண்டு கொடிகள் ஒன்றோடொன்று பின்னிக்கிடந்தபோது அவை விரிந்த தாமரைகளாகிய தலைப்பாரத்தைத் தாளாமல் சாய்ந்து மெத்தையில் விழுந்தன. இதைப்பார்த்து அங்குள்ள சேடிகள் சைத்தியோபசாரங்கள் செய்ய வாரம்பித்தார்கள். சிலர் காலை வருடுவார், சிலர் விசிறுவார், சிலர் பனிநீர் தெளிப்பார், சிலர் சாமரம் போடுவார்.

இவ்வுபசாரங்களினால் ஒருவாறு சுலோசனை தெளிந்து தன் குழந்தையை மடியில் மறுபடியும் போட்டு "என் கண்ணே, கற்பகமே, உன் குறையைச் சொல்லு; இவ்விராஜ்ஜியத்தையே உனக்காக உன் தந்தை இழப்பாரே" என வினவ,

சாந்தியந்.—"அம்மா, அம்மா, நான் சாகும்பரியந்தம் கன்னியாப்பெண்தான்" என்றாள்.

சுலோசனை.—அட நாயே, இதற்குத்தானா இவ்வளவு அழுகை! என்னிடத்தில் கூச்சப்

மடோமல் சொன்னதைப்பற்றி மெத்த சந்தோஷம். உனக்கென்ன இராஜாதி இராஜன் அகமுடையானாயாவான்.

காந்.—எனக்குப் புருஷன் இல்லை. யாரை நான் புருஷனாக வரித்தேனோ அவன் இறக்குந் தருவாயிலிருக்கின்றான். (எனச்சொல்லி விம்மியழ)

கலோ.—காந்தம, அடே முட்டாள், எனதுகுழப். அவன் யாவன். எனக்கு இன்னம் உன் வரனைச் சொல்லாமலிருந்திருக்கிறாயல்லவா, நீ மிகவும் போக்கிரி.

காந்.—அம்மா, நான் வீரசேனமகாராஜனைப் புருஷனாக வரித்தேன். அவனைத் தூக்குப் போடும்படி அப்பா உத்தரவு கொடுத்திருக்கிறாராம்.

கலோ.—ஆமாம், அத்துக்ககரமான செய்தியைக் கேட்ட தருணமுதல் எனக்கு ஆராத்துன்பத்தை விளைவிக்கின்றது. வீரசேனமகாராஜன் மகாசௌரியவான். மகா அழகன்; யோக்கியதை பூராவாக வுடையவன். ஆனாலும் அவன் இராஜ வம்சத்தில் பிறந்தவனல்லன். அவன்மேல் நீ ஆசை வைப்பது மயில் காக்கை

யின் இனத்தில் கல்யாணம் செய்வது போலாகும்.

சாந்.—அம்மா, நீ என்ன சொன்னபொழுதிலும் கேளேன். அவன் சௌரியமே எனக்குப் போதுமானது.

சுலோ.—நீ சொல்லுவது சரியாகத் தோன்றவில்லை. காந்திமதி, நீ எங்களுக்குக் கண்ணான ஒரே பெண். உன் புருஷன் இத் தென்தேசத்தை உன் தகப்பனுக்குப் பிறகு சக்ரவர்த்தியாக ஆள்வான். உன் தகப்பனார் எனக்கு அடிக்கடி சொல்லியிருக்கிறார். தன் மருமகனுக்கு இளவரசு பட்டங்கட்டி, தன் கண்ணால் பார்க்க வேண்டுமென்று பலதடவை சொல்லியிருக்கிறார். உன் புருஷன் வேறுதேசத் தாசர் குமாரனாயிருக்கும் பக்ஷத்தில் அவன் இரு தேயத்தையாள்வான். வல்லமை மிக்கோனாவான். என் மாணிக்கமே, உன் பிறப்பென்ன, உன் செல்வமென்ன, உன் தந்தை பராக்கிரமமென்ன: நீ எதோ அகதியாய் வந்த வீரசேனனுக்கு மனைவியாய்ப் போவது நம் குடிகளுக்கு சகிக்காது. அவர்கள் உன்னையே நம்பியிருக்கிறார்கள். நீ யொருநாள் விஜ

யநகரத்து வாசிகள் உன் தகப்பனாருக்கு விடுத்த விண்ணப்பத்தின்பேரில் விளையாட்டாக "உங்கள் விண்ணப்பம் கவனிக்கப்படும். நமக்கு உங்கள் நன்மையே சதா நினைவாயிருக்கின்றது. அதை யறியீர்கள். நம் தந்தை அரண்மனையில் இல்லாததினால் நாம் இவ்வுத்தரவு பிறப்பிக்கிறோம். இங்ஙனம், சக்ரவர்த்திக்காக காந்திமதி" என எழுதினதைப் பார்த்து குடிகள் வாழ்த்தினதையும் சந்தோஷித்ததையும் திம்மர் சொல்லியிருக்கிறார். என் கண்ணே, உனக்கு இராஜ்ஜியம் ஆளும் சக்தி வந்துவிட்டதென்றே உன் தந்தை தான் விஜயநகரத்தைவிட்டு சிற்றரசர் நாட்டுக்கேகும்பொழுது உன்னைத் தனக்குப் பிரதிநிதியாக நேமித்துப்போனார். திம்மர் உனக்கு இராஜ்ஜியம் நடாத்தும் விஷயத்தைக் கற்றுக்கொடுத்தபொழுதும் அதை நீ லளிதமாயறிந்தாயல்லவா? ஆகையால் உனக்குத் தகுந்த புருஷனல்லவா வரவேண்டும்.

கார்.--வீரசேனருக்கு இராஜ்ஜியமாளும் சக்தியில்லையோ? அப்பாதான் மிகவும் சமர்த்தனென்று அடிக்கடி சொல்லியிருக்கிறாரே.

சுலோ.—இருந்தாலும் தாழ் பிறப்பினன். நீ உன் எண்ணத்தைவிடு. போ, போ, முட்டாள்.

சாந்.—அம்மா, நானொருக்காலும் மாட்டேன்.

சுலோ.—நீயொருநாளும் அவனைக் கல்லியாணம் செய்யமாட்டாய். நீ அதிகப்பிரசங்கி. பெரியோர்களிருக்க நீயே வரன் தேடுவதோ?

சாந்.—நம் க்ஷத்திரிய ஜாதியில் அது தர்மந்தானென கௌதமர் சொல்லியிருக்கிறாரே.

சுலோ.—அதினாலென்ன போ முட்டாள். எங்களிஷ்டப்பிரகாரம்தான் நடக்கும்.

சாந்.—அம்மா, தயவுசெய்து மன்னிக்கவேண்டும். உங்களிஷ்டப்பிரகாரம் நடத்திக்கொள்ளுங்கள். பின்னை என்ன? உங்கள் குமாரத்தியை இழந்துபோவீர்கள். நான் புருஷனென அவரை வரித்துவிட்டேன். நான் என் எண்ணத்தை மாற்றமாட்டேன். கற்பின் இலட்சணத்திற்குக் குறைவு வந்துவிடும். கலியாண விஷயத்திலும் தாய் தந்தையர் தலையிட்டுக் கொள்ளும் அநியாயத்தை இவ்விந்து தேசந்தவிர வேறெங்கு மறியேன். வீர

சேனனுக்கு ஸௌந்தரியமும், சௌரியமும் கல்வியும், அழகும், அபாரமாயிருக்கிறது; வேறு என்னவேண்டியது. அவர் க்ஷத்திரியர். குடிப்பிறப்பு எனக்குவேண்டாதில்லை. நான்தியாக மாற்றமேன்! நான் வரித்த புருஷன் குருடனானாலும வேறொருபுருஷனை எதிர்த்துப்பாரேன். வீரசேனன் இறக்கும்பக்ஷத்தில் சாகுமளவும் கலியாணஞ் செய்யேன். இதென்ன அந்நியாயம். என் புருஷன் சரீரத்திற்கு நானல்லவா உடமைதார. அப்படியிருக்க நீங்கள் எங்களிஷ்டப்பிரகாரம் நடத்துவது நியாயவிரோதமல்லவா ?

சுலோ.—காந்தா, நீ என்ன, பிதற்றுகிறாய்.

காந்.—அம்மா. இது பிதற்றல்தான், நீங்கள் உங்கள் பெண்ணை யிழந்தீர்கள். என் புருஷன் வீரசேனன்தான். நான் இங்கு இல்லாவிடினும் சொர்க்கத்திலாவது காந்தத்தை இரும்பு சேருவதுபோல் அவரை அடைவேன். உங்கள் கெட்ட எண்ணம் உங்களையே தின்னும். (எனச்சொல்லி சரேலென அவ்வறையை அகன்று தன்னறைக்குள்போனாள்.)

கபேலா.—(தனக்குள்) "இது பிதற்றல்தான், விரசேனன்தான் என் புருஷன்." காந்தம் தன் மனதைத் தீர்மானம்செய்துகொண் டாள்போலும். விரசேனன் அழகில் தேர்ந்தவன். சௌரியத்தில் அவனுக் குச்சமானம் ஒருவருமில்லை. சைன்னி யம் நடாத்தும் விஷயத்தில் கைதேர்ந்த வன். இஜ்ஜனங்களடர்ந்த தென்தே யத்தை யாள வல்லவன்தான். ஆனால் அவன் பிறப்புமட்டும் தாழ்ந்ததாயிருக் கிறது. நாம் ஒருவாறு அரசனிடம் போய் அவன் உயிருக்கு மன்றாடுவோம்.

எனச்சொல்லித் தன் சேடியர்கள் மூலமாய் சேவகர்களுக்கு ஆள் அனுப்பி அவர்களிடத் தில் தான் அரசனைப்பார்க்க விருப்பங்கொண் டதாகச் சொல்லியனுப்பினாள்.

---

## அதிகாரம்—18.

---

கிருஷ்ணராயர் காலை போசனமருந்திக் கொஞ்சம் சிரமபரிகாரமாய் தங்கக்கால்களால் தாங்கப்பட்ட கட்டிலில் படுத்துக்கொண்டிருந் தார். அவர் பக்கத்திலேயே இருக்கிற நாரா

யவான் எதிரே தோன்றி "இராஜாதிராஜ! மகாராணி யவர்கள் வருகிறார்களாம். முன்னால் தெரிவிக்கும்படி கட்டளையாச்சுது." என்று சொல்லவே, சக்ரவர்த்தி "நல்லது: நீ சீக்கிரம் இவ்விடத்தைவிட்டுப் போ" என நாராயணன் வெளியே போயினான்.

கிரு.— (தானே பேசுகிறார்).

சுலோசனை வருகின்றாள். அவள் நம்மரண்மனைக்கு வருவது மிகவும் அருமை. நாம் அவள் இருப்பிடத்திற்கு வேண்டுமானால் போகவேண்டியிருந்திருக்கிறதே யொழிய சுலோசனை நம்மிடத்தில் இதுகாறும் வந்தவளல்லள். அவள் வரவில் ஏதோ விசேஷம் இருக்கவேண்டியது. ஆஹா! நம் பாக்கியமே பாக்கியம். இராஜரீக கவலைகளினால் களைத்து இருக்கும்போது நம்மிடத்தில் மிருதுவாய், தேனிலும் தித்திப்பான மாற்றங்கள் மொழிந்து நம்மைத்தேற்றுகிறாள். பொறுமையில் பூதேவிக்குச் சமானமானவள். நமக்குக் கோபம் வருந்தருவாயில் ஏறுமாறாகத் தானும் கோபியாமல் "சதா தங்களுக்குக் கோபந்தான், அதுவும் என்பேரில் ஜாஸ்தி" எனப் புன்னகை செய்து கோபத்தை யாற்றுவாள். சிலவேளைகளில் "உங்களுக்குக் கோபம்வந்தால் தாங்

குவேனு" எனப்பதைத்து ஓடிவந்து நம்மைத் தழுவி நம் கடுப்பை நீக்குவாள். அவள் முகத்தில் முறுவலிலாத நாள் நான் பார்த்ததில்லை. குடிகளும் அவளிடத்தில் மிகுந்த பிரியமுள்ளவர்களா யிருக்கிறார்கள். நாம் தயை கூர்ந்து செவிகொடோம் என்று அவர்கள் அறிந்தால் தங்கள் விண்ணப்பத்தை சுலோசனையினிடம் செய்துகொள்ளுகிறார்கள். காந்திமதியும் தன் தாயின் பொறுமையைக் கொண்டதோடுகூட அவள் தயையையும் கிருபையையும் அடைந்திருக்கிறாள். இதோ பல்லக்கின் சத்தம் கேட்கின்றது. சுலோசனை வருகின்றாள். அவள் இங்கு வரும்காரியம் யாதென அறிவோம்.

(சுலோசனை வந்தனள்.)

சுலோ.—(வந்ததும் அரசனைத் தழுவிக்கொண்டு) என் பிராணநாத், உங்கள் தேகம் மெலிந்திருக்கிறது, முகமும் மலர்ந்திருக்கவில்லை.

கிரு.—ஆமாம். எனக்கும் அப்படித்தோன்றுகிறது. காரணம் உனக்குத்தெரியுமோ, சுலோசனா.

சுலோ.—என்னுயிரே, பாம்பின்கால் பாம்பிற்குத் தெரியாதா? சுலோசனை வந்து தங்

களைத் தழுவிக்கொடுத்தால் தேகம் பருத்துவிடும். அதில்லாததினுற்றுன சரீரம மெலிந்திருக்கிறது.

கந.—அது உண்மைதான் சுமிலாசனு, வேறு காரணங்களுமுள. நம் தேயத்தைக் கைக்கொள்ளுவதற்கோ மிலேச்சர்கள் படையெடுத்து வந்திருக்கின்றனர். நம் சிற்றரசர்களுக்குள் ஒற்றுமையில்லாமல் என் பட்டத்திற்காக சம்பந்தம் பாவிக்கிருர்கள். என் கீர்த்திக்கும் கௌரவத்திற்கும் ஆண்மைக்கும் அறிகுறியாக வுள்ள பதாகையை சத்துருக்கள் திருடிச்சென்றனர். வெகுநாளாய் நம்பிக்கை வைத்து கௌரவப்படுத்தி என் வலதுகையாகப் பாவித்துவந்த என் தளகர்த்தன் என்னைக் காட்டிக்கொடுத்தனன். இவைகளுடன் உன்னுடைய புல்லுதலும் முத்தமும் அருமையாகப்போய் விடும் பட்சத்தில் என்கதி என்னுகும்! (என்று ஒரு முத்தங்கொடுக்க).

சுலோ.—என் மாணிக்கமே, வள்ளுவர் சொல்லியிருக்கிருர்.

காலத்திஞற் செய்த நன்றி சிறிதெனினும்
ஞாலத்தின் மாணப்பெரிது.

நானும் தங்கள் முத்தமின்றி சரீரம் குன்றி இளைத்திருந்தேன். அது நீங்க தக்க காலத்தில் இப்பொழுது தாங்கள் எனக்கு முத்தம் கொடுத்தது ஞாலத்தின் மாணப்பெரிதாகும். அதற்கு முற்றும் கைம்மாறு ஈய என்னால் ஏலாதபொழுதும் என்னாலியன்றதைக்கொடுப்பேன். இந்தாருங்கள். (என கிருஷ்ணராயரைப்புல்லி முத்தங்கொடுத்தாள்.)

கிரு.—சுலோசனே, நீ மிகவும் வஞ்சகி; எனது வலது கன்னத்திற்கு நீ முத்தங்கொடுத்த பொழுது நான் நகைத்தேன். அப்பொழுது என் இடது கன்னம் என் காதள வோடி "நான் என்ன பாவஞ் செய்தேன்" என்றது.

சுலோ.—(ஐந்தாறு முத்தம் மாற்றி மாற்றி கிருஷ்ணராயர் இரு கன்னங்களிலுங் கொடுத்து) என் கண்ணே, என் பிராணநாத், நம் சந்தோஷம் நீடித்து நாமிறக்குமளவும் சாசுவதமாயிருக்குமென்று எண்ணியிருந்தேன்; அதற்கு ஹானிவரும் போலிருக்கிறது.

கிரு.—என்ன, என் சுலோசனம், என்ன, விரைவில் சொல்வாய்.

சுலோ.—நம் காந்திமதி.—

கிரு.—சுலோசன, நம் குழந்தைக் கென்ன? காந்தத்திற்கென்ன? ஆ தெய்வங்காள், என்னுயிரைக்காப்பாற்றுங்கள்.

சுலோ.—பிரபோ, குழந்தைக்கு ஒன்றுமில்லை.

கிரு.—பின்னை, என்ன?

சுலோ.—தாங்கள் தளகர்த்தன் வீரசேனனைத் தூக்குக்கு உத்தரவு செய்திருக்கிறீர்களாம்.

கிரு.—ஆமாம். அவன் பதிதன். அதனாலென்ன!

சுலோ.—அவனை நம் காந்தம் புருஷனாக வரித்திருந்தாளாம்.

கிரு.—ஆ! என்னவேடிக்கை.

சுலோ.—பிரபோ வேடிக்கையில்லை. வினையாகத்தான் முடிந்திருக்கிறது. அவனைத் தூக்கில் போடும்பட்சத்தில் அவளை நாமிழந்தோமாம். அவள் வேறொரு புருஷனைப்பார்க்கமாட்டாளாம். இதற்கு நாமென்செய்வது.

கிரு.—சுலோசனா, நம் காந்தத்தின் அழகென்ன, அவள் கல்வியென்ன, அவள்

புத்தியென்ன. அவனுக்கு எற்ற பிரகாரம் நாம் ஒரு சக்ரவர்த்தியின் குமாரனை யல்லவா புருஷனாகத் தேடவேண்டும். அப்படியிருக்க நன்றியறிதலில்லாத பாத கியாயா, நம் காந்தம் புருஷனாக வரிப் பது.

கலோ.—என் பிராணநாதா, புருடர்களுக்கு ஸ்திரீகளின் வாதை தெரிவதில்லை. உல கத்தில் புருடர்கள் ஸ்திரீகள் கல்மாத் தர் எனவும் ஸ்திரீகள் புருடர்கள் கன் னெஞ்சர் எனவும், ஒருவரை யொருவர் குற்றஞ் சாட்டுவது வழக்கம். நம் குழந் தைக்கோ வயது பதினைந்தாய்விட்டது. விவாகப்பருவம் வந்துவிட்டது. அதைத் தாங்கள் கவனியாமல் வேறு விஷயங்க ளைக் கவனித்துக்கொண்டிருக்கிறீர்கள். நல்லது; நம் குழந்தை எற்கனவே வீரசே னன்பேரில் ஆசைவைத்ததினால் அவ னுக்கே நம் குழந்தையைக்கொடுத்தாலெ ன்ன? அவனுக்கு சௌரியம்போதாதா. அழகில்லையா, கல்வியில்லையா? இவ்விஷ யத்தைத்தாங்கள் ஆலோசிக்கவேண்டும்.

சந்.—கலோசனு, வீரசேனன் மகாவீரன் என் பதற்கு ஐயமேயில்லை. அவன் அதிபா

ரியன். மிகவும் கல்வித்தேர்ச்சியுடையவன். கம்பீரமான தன்மையையுடையான். இலட்சணத்தில் மன்மதன். ஆனால்.—

சுலோ.—அவன் பிறப்புமட்டும் தாழ் பிறப்பு என்கின்றீர்களோ?

ந.—என் நாயகி, இல்லை. பிறப்பு முக்கியமானதல்ல; மேற்கூறிய க்ஷத்திரிய இலட்சணங்கள், அவனிடத்தில் குடிகொண்டிருக்கும்பொழுது நாம் அவன் பிறப்பைக் கவனிக்கவேண்டியதில்லை. அவன் நம் பிள்ளைக்குத்துரோகி, கொஞ்சநேரத்தில் தூக்கில் மாட்டப்பட்டுத் தன் உயிரை இழப்பான். அப்படியிருக்க அவன் நம் காந்திமதிக்குப் புருஷனாவதெப்படி?

கிளியைவளர்த்துப் பூனைக்கிரைகொடுப்பதுபோல் நம் காந்திமதியை கைம்பெண் ஸ்திதிக்கு உள்ளாக்குவதா?

சுலோ.—அதுசரிதான். என் பிராணனே, காந்தத்தை சமாதானப்படுத்துவது அசாத்தியம். உயிர்வைத்திராள். நீங்கள் என் வீரசேனனை மன்னிக்கக்கூடாதா? அப்படிச்செய்தால் ஒருவாறு காந்திமதியை

சமாதானப்படுத்துவது சாத்தியமாகும். தாங்கள் முன்கோபத்தினால் கொடுத்த கட்டளையை மாற்றக்கூடாதோ? தாங்களே வீரசேனனின் கீர்த்தியைப்புகழ்கின்றீர்கள். ஏதோ தவறுதல் மானிடர்க்கியல்பு, அதையறியாது முன்கோபத்தில் உயிர்த்தண்டனை விதித்தல் அரசதர்மத்திற்கு அழகாகாது. "ஆய்ந்தோய்ந்து செய்யாதான் தான் சாவக்கடவதாகும்." இதையெல்லாம் ஆலோசியாது தன்தேசத்தைவிட்டு, மாற்றார் சைன்னியத்தை தன் சைன்னியமாகப்பாவித்துவந்து, மாற்றாசனைத் தன்னாசனாக வெண்ணி, வந்த வீரசேனனை தூக்குக்கு ஆளாக்குவதோ? பிராணநாதா! என்பேரில் தயைகூர்ந்து வீரசேனனை மன்னிக்கவேண்டும்.

கீந.—சுலோசனே, நீ உன் இராஜ்ஜியத்தின் வரம்புகடந்தனைபோலும். இராஜரீக விஷயத்தில் நீ தலையிட்டுக்கொண்டால் உனக்கு இன்ன தண்டனை கிடைக்குமென உனக்கே தெரியும். போ, உன் காரியத்தைப்பார்த்துக்கொண்டு, நட.

கலோ.—(தனக்குள் வெகுநேரம் யோசித்து விட்டு) என் கடவுளே, மன்னிக்கவேண்டும். தாங்கள் என்பேரில் கோபித்துப் பார்த்து ரொம்ப நாளாய்விட்டது. எப்படி மிக உஷ்ணமான சூரியகிரணங்கள் தாமரையை விகசிக்கச்செய்கின்றனவோ அப்படியே தாங்கள் என்பேரில் கோபித்துக்கொள்ளுவது எனக்கு ஆநந்தத்தை யுண்டுபண்ணுகின்றது. இது எப்படியாவது போகட்டும். எனக்கு வேறொரு விஷயமிருக்கிறது. அதைத் தாங்கள் எனக்கு சித்திக்கச் செய்யவேண்டும்.

சீநு.—என்ன சொல்லு.

கலோ.—"என்ன சொல்லு" என்று கோபமாகச் சொல்லுகிறீர்களே நான் தாங்குவேனு. (எனத்தழுவி முத்தங்கொடுத்தாள்.)

சீநு.—என் கண்மணி, இப்பொழுது சொல்லு, உன்பேரில் கோபமில்லை.

கலோ.—நான் சொல்லமாட்டேன். என் தாய் தந்தையரைவிட்டு உங்களைத் தஞ்சமென்று நம்பிவந்ததற்கு இதுதான் பலனாக்கும். நான் சொல்வானேன், நீங்கள் வருத்தப்படுவானேன்.

கிரு.—என் முத்தே, வீரசேனன் உயிரைமட்டும் கேட்காதே. வேறு எதுவேண்டுமானாலும் கேள்.

சுலோ.—உங்களுக்கு நன்றியில்லை. நான் உங்களுக்கு என் முழு உயிரையும் தத்தம் செய்தேன். அதற்குப் பிரதி நான் கேட்பதைக் கொடுக்கக் கூடாதா?

கிரு.—என் சுலோசனா, சீக்கிரம் சொல்லு. நான் நிச்சயமாகத் தருகிறேன்.

சுலோ.—வீரசேனனை—

கிரு.—என்ன சொல்லுகிறாய்?

சுலோ.—பிரபோ, அதற்குள் பயப்படவேண்டாம், முழுவதும் கேளுங்கள். வீரசேனன் உயிரைக் கேட்கவில்லை. அவனைத் தூக்குப்போடுவதற்குப் பதிலாக கொலையாளிகள் கையில் ஒப்புவித்து கண்ணுக்கெட்டாத தூரத்தில் போய் கொலைபுரிந்துவிட உத்தரவு செய்ய வேண்டும். ஏனெனில் வீரசேனனை நம் குடிகள் நேசிக்கின்றார்கள். அதுவும் தவிர, யுத்தவீரர்களும் அவன்பேரில் அதிக பட்சம் பாராட்டிவருகின்றார்கள். தாங்கள் அவனை நம் கூடாரத்தின் முன்பாக

தூக்குப்போட உத்தரவு கொடுத்தால் எல்லோருக்கும் ஒரு பயத்தையும் அச்சத்தையும் உண்டுபண்ணுவதோடு கூட, தங்களுக்கு ஒரு கெட்ட பெயரையும் கொண்டுவந்துவிட்டாலும் விடும். நம் குழந்தைக்கும் அவ்வளவு வருத்தம் ஏற்படாது. ஆகலின்றல் நான் வேண்டிக் கொண்டபடி நடக்கவேண்டியது முக்கியம்.

சிந.—அப்படியே செய்கிறேன். அவனைக் கொலே செய்வதும் இரகசியமாக இருக்கும்படி உத்தரவு செய்கிறேன். சுலோசனு அவ்வளவுதானே.

(ஒரு சேவகன் வெளியினின்று மணியை யடிக்கின்றான்.)

சுலோசனு, மணிச்சத்தம் கேட்கின்றது. யாரோ, அவசரமாய் வருகின்றார்கள். ஒரு வேளை சையிட் அப்டல்லாவாயிருக்கலாம். ஏனெனில் அவன்தான் இத்தருணத்திற்கு என்னை வந்து பார்ப்பதாக நேற்றையதினம் சொன்னான். போய்விட்டுவா, இதோ உன் முத்தம்.

சுலோ.—மாட்டேன்.

கிரு.—மாட்டாயே.

சுலோ.—கிடக்கின்றது. இந்தாருங்கள் (முத்தங் கொடுக்கின்றாள்.) (வெளியே செல்கின்றாள்.)

---

## அதிகாரம்—19.

---

சுலோசனை, ஒரு உன்னதமான பல்லக்கில் ஏறி புருஷர்கள் கண்ணில் தென்படாதபடி நாலாபக்கமும் சேடிகள் பட்டுவஸ்திரத்தினால் திரை பிடிக்கத் தன் கூடாரம் போய்ச் சேர்ந்தனள். கிருஷ்ணராயர் "வரலாம்" என்ற அடையாளத்தைக் குறிப்பிக்கின்ற வோர் மணியைச் சப்திக்க வெளியினின்றும் சையிட் அப்டல்லா சக்ரவர்த்தியின் சன்னதியில் தோன்றி கிருஷ்ணராயரைப்பார்த்து "சலாம் அலீகம், அலீகம் சலாம், ஜீ, ஸாஹிப்ஜீ, அலீகம் சலாம்" எனப் பலமுறை கூறி வந்தனம் செய்தனன். அவன் வந்தனம் செய்யும்பொழுது அவன் வலதுகரம் பூமியைத் தொட்டு வில்வளைவாக நெற்றிமட்டும் ஏறி ஏறி இறங்கியது. இதைப் பார்த்து கிருஷ்ணராயர் புன்னகைகொண்டு தானும் "சலாம் அலீகம்"

என வாயினால்மட்டும் பகர்ந்து பக்கத்திலுள்ள ஆசனத்தில் உட்காரும்படி உத்தரவு கொடுத்தனன்.

சக்ரவர்த்தியின் கட்டளைப்படி ஆசனத்தில் வீற்றிருந்த சைபிட் அப்டல்லா தன் சட்டைப் பையினின்று ஒரு பெரிய மருந்து சீசாவை எடுத்து அதை கெற்றியளவு தூக்கி "பிஸ்மல்லாகிம்," எனப்பகர்ந்து சக்ரவர்த்தியைப்பார்த்து "சாகிப் ஜீ, இம்மருந்து சரீரத்தைக் கட்டுப்படுத்தி, தேகத்தில் வலிமையுண்டுபண்ணி, நரம்புகளை பலப்படுத்தக்கூடியது. தாங்கள் சுரத்தினின்றும் சுவஸ்தமடைந்தபோதிலும் இன்னம் தங்கள் சரீரம் முன்னிருந்த பலத்தை யடையவில்லை. அதற்கு இன்னம் ஒருமாதம் செல்லும். இந்த ஷர்பத்தை தாங்கள் காலை மாலை இரண்டு வேளையும் போசனமருந்திய பின்னர் சாப்பிடும்பட்சத்தில் சரீரம் பலப்படுவதற்கு ஐயமில்லை. எனக்கு என் சக்ரவர்த்தியினிடத்தினின்றும் உடனே புறப்பட்டுவரும்படி உத்தரவு வந்திருக்கிறது. அதற்குமீறி நானிங்கு இருக்கக்கூடாது. ஆனதினால் தாங்கள் உத்தரவு கொடுக்கவேண்டும்" என்று சொல்லவே சக்ரவர்த்தி கிருஷ்ணராயர் புன்சிரிப்புடன்

"சையிட், நீர் செய்த உபகாரத்தை ஒருநாளும் மறவேன் 'செய்யாமற்செய்த வுதவிக்கு வையகமும் வானகமு மாற்றலரிது' எனச் சொல்லப்பட்டிருக்கிறது. உம்முடைய மருந்தினால் நான் உயிர் பெற்றேன். தங்களுக்கு வேண்டியவைகளைக் கேளுங்கள். நான் கொடுக்கக்கூடாத விஷயம் ஒன்றே. அதைத் தவிர வேறு எதையுங்கொடுக்க சித்தமாயிருக்கிறேன். என் வந்தனத்தை நம் சகோதரர், அக்பர் சக்ரவர்த்திக்குச் சொல்லவேண்டியது அவர் காருண்ணியத்தினலன்றிக் தங்கள் ஸ்நேகம் யான் பெற்றிரேன்," எனப்பகர, சையிட் அப்டல்லா கிருஷ்ணராயரை "நீர் கொடுக்கக்கூடாதவை எவை" என வினவினன்.

கிரு.—சையிட், வீரசேனன் தமக்கு ஸ்நேகர் தானே ?

சை.—பிரபோ. அவர் மூலியமாகத்தான் தங்களிடம் நான் வந்தேன் என்று தங்களுக்குத் தெரியுமே. அவருக்குத் தூக்கு தண்டனை விதித்திருக்கிறார்களாம்.

கிரு.—அத்தண்டனையை மன்னிப்பதைத்தவிர வேறுயாவுங்கொடுக்க ஆயத்தனயிருக்கிறேன்.

சை.—சாஹைப்ஜீ, அதைத்தான் கேட்பதாக இருந்தேன். உங்கள் புண்ணியத்தில் எனக்கு வேண்டியது அல்லா கொடுத் திருக்கிறார். உங்கள் இராஜ்ஜியத்திற்குச் சமானமான ஓர் பூமி எனக்கு என் சக்ர வர்த்தி பாலியம் கொடுத்திருக்கின்றனர். என் உயிர்த் தோழனும் கண்ணுக்குக் கண்ணுமான வீரசேனனைத் தூக்கில் போடுவதின் காரணம் எனக்கு விசதமா கத் தோன்றவில்லை. தொழிலை யவர் இழந்துவிட்டதற்கு அவருடைய உயிரை வாங்குவது மிகவும் கடுமையான தண் டனை. இராஜ்ஜிய பரிபாலனஞ்செய்யும் அரசர்கட்கு நீதியுடன் இரக்கமும் இருக் கவேண்டியது. எங்கள் சக்ரவர்த்தி கேட்கும்பட்சத்தில் மிகவும் வருத்தப் படுவார்.

கி.—சைபிட், என் இராஜ்ஜியத்திலுள்ள எச் சிற்றரசர்களும் எனக்குப் புத்திபகரத் துணியார். தாங்கள் என் சகோதரர் வைத்தியராயும் என் உயிர்கொடுத்த தாதாவாயும் இருப்பதினால் உங்களுக்கு என் கருமத்தின் காரணத்தை யுரைக்க வுடன்படுகின்றேன். வீரசேனன் யோக்

கியனும் செளரியவானும் இருந்தபொழுதிலும் இராஜத்துரோகம் செய்தான். இராஜத்துரோகத்திற்கு என் இராஜ்ஜியத்தில் உயிர்த்தண்டனை தவிர வேறு இல்லை. ஆனதுபற்றி அவன் உயிருக்கு மன்றாடுவது வீணாகும்.

லை.—பிரபோ, தாங்கள் எனக்கு வைத்தியம் செய்ததிற்குக் கைம்மாறாகக்கொடுக்கக்கூடிய நவரத்னங்களும் இலட்சியமில்லை. வீரசேனரின் உயிர் கொடுத்தாலொழிய பிரதியுபகாரமாகாது. உயிருக்குயிர் கைம்மாறாகுமேயொழிய வேறு ஆகுமோ?

சிரு.—லைசயிட், என்னுயிரைக்கேளும், அல்லது என் இராஜ்ஜியத்திலுள்ள வேறு எந்தக் குடிகளின் உயிரைக்கேளும், கொடுப்பேன். வீரசேனனின் உயிரைக் கொடேன்.

லை.—குடிகளின் உயிர் எனக்கு என்னத்திற்கு? நான் வீணாக அவர்களை வதைப்பானேன்.

சிரு.—இல்லை "குடிகளின் உயிரைக் கொடுப்பேன்" என்று யான் சொன்னதின் கருத்தென்னவெனில் அவர்கள் யாவர்களும்

தண்டனை யடைந்திருப்பின் அவர்களின் உயிரைக் கொடுக்கச்சொல்லி மன்னிக்கக் கேட்டுக்கொண்டால் ஆயத்தமாயிருக்கிறேனென அர்த்தம் கொண்டேன்; சையிட் மனஸ்தாபம்வேண்டாம்.

ஸோ.—நல்லது. என் வேண்டுகோள் நிறைவேறவில்லை. நான் போய்விட்டுவருகிறேன்; உத்தரவு கொடுக்கவேண்டும்.

சிந்.—அப்படியா, தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டும். யான் மாற்றக்கூடாத காரியமாயிருக்கிறது.

ஸோ.—நான் போய்விட்டுவருகிறேன். வந்தனம்.

(போகிறான்)

---

## அதிகாரம்—20.

---

மனிதனுடைய பெருமையும் கீர்த்தியும் ஒரு பொருளில்லை என்பதற்கு திருஷ்டாந்திரம் யாதெனின், கிருஷ்ணராயர் மகா சைன்னியத்திற்கு அதிபதியாயும் அநேக யுத்தங்களில் தவராது ஜயத்தையே மணந்து வந்தவருமான வீரசேனன் கொலையாளிகளால் உயிரிழப்பதற்

காக மிகவும் மரங்களடர்ந்த, துஷ்டமிருகங்கள் சஞ்சரிக்கின்ற காட்டிற்கு அழைத்துக் கொண்டு போகப்படும்பொழுது உலகத்திலுள்ளவைகளில் யாதொரு வேறுபாடும் தோன்றவில்லை. மறுநாளும் சூரியன் எப்பொழுதும் உதயமாவதுபோலவே உதித்தனன். வழக்கம்போலவே தென்றல் மந்தஹாஸத்துடன் உலாவியது. ஓடைகள் கீதம்பாடின.

ஆனாலும் கிருஷ்ணராயர் குடிகளும் யுத்த வீரர்களும் ஆராத்துயரத்தினராய்வருத்தப்பட்டுக்கொண்டிருந்தனர், "சிலர் மானிடவாழ்வு என்ன! நிலையாக்காயமென்பர்." சிலர் "கிருஷ்ணராயரும் என்ன, ஆராயாது காரியம் செய்கின்றார்" என்பர். வேறு சிலர் "இருந்தாலும் இராஜத்துரோக மாகுமா" என்றார். இன்னும் பலர் "வீரசேனன் சோழன்: வேண்டுமென்றே செய்திருப்பான். ஒருவரையும் நம்பலாகாது" என்றார்.

விசுவநாதநாயக்கனுக்கோ அந்தரங்கத்தில் சந்தோஷமும், துக்கமும் கலந்திருந்தன. கிருஷ்ணராயர் பக்கத்திருந்து அவருக்குக் கீர்த்தியையும் யசஸ்ஸையும் சம்பாதித்துவந்த வீரசேனன் "தொலைந்தான்" என்பதில் அதிக திருப்திதான். ஆனாலும் சுபாவத்திலேயே,

தன்னைக்கொளாது தன் மனது வீரசேனன் பேரில் ஒர் பட்சம் வைத்திருந்ததினால் இப்பொழுது துக்கமும் உண்டாயது.

திம்மராயருக்கு மனம் மலர்ந்து பூரித்தது. "சோழன்" என்கிற பதத்தையே கேடுவிளைக்கக்கூடிய சொல்லாய் நம்பியிருந்த அமைச்சனுக்கு இப்பொழுது உண்டான சந்தோஷத்தை எடுத்துச்சொல்லக்கூடுமா? பலமுறை அரசனைப்பார்த்து "சபாஷ், நல்லவேலை செய்தீர்கள். வீரசேனனுக்குத் தகுந்த தண்டனை" என்று சொன்னார். அதைக்கேட்டு கிருஷ்ணராயர் "திம்மரே, உமக்கென்ன சோழன்பேரில் அவ்வளவு அசூயை. நீதிப்பிரகாரம் நான் வீரசேனனுக்கு தண்டனை விதித்தபொழுதிலும், இப்பொழுது என் மனம் கசிகின்றது. திம்மரே, உம்முடைய ஈர்ஷைக்குக் காரணமில்லை" எனப் பகன்றனர்.

காந்திமதிக்கு, வீரசேனன் கதியினால் திம்மருக்குண்டாய சந்தோஷம் வெளியாயது. அதுமுதல் திம்மரைத் தன்னைப்பார்க்கவொட்டாமல் தடுத்துவந்தனள். திம்மரே வீரசேனன் உயிர்த்தண்டனைக்குக் காரணமாயிருக்கவேண்டுமென்பது அவள் நம்பிக்கை. சுலோசனைக்கும் திம்மருக்குங்கூட மனஸ்தா

பம் உண்டாயது. சுலோசனையும் திம்மருடன் முன்போல் சம்பாஷிப்பதில்லை.

இவ்விதமாக வீரசேனன் கொலைத்தண்டனை பற்பல பலன்களை பற்பல மனதில் ஏற்படுத்தியது.

## அத்யாயம்—21.

மைத்ரியாபத்தில் வீரசேனன் கொலையுண்டதினால் கிருஷ்ணராயர் அரண்மனையிலுண்டான மனஸ்தாபங்களையும் முகச்சாய்ப்புகளையும் நாம் வருணித்தோம். அது மிகவும் துக்ககரமான சங்கதியானதினால் அதைப்பற்றி அதிகமாக விரிக்க மனம் ஓடவில்லை. கிருஷ்ணராயர் முதலில் முன்கோபத்தில் கொலைத்தண்டனை விதித்தபொழுதிலும் பிறகு பச்சாதாபப்பட்டு மனம் நொந்துகொள்வார். அடிக்கடி தன்னையே வைவார். "எனக்கு வலதுகையாயிருந்த வீரனையே என் முட்டாள்தனத்தினாலிழந்தேன்" எனப் பலமுறை பகன்றிருக்கின்றனர்.

கிருஷ்ணராயர் ஸ்வபாவம் மிகவும் குற்றமற்றது. சட்டத்திற்கு விரோதமாய் ஒருபொழு

தும் தண்டனை விதிப்பதில்லை. இராஜ்ஜியம் நடாத்தும் விஷயத்திலுங்கூட தன் சிற்றரசர்கள் சமூகத்தில் தன்னெண்ணத்தை வெளியிட்டு அச்சங்கத்திலுள்ளவர்கள் அதன் பேரில் அளிக்கும் அபிப்பிராயத்தின் பிரகாரம் நடப்பாரேயொழிய வெறுவிதமாகத் தன் மனம் போனவண்ணம் நடத்துவதில்லை. தற்காலத்தில் நமது மாட்சிமை தங்கிய மகாராணியவர்களின் பார்லிமெண்டைப்போன்றது இவ்விராசசபை. ஆயின் இச்சபையில் சிற்றரசர்கள் தவிர வேறு எவரும் சங்கத்தவராகவிருப்பதில்லை. இச்சபைக்கு சட்டநிரூபணச்சபையெனப் பெயர். இச்சங்கத்திற்றான் சிற்றரசர்கள் யாவரும் தங்கள் தங்களுக்குள்ள மனோவருத்தங்களை வெளியிட்டு சக்ரவர்த்தியை நீதியளிக்கும்படி மன்றாடுவார்கள். இச்சங்கத்தின் அபிப்பிராயப்படியே நடக்கவேண்டுமென்பது கிருஷ்ணராயருக்கு அவசியமில்லாவிடினும் அவர் மன்னர்கள் மனஸ்தாபத்தைச் சம்பாதித்துக்கொள்ள மனமில்லாதவராயிருந்தார்.

இச்சங்கம் ஆறு திங்கட்கொருமுறை கூடுவது வழக்கம், ஆயினும் இப்பொழுது யுத்தகாலமானதினால் அவசியமானபொழுது கூடு

வார்கள். இச்சங்கத்தைக் கூட்டுவதற்கும் கலைப்பதற்கும் கிருஷ்ணராயருக்குமட்டுமே அதிகாரம் உண்டு. அவ்வரசக்குழாத்தின் அக்கிராசனாதிபதி கிருஷ்ணராயரே. திம்மர் உபாக்கிராசனாதிபதி: முதலில் திம்மரே காரியதரிசியாயிருந்தனர். பிறகு வீரசேனர் காரியதரிசியாக நேமிக்கப்படவே, திம்மர் உபாக்கிராசனாதிபதியாயினர். இப்பொழுது திம்மர் காரியதரிசி வேலையையும் உபாக்கிராசனாதிபதி வேலையையும் மறு உத்திரவளவும், வகித்து வரும்படிக் கட்டளையாயிற்று.

ஆக்பருடன் செய்த சமாதான காலமுடிவிற்கு இன்னம் பதினைந்துநாளிருந்தது. அதற்குமுன்னமே நடக்கவேண்டிய விடயங்களைப்பற்றி ஆலோசிக்குமாறு சங்கம் கூட்டுவதற்கு உத்தரவு பிறந்தது. வழக்கமாக சங்கம் காலை பத்துநாழிகைக்குக் கூடுவது. இன்றையதினம் சாயந்திரம் இருபது நாழிகைக்கு கூடப்படுமென பிரசுரம் செய்யப்பட்டிருந்தது.

அப்பிரேரேபணைப்பிரகாரம் தென்றேயத்தில் கிருஷ்ணராயருக்குக் கப்பங்கட்டிவரும் சிற்றரசர்கள் யாவரும் கூடியிருந்தனர். சங்கங் கூடுங்காலம் இன்னம் நெருங்காததினால் அரசர்கள் யாவரும் தாம் தாம் என்ன பேசவ

தென்பனைக் குறித்து ஒருவரோடொருவர் சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். விசுவநாத நாயக்கனும் இராமச்சந்திரவர்மரும் பக்கத்தில் உட்கார்ந்திருந்தனர்; வேறொருவருக்கும் காதில் படாதபடி ஏதோ இரகசியம் பேசிக்கொண்டிருந்தனர். கடைசியாக நாயக்கர், ஐயர் இராஜாவைப்பார்த்து "ஜயசிங்கரே, சமாதானமே செய்யவேண்டுமென்று" எழுந்திருந்து சங்கத்தில் சொல்லும்படி இராமச்சந்திரவர்மருக்குச் சொல்லுகிறேன். உங்களுடைய அபிப்பிராய மென்ன வென வினவ, ஜயசிங்கன், கோனத்தானைப்பார்த்து "சகோதரரே நீரெடுத்துச்சொல்லும்; நான் ஆமோதிக்கிறேன்" என்றனன். இராமச்சந்திரர் தனக்கு இவர்களால் கொடுக்கப்பட்ட கணணியதைப் பூராகவாக வழிந்து தலையசைத்து "நேரித்துவிடுகிறேன். இதெல்லாம் எனக்கு இலேசியமா?" என்று கம்பீரமாகச் சொன்னார்.

இப்படி யிவர்கள் சம்பாஷித்துக்கொண்டிருக்கும்பொழுது கிருஷ்ணராயரும் திம்மரும் வந்துசேர்ந்தனர். அப்பொழுது சங்கத்தவர்கள் யாவரும் ஏகோபித்து நின்றனர். எல்லோருக்கும் வந்தனம் செய்து, கிருஷ்ணரா

யர் தனக்காக ஒருபார்த்த ஸ்தலத்தில் போடப் பட்ட அக்கிராஸ்தானத்தில் வீற்றிருந்தார். அவர் உட்காரவே யாவரும் உட்கார்ந்தார்கள். பிறகு கிருஷ்ணராயர் எழுந்திருந்து "கனவான்கள். நாம் இன்றையதினம் கூடிய விஷயம் யாவும் பிரசுரப்பத்திரிகை மூலியமாய் தங்களுக்குத் தெரியவந்திருக்கலாம். காரியதரிசியை முன் சங்கத்தின் தினசரியை வாசிக்க வேண்டிக்கொள்வதற்கு முன்பாக மிகவும் துக்ககரமான விஷயம் ஒன்று சொல்லவேண்டியிருக்கின்றது — பிரபுக்களே! நமது சட்ட நிருபணச்சபையின் அங்கத்தவராயும் நமது இராஜ்ஜியத்தின் சேனாதிபதியாயும், நமது வலது கண்ணாயும் உங்களுடைய சகோதரராயும் இருந்த வீரசேனர் இதுகாறும் காரியதரிசியாயிருந்தனர். அவர் இச்சங்கக்காரியங்களை மிக ஊக்கத்துடனும் அறிவுடனும் நடாத்தி வந்தனர். ஏதோ தெய்வசங்கல்பத்தினால், தன் கருமத்தில் வழுவ இராஜநீதி யென்னும் கொடுமையான சர்ப்பம் வாய்ப்பட்டிறந்தனர். யாம் இராஜநீதியின் ஆணைகளை நிறைவேற்றுவோமேயொழிய அவைகளை மாற்றுவதற்கும் திருத்துவதற்கும் அதிகாரியல்லேம். இராஜநீதியின் கொடுமையைப்பற்றி யாம் மனம் நொந்

து கொள்ளும்பொழுது அதன் பட்சபாதமின்மையைப்பார்த்து நியாயமெனச் சம்மதிக்க வேண்டியிருக்கின்றது. வீரசேனர் இறந்ததில் நம்முடைய இராஜ்ஜியத்திற்கும் சங்கத்திற்கும் பிரமாதநஷ்டம் வாய்ந்தது அவர்கதியில் "நமக்குண்டான துயரத்தை யாம் யாவரும் ஒன்றாகக் கூடி நின்று காட்டுவோம்" எனப் பிரசங்கிக்கவே யாவரும் நின்றனர். கிருஷ்ணராயர் உட்கார்ந்தும் அவர்களும் உட்கார்ந்தார்கள்.

திம்மராயர் முன்வந்து தீர்மானம் வாசிக்க வாரம்பித்தார்.

1. ம-ா-ா-ஸ்ரீ, இராஜாதிராஜ, இராஜசப் பிரதட்சிணைச் சக்ரவர்த்தி ஸ்ரீவிஜய இரங்க, கிருஷ்ணராயரவர்கள் தேக அசௌக்கியத்தினால் வரக்கூடாததுபற்றி ம-ா-ா-ஸ்ரீ, உபாக்கிராசனாதிபதி மகா இராஜ திம்மராய் பகதூர் அவர்கள் அக்கிராசனாதிபதியாய் நியமிக்கப்பட்டனர்.

2. ம-ா-ா-ஸ்ரீ, பாண்டியகுலசேகர இராஜ விசுவநாதநாயக்கர் இராவ்சாகிப் அவர்கள் சமாதானம் மூன்று மாசம் செய்ய வேண்டியதின் அத்யாவசியத்தைப்பற்றிப் பிரசங்கித்தார்.

3. ம-ா-ா-ஸ்ரீ, இந்துஸ்தான் சகரவர்த்தி ஆக்பர் மோகல்கான் கானுன் மந்திரி ம-ா-ா-ஸ்ரீ, கான்பகதூர் சுபேதார் மேஜர் சர்தார் பகதூர், அபுல்பாசல் சாகிப், விசுவநாதநாயக்கரவர்கள் அபிப்பிராயத்தை ஆமோதித்தனர்.

4. சங்கத்தவர்கள் யாவரும் தங்கள் வந்தனத்தை ஆக்பர் மோகலுக்கு கான் அபுல்பாசல் மூலியமாயனுப்பவேண்டுமென ம-ா-ா-ஸ்ரீ, மகா இராஜ ஜயசிங்கர் எடுத்துச்சொன்னார்.

5. ம-ா-ா-ஸ்ரீ, கர்னடக இராஜ, வீரமார்த்தாண்ட பலராமரவர்கள் ஜயசிங்க மகாராஜர் சொன்னதை ஆமோதித்து சமாதானம் செய்யப்பட்ட விஷயத்தைத் தட்சிண சக்ரவர்த்திக்கு தெரிவிக்கவேண்டியது எனப் பகர்ந்தனர்.

6. அக்கிராசனாதிபதிக்கு வந்தனமளித்தது டன் சங்கம் கலைந்தது.

இத் தினசரிக்குப்பின்னர் சங்கத்தவர்கள் மறு சமாதானம் செய்வதற்கும் யுத்தம் செய்வதற்கும் தங்கள் தங்கள் அபிப்பிராயத்தை தயைகூர்ந்து அளிப்பார்களென அக்கிராசனாதிபதி செப்பினர்.

இதைக் கேட்டவுடன் விசுவநாதநாயக்கர் இராமச்சந்திரவர்மனைப்பார்த்து எழுந்திருக்கும்படி சைகைசெய்தனர். இராமச்சந்திரவர்மர் பார்த்தும் பாராததுபோலிருந்தனர். ஏனெனில் "திருமலைராயர் முன்னிலும், இப்பெரிய சபையின் முன்னிலும் பேசுவது" என்று நினைக்கும்பொழுது மார்பு படபடவென அடிக்கக்கொண்டது. நா குழறியது. கைகால்கள் ஆடின. ஐயங்கர் இராமச்சந்திரனைப்பார்த்து "இவ்வளவுதானா" வென மெள்ளச்சொல்ல, இராமச்சந்திரவர்மர் மனதைத் திடப்படுத்திக்கொண்டு கொஞ்சம் எழுந்திருந்தார். காலுதறவே "நான் மாட்டேன்" எனக் கீழே நாற்காலியில் உட்கார்ந்தார். விசுவநாதநாயக்கர் முகஞ்சுளித்ததைப்பார்த்து இராமச்சந்திரர் மறுபடியும் எழுந்திருந்தனர். மறுபடியும் உட்கார்ந்துவிடப்போகிறார் எனப் பயந்து விசுவநாதர் தன் பட்டாக்கத்தியை இராமச்சந்திரர் நாற்காலியில், கீழேயிருந்தால் அழுக்கடைந்து போய்விடுமென மேலேவைப்பவர்போல், எடுத்துச் சாய்த்துவைத்தார். இராமச்சந்திரரும் கால் நடுக்குவதினால் கீழே விழுந்துவிடப்போகிறோமெனப் பயந்து இரண்டு கைகளையும் நாற்காலியின் கைகளோ

டும் தன் இரண்டு கால்களையும் நாற்காலியின் கால்களோடும் பின்னிக்கொண்டனர். இவ்வளவு சாக்கிரதை, புத்திநுட்பத்துடன் எடுத்துக்கொண்டபிறகு இராமச்சந்திரர் சபையை பார்த்து "அக்கிராசனாதிபதிக்கும் சகோதர்கட்கும் வந்தனம். இப்பொழுது, இப்பொழுது, நான் பேசவாரம்பித்ததில வந்த விசேஷ மொன்றுமில்லை விசுவநாதநாயக்கரவர்கள் தயவுசெய்து அதை யெடுத்துச்சொல்வார்" எனச் சண்டமாருதம்போல பிரசங்கித்தனர். கடைசியாகச் சொல்லவேண்டிய விஷயத்தைச் சொல்லாமல் இராமச்சந்திரர் தன் பிரசங்கத்தை முடித்ததினால் ஆராத்துன்பப்பட்ட விசுவநாதநாயக்கன், இராமச்சந்திரர் தன் கைகால்களை நாற்காலியினின்றும் பிரிப்பதற்கு முன்பாக மகா காருண்ணியத்துடன் தன் கத்தியை எடுத்துக்கொள்ளாமலே கொளத்தார் பிரசங்கத்தினைக் களைத்து உட்கார்ந்தார்.

செய்யும் வழி வேறு இல்லாததைப்பார்த்து விசுவநாதநாயக்கர் தாமே எழுந்திருந்து பேசவாரம்பித்தார். "அக்கிராசனாதிபதிக்கும் மகா இராஜாக்களுக்கும் வந்தனம். நான் சொல்லவேண்டியவைகளைச் சுருக்கமாகச் சொல்லி முடிக்கின்றேன். இப்பொழுது நாம்

சமாதானம் செய்யவேண்டியதே யொழிய யுத்தம் செய்யலாகாது. ஏற்கனவே யுத்தத் தினால் நம் சைன்னியத்தில் பாதி அழிந்து போய்விட்டது. இன்னும் நமது சக்ரவர்த் திக்கு உடம்பும் பூரணமாக சுவஸ்தப்படவில்லை. யுத்தஞ்செய்யும்பக்ஷத்தில் மீதி சைன்னிய மும் அழிந்துபோம்" என விசுவநாதநாயக்கன் சொல்லி முடித்தனன்.

இதைக்கேட்டு பலராமர் எழுந்திருந்து "கனவான்களே, கனம் மந்திரி விசுவநாத நாயக்கர் சொல்லியவை யாவும் அறிந்தோம். இப்பொழுது சமாதானம் அவசியந்தான் ஆயி னும் மகாராஜ் விசுவநாத் சொல்லியவாறு நிரந் தர சமாதானம் கூடாது. அப்பொழுது துருக் கர்கள் நாம் பயந்ததாக நினைப்பார்கள். ஆறு மாதத்திற்குச் சமாதானஞ்செய்துகொண்டால் அதற்குள் நாம் பலப்படுத்திக்கொண்டு பிறகு யுத்தம் செய்யலாம்." எனச்சொல்லி முடித் தார்.

கடைசியாக அக்கிராசனாதிபதி எழுந்த பொழுது விடாது அரைநாழிகைக்குக் கரத் தாளம் செய்தனர். விசுவநாதன் பலராமனைப் பார்த்து "கடவுள் வேண்டுவனவை இக்கிருஷ் ணராயருக்குக் கொடுத்திருக்கின்றார், பலிஷ்ட

னும், சௌரியவானும், இருப்பதோடுகூட மிகவும் வாக்சாதுரியமுடையவன். இப்பொழுது பிரசங்கம் செய்யப்போகிறான், பாரும், கோடைமழை பிடித்ததுபோலிருக்கும். தங்குதடையில்லாது வருஷிப்பான்". என மெதுவாக ஒருவருக்கும் கேளாதபடி சொன்னான். ஒவ்வொருவரும் தங்கள் மனதில் உதித்ததை தங்கள் தங்கள் ஸ்நேகிதர்களுக்குச் சொன்னார்கள். இது நிற்க. நாம் கிருஷ்ணராயர் பிரசங்கத்தை உள்ளது உள்ளபடி எழுதுவாம்.

"அரசர்காள், ஸ்நேகிதர்காள், இராஜ்ஜியம் அரசாளும் முறைமையிலும் சைன்னியங்கள் நடாத்தும் தந்திரங்களிலும் முற்றும் அறிவுற்ற, நம் கனம் நண்பர்கள் தத்தம் அபிப்பிராயங்களைத் தயைகூர்ந்து வெளியிட்டனர். யான் இன்னம் பகரவேண்டியது ஸ்வல்பமேயாயினும் அச்சொல்பமும் முக்கியமா யிருப்பதினால் கல்விக் கேள்விகளில் தேர்ச்சியடையாத மாற்றங்களில் யான் ஒருவாறு எடுத்துச் சொல்லும்பொழுது அன்புகூர்ந்து செவிகொடுப்பார்கள்.

"உலகத்தின் பாகங்களைக்காட்டிலும் செல்வத்திலும் நாகரிகத்திலும் தெய்வபக்தியிலும்

முதிர்ந்த நம் பரதக்கண்டம் ஆதியில் இராம னாதி இராட்சகர்களையும் பாணுதி யசுரர்களை யும் வதைத்தருளிய சக்கரவர்த்திகளால் ஆளப்பட்டு நிலவளம் நீர்வளம் மலைவளம் முத லிய சகல செழிப்பும் அடைந்து வளர்பிறைச் சந்திரன்போல விளங்கியது. பௌத்தர், சம ணர் முதலிய உன்மத்த நிசர மதத்தினர் பலரும் கிளர்ந்து யுத்தஞ்செய்து துன்புறுத் தவே சண்டமாருதத்திற்குத் தலைகுனிந்துப் பிறகு நிமிரும் நாணலைப்போல தக்காலத்திற் குத் தாழ்ந்து பின்னர் முன்னிலும் உன்னத மாய் நின்றது. என்றாலும் கடைசியாக மிலேச்சர்களாகிய துருக்கர்கள் படையெடுத் துவரவே இந்துஸ்தானம் மாத்திரம் தன்னு டையன்றுபட்டும் யுத்தஞ்செய்தும் முடியாததி னால் அவர்கள் அரசாட்சிக்குட்பட்டது. அம் மாது எக்காலம் அத்துஷ்டர்களினின்றும் விடு படுவளோ அறியோம். இப்பொழுது இந்துஸ் தானத்தை எப்படிப்பட்ட துருக்கர்கள் நம் தட் சிணத்தையும் கைக்கொள்வதற்கு வந்திருக் கின்றனர்.

“ ஆஹா ! நண்பர்காள் நம்மிந்துதேசம் துருக்கர்களின் வாளைப் பிறல் படும் துன்

பத்தை நினைக்க நினைக்க மனம் எனக்குப் பதருகின்றது.

"நம்மிந்துதேசம் ஆதிகாலையில் இருந்த மகிமை என்ன? நம்மிந்துதேசம்,—ரிஷிகள் யாவரும், பகன்றிடினும் பாவங்களை நீக்கவல்ல மறைகளை போதுவதினால் வனங்களும் ஓடைகளும் அவ்வேதவாக்கினால் எதிரொலிசெய்யும் நம்மிந்துதேசம், இராமர் கிருஷ்ணர் முதலிய திவ்யபுருஷர்கள் அவதரித்து தங்கள் பாததூளிகளால் பரிசுத்தப்படுத்திய இந்து தேசம்; கங்கை, யமுனை, கோதாவரி, ஸரஸ்வதிமுதலிய தீர்த்தங்களினால் விரவப்பட்ட நம் தாய் இந்துதேசம்,—இவ்விந்துதேயத்தில் தற்கால நிலைமையைப் பாருங்கள். உங்களுக்கு ஆலோசிக்கும் தருணத்தில் மனங்கரையவில்லையா? அரசர்காள் நாம் பிறந்தது எங்கே? நம் மூதாதைகள் பிறந்து வளர்ந்தது எங்கே? நாம் வளாவது எவ்விடம் நாம் இறப்பது எப்பூமி? நம் மூதாதைகளின் பரிசுத்த சரீரங்களில் ஓடிப்பரவும் நதிகளின் தீர்த்தத்தைச்சாப்பிட்டும் நமக்கு வீரியமும் சௌரியமும் வரவில்லையே? நம் தாயபூமியை துருக்கர்கள் கைக்கொள்வதா? க்ஷத்திரிய வம்சத்தில் பிறந்து க்ஷத்திரிய தர்மத்தைக் கைக்

கொண்டாம்போக்கியதை என்றாலும்? துருக்கர்களுடன் சமாதானம்பண்ணி அவர்களை தங்களை பலப்படுத்திக்கொள்வதற்கு காலங்கொடாது காற்றுள்ளபோதே தூக்கிக்கொள் என்றபடி இப்பொழுதே நாம் யுத்தஞ்செய்து துருக்கர்களை புண்ணிய பூமியினின்றும் விரட்டவேண்டியது."

என்று கிருஷ்ணராயர் உட்கார்ந்தபொழுது எல்லோரும் ஒன்றுகூடி "செய்வோம், யுத்தஞ் செய்வோம், விடோம்," எனக்கத்தினார்கள்.

இதைக்கேட்டு கிருஷ்ணராயர் மறுபடியும் எழுந்து பேசவாரம்பித்தார்.

"நண்பர்காள், நீங்கள் இப்பொழுது அளித்த வாக்கினால் மனம்பூரித்தேன். உங்கள் வாக்கைப் பரிபாலனம் செய்வீர்கள் என்று நம்புகிறேன்" என்று சொல்லிமுடிப்பவே சங்கம் கலைந்தது.

மறுபடியும் இரண்டாவது தடவை கிருஷ்ணராயர் பதாகைபோன விஷயத்தைப்பற்றிப் பேசுவதாக எண்ணங்கொண்டு எழுந்திருந்தார். ஆனாலும் சிற்றரசர்கள் யாவரும் இருக்கப்பட்ட உத்சாகத்தைப்பார்த்து "நாம் இவ்விஷயத்தை எடுத்துப்பேசவாரம்பித்தால் இவர்கள் உத்சாகம் மாறி மனம் நொந்துகொள்

வார்" ஆகையால் தனியே ஒரு உத்தரவு பிறப்பித்து அதைப் பிரசுரஞ்செய்வதே உசிதம் என தனக்குள் ஆலோசித்து அதைப்பற்றிப் பேசாமலே இருந்தனர்.

---

## அதிகாரம்—22.

---

மேலதிகாரத்தில் சொல்லிய சங்கம் கலைந்த நான்காம் நாள் கிருஷ்ணராயர் காலைக்கடனை முடித்துவிட்டு போசனமருந்தித் தன் கொலுமண்டபத்திற்கேகி பொற்பாதங்களாற் றாங்கிய சிம்மாசனத்தில் வீற்றிருந்து, தம்குடிகளிடத்தினின்றும், சிற்றரசர்களிடத்தினின்றும், வேறு சிருபர்களிடமிருந்தும் தமக்கு வரக்கூடிய கடிதங்களை வாசித்துக்கொண்டிருந்தனர். அவர் பக்கத்தில் வழக்கம் போலவே திம்மர் வீற்றிருந்தனர். அவரும் ஏதோ சில கடிதங்களைப் பார்த்துக்கொண்டிருந்தனர். அவர் வாசித்த கடிதங்களும் இராச்சிய சம்பந்தமானவைகளாகவே தோன்றின. ஏனெனில் படித்துமுடிந்தானபொழுது பக்கத்திலிருந்த இராஜ முத்திரையை அதில் பதித்து கட்டித் தன் எதிரேயுள்ள மேசையின்பேரில் வைப்பார். ஆனாலும் இடை இடையே தான் கடி

தம வாசிப்பதை நிறுத்திவிட்டு அரசன் முகத்தில் தோன்றும் குறிகளை நோக்குவார்.

இப்படி இவர்களிருவரும் கடிதம் வாசித்துக்கொண்டிருக்கும்பொழுது நாராயணன் சக்ரவர்த்தியின் முன்தோன்றி "இராஜாதி, இராஜ, இராஜகம்பீர, இராஜமார்த்தாண்ட, யாரோ ஒரு ஸ்திரீ, அக்பர் மகா சக்ரவர்த்தியினிடமிருந்து கடிதத்துடன் வந்திருக்கிறாள். நாங்கள் வெகு விதங்கள் கேட்டால் மறுமொழி பகரவில்லை" யென மிகப் பயபக்தியுடன் சொல்லி வாய்பொத்தி நிற்க, கிருஷ்ணராயர் திம்மரைப்பார்த்து "பிரதான் என்ன ஆச்சரியமாயிருக்கின்றது. அக்பரிடத்தினின்று ஸ்திரீஜாதி வரவேண்டிய காரணமென்ன?" எனப் பகர. திம்மர் மகா சக்ரவர்த்தி எனக்கும் ஆச்சரியமாயிருக்கின்றது. இதில் ஏதோ சூது இருக்கிறது. நீங்கள் சாக்கிரதையாக இருக்கவேண்டும் எனச் சொல்லினார்.

சக்ரவர்த்தி.—திம்ம, நீர் சொல்லுவது சரியே; ஆனாலும் அக்பர் அப்பேர்ப்பட்டவன் அல்லன்.

திம்மர்.—மகாராஜ, நான் சொல்லுவதை தயைசெய்து கேட்கவேண்டும். ஸ்திரீ

ஜாதி வரவேண்டியதற்குக் காரண மென்ன? ஸ்திரீஜாதிகளினாற்றான் உலக மழிவதே. அவர்களின்றி உலகத்தில் ஒரு பெரிய நஷ்டமும் கெடுதியும் நேரிடு வதில்லை.

சந்த்ர.—என்ன, திம்ம, நீர் சொல்லுவது வேடிக்கையாயிருக்கின்றது. ஸைசயிட் அப்டல்லா நமக்கு வைத்தியம் பார்த்த பொழுதும் அப்படியே சொன்னீர். அவ னால் நமக்கு நன்மையே யொழிய தீங் கில்லை.

திம்மர்.—பிரபோ, தங்களுக்குத் தெரியாத விஷயமோ நான் சொல்லப்போவது. சின்ன மீனை விடுத்துப் பெரிய மஸ்யத் தைக் கிரகிப்பதுபோல் முதலில் உங்க ளுக்கு ஒரு விஷயத்தில் நம்பிக்கையுண் டுபண்ணி மறு விஷயத்தில் மோசம் செய்யவேண்டு மென்பதல்லவா நம் சத் துருக்களுடைய கருத்து.

சந்த்ர.—நல்லதிருக்கட்டும்; நாம் அம்மாதை நேரில் பார்த்து பிறகு செய்யவேண்டிய விஷயத்தை யாலோசிப்போம். நாரா யணா, நம்மிடத்தில் வரச்சொல்.

அரசன் உத்தரவு கேட்டமாத்திரத்தில் காரியவனன் வெளியே போயினன். போன காலேந்து விநாடிக்குள் இருபது இருபத்தைந்து வயதுள்ள ஓர் மாது சக்ரவர்த்தியின் முன் தோன்றினள். அவள் அரசனைப் பார்த்த மாத்திரத்தில இருகரத்தையும் கூப்பி வாய் திறவாது தலை குனிந்து வந்தனம்செய்தபின்னர் தன இடுப்பினின்று ஓர் கடிதத்தை எடுத்து அரசன் கையில் கொடுத்தனள்.

சக்ரவர்த்தி கடிதத்தை வாங்கி வாசிப்பதற்கு முன்பாக அம்மாதை ஏற இறங்கப் பார்த்துப் பிறகு கடிதத்தைப் பிரித்து வாசிக்கலாயினர். அவர் திம்மரும் அக்கடிதத்தில் எழுதியுள்ளவற்றைக் கேட்டு எல்லா விஷயங்களையு மறியவேண்டுமென்கிற வபிப்பிராயத்துடன் அக்கடிதத்தை உறத்து வாசித்தார்.

“நமது சக்ரவர்த்தி சகோதரருக்கு அநேக வந்தனம். தாங்கள் சுரத்தினின்றும் விடுபட்டு இராஜ்ஜிய விஷயங்களை தாமே சுயமாக நடத்துவதாகக் கேள்வியுற்று அடக்கக்கூடாத திருப்தியடைந்தோம். நன்னம்பிக்கையும் நல்ல ஹிருதயமும் உள்ள மனிதர்களை அல்லா ஒருநாளும் கெடுக்கார் என்பது திண்ணம்.

"இக்கடிதம் கொண்டுவருகிற அதிநுபை சாதியில் அலி; ஆணுமில்லை பெண்ணுமில்லை. பிறந்தது முதல் ஸ்திரீ ஜாதியாகவே உடையுடுத்து வந்தபொழுதிலும் ஆண் பெண்ணாகிய இருபிறப்பின் தொழில்களையும் பூராவாக அறிந்தவள். இரத சாரத்தியம் செய்வதிலும், சைன்னியங்களை யுத்தகளத்தில் நடாத்தும் விஷயத்திலும், ஈட்டி, பாலா, கதை முதலிய ஆயுதப்பிரயோகங்களிலும் அவளுக்கு மிஞ்சினவர் ஒருவருமில்லை. யுத்தவாயுதங்களைச் சுத்தம் செய்து ஆயத்தம் செய்வதில் மிகச் சமர்த்தி. இன்னம் இராஜஸ்திரீகளுக்கு பூத்தொடுப்பதிலும், பின்னுவதிலும், ஆடையாபரணங்கள் அணிவதிலும் மிகக்கைத் தேர்ச்சி படைந்தவள். இவள் தேசம் பங்காள தேசம். வெகுகாலமாய் நம் இராஜஸ்திரீகளுக்கு விடாமுயற்சியுடன் ஊழியம் செய்து வந்ததினால் "உனக்கு யாதுவேண்டு" மென யாம் கேட்க இவ் "அதிநுபை" தான் இந்து மதஸ்தள் ஆனதினால் தயைகூர்ந்து தன்னையோர் இந்து அரசர் அரண்மனையில் சேவகத்தில் அமர்த்தும்படி வேண்டிக்கொண்டனள். நமக்கு கண்ணுக்குக் கண்ணும் மிகவும் நம்பிக்கையும் உள்ள இந்து சக்ரவர்த்தி தாங்

களை யானதினால் தங்களிடத்திலேயே அனுப்பினேன். தாங்கள் இவளைக் காந்திமதிக்கு ஊழியம் செய்யும்படி ஏற்பாடு செய்வது மிகவும் உசிதமாயிருக்கும். ஏனெனில் புருடர்கள் செயல்களில் தேர்ச்சியடைந்தவளாயினும் பார்வைக்கு ஸ்திரீகளைப்போல் உடைபுடுத்தி யிருப்பதினாலும், சதா இராஜஸ்திரீகளுடன் பழகிவந்ததினாலும் தங்களிடத்திலேயே வைத்துக்கொள்வது சரியா யிராதென்றே மேற்கூறிய விஷயத்தை எடுத்துச் சொன்னோம். இருந்தாலும் மன்னிக்கவும். தங்களுக்குத் தெரியாததற்கு நாம் சொல்லப் போகிறதில்லை.

"இன்னம் ஒருவிஷயந்தான்: அவ்வதிரூபை, ஆரூடம் பார்ப்பதில் மகா சமர்த்தி; ஜோதிஷத்தில் மகா பாண்டித்திய முடையவள்.

"மற்ற விஷயங்களுக்கு மறுகடிதம் எழுதுவோம்.

இங்ஙனம்,

தங்கள்,

ஆக்பார்."

(இந்துஸ்தானியினின்று தமிழில் நம்மால் மொழிப்பெயர்க்கப்பட்டது இச்சரிதம்.)

அரசனும் கடிதத்தை வாசித்துமுடித்து விட்டு "அதிருபையைப்பார்த்து" ஆக்பர் சக்ரவர்த்தியா அனுப்பினர்? என வினவ "ஆம்" என மறுமொழி பகன்றனள். சக்ரவர்த்தி நல்லது ஆக்பர் சொல்லுவதற்கு மாறில்லை. நம் ஆயுதசாலைக்குப்போய் அங்கிருக்கும் ஆயுதங்களைச் சுத்தப்படுத்து. இன்று முதல் நம்மரண்மனையில் உனக்கு உத்தியோகம் கொடுத்தோம். நாளையதினம் சாயங்காலம் உன்னை நேரே யழைத்துக்கொண்டுபோய் காந்திமதியிடத்தில் அமர்த்துகின்றோம். அடே நாராயணா, இம்மாதை நம் ஆயுதசாலைக்கு அழைத்துப்போ எனப் பகர்ந்தனர்.

அதிருபை இராஜ சந்நிதானத்தைவிட்டு நீங்கிய பின்னர் திம்மர் சக்ரவர்த்தியின் ஆலோசியாச் செய்கையைக் குறித்து மனஸ்தாபப்பட்டதையும் அரசர் தேறுதல் சொல்லி திடப்படுத்தினதையும் நாம் இங்கு எழுதாமலே இச்சரிதம் வாசிப்போர் ஊகித்துக் கொள்வர். ஆனால் இவ் "வதிருபை"யின் நிஜரூபம் யாதெனவறிய ஆவல் கொண்டவர்களாக விருக்கலாம். அதை நாம் வருணிப்போம்.

அதிரூபைக்கு இருபது இருபத்தைந்து வயதிருக்கலாம். அவ்வள அழகி யென்பது ரூபத்தினாலேயே தோன்றியது. நயனங்களிலும் நாசியிலும் புருஷர்களுடைய கம்பீரமும் சௌரியமும் தோன்றியவே யொழிய முகத்தில் ஸ்திரீகளுக்குரிய வனப்பும் மடமும் அச்சமும் இல்லை. ஆனால் ஸ்திரீஜாதியின் உடையும் ஆபரணமும் கவனியாமல் பார்ப்பவர்களுக்கு ஸ்திரீ தோற்றத்தைக்கொடுத்தன. தலையிலும மயிர் ஏராளமாக வளர்ந்து தரைமட்டும் தழைந்தது.

---

## அதிகாரம்—23.

---

சூரியன் மலைவாயில் விழுந்தருவாயானதினால் கிருஷ்ணராயரும் தன் சபாமண்டபத்தை விட்டு உத்யானவனத்திற்கு வந்திருந்தனர். இவ்வுத்யான வனத்திற்கு மத்தியிலே ஒரு கூடாரமடிக்கப்பட்டிருந்தது. அது நாலாபக்கமும் காற்று உலாவுவதற்காக திறப்புள்ளதாய் மேலேமட்டும் பந்தர் போட்டாற்போல் கவிழ்ந்துகொண்டிருந்தது. அதைச்சுற்றிலும் பூஞ்செடிகள்வைத்து வளர்க்கப்பட்டிருந்தன. பற்பல இடங்களில் பாத்தி பாத்தியாக சிறு

செடிகள் நாட்டப்பட்டிருந்தன. கூடாரத்திற்குள்ளே பல விதமான நாற்காலிகளும் "குருச்சி"களும் இருந்தன. மத்தியிலுள்ள ஆசனத்தில் கிருஷ்ணராயர் வீற்றிருந்தனர். அவர் வலதுபக்கத்தில் திம்மர் உட்கார்ந்து கொண்டு யாதோ ஒரு புத்தகம் வாசித்துக் கொண்டிருந்தார். சக்ரவர்த்திக்குப் பின்புறமாக "அதிருபை" தன் கையில் ஒரு பெரிய கேடயத்தைத்தாங்கி அதைச் சுத்திசெய்து கொண்டிருந்தனள். அரசன் காற்றுவாங்குவதற்கு வந்திருந்தபொழுதிலும் அவன் இடுப்பில் ஒரு பட்டாக்கத்தி தொங்கியது. அதிருபையின் இடையினின்றும் ஒரு கத்தி தழைந்து சீறியது என்பது அதன் உறையின் பளபளப்பினுல் பார்ப்போருக்கு விசதமாகத் தெரிந்திருக்கலாம்.

திடீரென சக்ரவர்த்தி திம்மரைப்பார்த்து "பிரதான், இராஜஸ்திரீகள் யாது செய்கின்றனர். நாம் இப்பொழுதுபோய் பார்க்கக் கூடுமா? எனப்பார்த்துவாரும்; இப்புத்தகத்தைத் தாருங்கள், பார்ப்போம், அது என்ன நளசரித்திரம்தானே" எனச்சொல்லவே, திம்மரும் "உத்தரவுப்படி" என புஸ்தகத்தை சக்ரவர்த்தியினிடம் கொடுத்துவிட்டுச் சென்

றனர். அரசனும் புத்தகத்தை விரித்து வாசிக்கவே ஆழ்ந்த சிந்தையராய்ப் படலத்தில் அமரலாயினர்.

மகா இராஜன் வீற்றிருந்த கூடாரத்திற்குப் பத்தடி தூரத்தினின்று, இராஜசந்நிதிக்கு நேராக வரிசையாய் இருபுறமும் இராணுவ வீரர்கள் நின்றுகொண்டிருந்தனர். அவர்கள் சுமார் வரிசைக்கு அறுபது பெயர் இருக்கலாம். ஆயுதபாணிகளாய் அரசன் சந்நிதியில் ஒருவரும் அணுகாவண்ணம் காத்துவந்தனர், என்றாலும் அபாயம் என்பது நேரிடா என்கிற எண்ணம் இல்லாதவர்களாய் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டும் சிரித்துக்கொண்டும் இருந்தார்கள். இதுவரையிலும் சக்ரவர்த்தியின் கண்ணியத்திற்கும் சரீரத்திற்கும் ஹானி செய்ய எண்ணங்கொண்டவர் ஒருவரும் தென்படாததினாலும், சக்ரவர்த்தியும் சாயங்கால வேளைகளில் சேவகர்களும் வேடிக்கையாக இருக்கட்டும் எனக் கண் சாய்ப்பாய் இருப்பது வழக்கமானதினாலேயும் இராணுவ வீரர்கள் தங்களுக்குள்ளே ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டுமிருந்தனர்.

இவர்களுக்கு முன்பாக ஒரு துருக்கன், இந்திரனைப்போல் ஆயிரம் கண் தரித்த வஸ்திர

தரியாய் தாவுவில் வேப்பந்தழைகளைக் கட்டிக்கொண்டு, தன் பொட்டைத்தலையின் நாமபக்கமும் பஞ்சமாதியால் சுற்றிக்கொண்டு, காணம் போட்டுக்கொண்டு வந்தான். அவனைப்பார்த்து கிராமவாசிகளில் ஒருவனாகிய,

வீரன்.—"ஏலே, பாத்தகிட்டயா, பக்கிரிப் பயல் குட்டிக்கரணம் போட்டான்."

கருப்பன்.—"தெருக்கி பயலே, அவன் குடிச்சிக்கிட்டு கிடக்கான், அதிராண்டா, கப்பணமே. இந்தப்பக்கிரி வந்தாது, 'சா டிப்பச்சிக்கடம் போட்டிருந்தான்."

தப்பன்.—ஆமடாலே, மாரியாத்தா அண்ணனை கோயிந்தன் குண்டுக்கு வடக்கிலே.

கருப்பன்.—ஆமண்ணே, வடக்கேதான், தோப்புளான் வயலிலே குடிசை கட்டிக்கிட்டிருந்தான.

மாரியப்பன்.—கருப்பா, கருப்பா, தோப்பாரே குட்டிக்கரணம் போட்டான், ஏலே, பத்து தப்படி புலிபோல பாஞ்சுகிட்டான்.

வீரன்.—ஏ பக்கிரி, பண்டி யடி பாப்போம்.

சடையன்.—நல்லா இருக்கு, ஏலே, இவன், சத்திரி ராணுவத்திலும் இப்படித்தான் குதிச்சான்.

மாரியப்பன்.—என்னடாலே, ஏதோ படிச்சிக்கிட்டானும்; சத்திரி, இன்னு என்னுடாது.

சடையன்.—இது தெரியாதா, சத்திரி இன்னு இராசா சாதி.

குப்பன்.—ஆமடாலே, ஆமா, நாப்ப, சூத்ர சாதி; நப்ப பட்டாளம் சூத்திரபட்டாளம்.

கருப்பன்.—சத்திரி பட்டாளம் வேறேயிருக்குதல்லா.

மாரியப்பன்.—சடையன் கட்டிக்காரென், குளிமாத்து நல்லா தலைகளை ஒப்பிப்பான்.

வீரன்.—ஏலே, நான் தொப்புளான் வாத்தியாரிட்டே படிச்சேன், நீ யிங்கிடாலே?

இவர்கள் இவ்விதமாக வேறுவிஷயமாகப் பேசிக்கொண்டிருக்கும்பொழுது பக்கிரி பத்தடி பதினைந்தடி முன்பாய்வதும் மறுபடியும் பின்னால் மூன்றுஅடி வாங்குவதும் மறுபடியும்

மூன் தாவுவதும் இப்படியாக அரசனுக்கு நாலேங் தடி முன்பாகப் பாய்ந்தனன். அரசன் களே சரித்திரத்தில் ஆழ்ந்திருந்ததினுல் அவருக்கு இவ்விஷயங்கள் ஒன்றும் தெரியாது பாய்ந் தான் பக்கிரி; எடுத்தான் தன்னரையில் மறைத்துவைத்திருந்த பாலாவை; ஓங்கிக் குத்தினுன் சக்ரவர்த்தியின் மார்பைப் பார்த்து.

சக்ரவர்த்திக்கு இவ்விதமாக ஆபத்து வரும் என்று ஒருவரும் அறிந்ததில்லை. சக்ரவர்த் திக்கு உயிர் போயேயிருக்கும். சக்ரவர்த்திக் குப் பின்னுல் அதிரூபை கேடயம் விளக்கிக் கொண்டிருந்ததாக சொன்னேமல்லவா ? அக் கேடயம் சுத்தமாய் விளக்கப்பட்டதினுல் கண் ணுடிபோல் பக்கிரி பாய்வதையும் குதிப்பதை யும் பிரதிரூபித்தது. நடப்பது நடக்கட்டும் என ஆயத்தமாயிருந்த அதிரூபை, பக்கிரி சாய்ந்து குத்தின தக்ஷணமே திரும்பி அக்குத் தைத் தன் கேடயத்தால் தாக்கி அப்பக்கிரி யை யடித்தாள். உடனே சக்ரவர்த்தி திடுக் குண்டு நடந்த விஷயத்தைப் பளீர் என ஊகித் து தான் வீற்றிருந்த ஆசனத்தைத் தூக்கி ஓங்கி பக்கிரியை யடித்தார். அவன் அப்ப ளம்போல் நசுங்கிப் பாயஸமாய்விட்டான்.

கிருஷ்ணராயர் அதிரூபையைப்பார்த்து "சபாஷ், ஆக்பர் சொன்னது நிசமானது; என்னுயிரைக் கொடுத்தாய். அதிரூபை, உன் எண்ணம் நிறைவேறிற்று; என்னுடன் இதோ இராஜஸ்திரிகள் கூடாரத்துக்குவா; நான் உன்னைக் காந்திமதிக்குத் தெரிவித்து அவளுக்கு சிஷ்ருஷை செய்யும்படி அமர்த்துகின்றேன். (சிப்பாய்களைப்பார்த்து) ஆஹா! நாய்களா, இவ்வளவு அஜாக்கிரதையா? நல்லது உங்களுக்கு பத்துநாள் சம்பளம் பிடித்தாய்விட்டது என்று சொல்லிக்கொண்டிருக்கும்போது திம்மர் வாவே நடந்த விருத்தாந்தத்தை பூராவாகப் பிரதானிக்கு அரசன் சொல்லினன். திம்மர் கேட்டு இது இன்னோர் செய்த சதியாலோசனையின் பலனென ஊகிக்க முடியாமல் திகைக்கவே அவருக்கு விடைகொடுத்து கிருஷ்ணராயர் அதிரூபையுடன் உடனே இராஜஸ்திரிகளின் கூடாரத்திற்குப் புறப்பட்டார்.

இப்பக்கிரி இன்னோரால் அனுப்பப்பட்டிருப்பானென்பதும் இன்ன விஷயத்திற்கு அனுப்பப்பட்டானென்பதும் திம்மராயருக்குப் புலப்படாபொழுதும் நம் சரித்திரத்தை ஆதிமுதல் வாசித்துவரும் ஒவ்வொருவருக்கும் தெரிக்

திருக்கும். அதைப்பற்றி நாம் விஸ்தரிக்க வேண்டியதில்லை.

மற்றும் கிருஷ்ணராயர் அதிரூபையை அழைத்துக்கொண்டுவிடவே காந்திமதிக்கு யாதொரு தடையுமிருந்திராதென்பது திண்ணமே. என்றாலும் அவ்விடத்தில் நடந்த விஷயங்களை விரித்தெழுதப்பரவும்.

---

## அதிகாரம்—24.

---

அதிரூபை சக்ரவர்த்தியினால் காந்திமதியினிடம் சிபார்சு சொல்லிவிடப்பட்ட பன்னிரண்டாம்நாள் சாயங்காலம் கமலமும் விமலமும் விசாலத்தோடு காந்திமதியின் உத்யானவனத்தில் ஒன்றுகூடி பேசிக்கொண்டிருந்தனர். அச்சாயங்காலம் வசந்தகால மாலையானதினால் பார்ப்பதற்கும் கேட்பதற்கும் இரமணீயமாயிருந்தது. அவ்வுத்யான வனத்திலுள்ள சண்பகம், ரோஜா, மல்லிகைமுதலிய புட்பச் செடிகளுக்கு ஜலம் கொண்டுபோகும் ஓடை தன் வழியே கிடக்கும் பரற்களையும் பளிங்குகளையும் முத்தமிட்டுக்கொண்டு ஸ்திரீரத்நங்களைப்போன்ற பூஞ்செடிகளின் பாதங்களை பிரக்ஷாளனம் பண்ணிச்சென்றது. மல்லிகையின் வெண்மையும் ரோஜாவின் சிவப்பும்

ஒன்றொடொன்று கலந்து பார்வைக்கு ஆநந்தத்தைக் கொடுப்பதைப் பார்ப்போர் அதை தேவலோகமென நினைப்பார்கள். ஆதித்யன் மஞ்சட்கிரணங்களை தங்கப் பளிங்குபோல் ஓடைகளின் மேற்தட்டில் பிரகாசித்தன. பற்பல வாழைமரங்கள், பூர்ண கர்ப்பிணியைப் போல், பலன்களினால் சூல்கொண்டு சுந்தரமாகத் தோன்றின. நாரைத்தம்புட்களும் கிளிகளும் தரையில் நடைபழகின. மந்தமாருதமும் செடிகளோடும் கொடிகளோடும் லீலாவிநோதங்கள் செய்துகொண்டு இருந்தது.

விசாலம் பக்கத்திலிருந்த நந்தியாவட்டப் புஷ்பத்தைப்பறித்து மூக்கில் முகர்ந்து கொண்டு கமலத்தைப்பார்த்து, "கமலா, காந்திமதி, என்ன, நம்மை முன்னே போகச் சொல்லிவிட்டு இன்னம் வரவில்லை." என்றாள்.

கமலம்.—(ஏதோ மனதில் திடீரென உதித்தவள்போல்) அடி, அடி, எனக்கு ஒன்று புலப்பட்டது.

விசாலம்.—என்ன !

கம.—காந்திமதி, அந்த அதிரூபை வந்த நாள் முதல் நம்முடன் உத்யான வனத்திற்கு வருவதேயில்லை. அப்படி வரும்

படி நாம் போய்க் கூப்பிட்டால் முன்னே போகும்படி சொல்லிவிட்டுப் பிறகு வருவதில்லை.

விசா.—வராததற்குக்காரணம் தான் வேலையாயிருந்ததினாலே மன்னிக்கவேண்டுமென்று சொல்லிவிடுகிறாள்.

கம.—நீயும் கவனித்தாயா! எனக்கு இது நன்றாக மனதில்பட்டது.

விசா.—காந்திமதி சதா அதிருபையுடனிருக்கிறாள்.

கம.—அதிருபைக்கு ஜோஸியம் தெரியுமென்று நமது பாது கவிலோசனை சொன்னார். அவளுக்கு மந்திரம் தெரிந்தாலும் தெரியும்.

விசா.—அதினாற்றான் அவள் காந்திமதியைக் கைவசப்படுத்திவிட்டாள். நாம் அவளுடன் பாலியமுடன் பழகினவர்களாயினும் அந்த இரிசி அவளுக்குப் பெரிதாய் விட்டாள்.

கம.—இதை நீ கவனித்தாயா? அதிருபைக்கு ஸ்திரீ இலட்சணமேயில்லை. ஏதோ ஒரு புருஷனுடைய கம்பீரமும் துணிவுமிருக்கின்றது. நம்முடன் பேசுவதேயில்லை.

விசா.—ஆனியன்றே, அப்படித்தான் இருப்பான். இதோ இருவரும் வருகிறார்கள்.

(அதிருபையும் காந்திமதியும் வருகின்றனர்.)

பார்த்திபந்.—விசாலம், கமலா, அதிநேரமாகியும் எங்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தீர்கள்; மன்னிக்கவேண்டும். ஆகப்பட்ட ஆராமனை விசேடங்களைப்பற்றி அதிருபையுடன் பேசிக்கொண்டிருந்துவிட்டேன்; மன்னிக்கவேண்டும். நீங்கள் சீக்கிரம் என் விருப்பிடத்திற்குப்போய் அப்புஷ்பசெண்டுகளை எடுத்து நம் கிருஷ்ணைப்படத்திற்கு அலங்கரியுங்கள்; நாங்கள் இதோ வருகிறோம், போங்கள்.

கம.—(விசாலத்தைப்பார்த்து தாழ்ந்த குரலில்) பார்த்தயா?

விமலம்.—சந்தேகமில்லை. போவோம் வா.

(போகின்றார்கள்.)

காந்தி.—அதிருபை, என் வாஸ்தவமாகவே நீர் எனக்கு அதிருபைதான். உமக்கும் எனக்கும் ஸ்நேகம் முற்ற முற்ற அதிருபை என்ற நாமம் எனக்கு நிசமாகவே தோன்றுகின்றது.

## அத்தியாயம்—25.

கிருஷ்ணராயருக்கு கொடிபோன விஷயம் சகிக்கக்கூடவில்லை; பதாகையைத் திருடினவனை எப்படியாவது கண்டுபிடிக்கவேண்டுமென்பது அவருடைய ஆக்ஞை. திருடர்களோ அற்பசொற்பமானவர்களல்ல. கடுக்கியில ஒருவருக்கும் தெரியாது வீரசேனன் இல்லாத சமயம்பார்த்து வந்து, இயமனையும் கண்டு நடுங்கத்தக்க கம்பீரத்தையும் உன்னதத்தையும் உடைய கொடியை பைரவனுடைய குரைத்தலுக்கும் கடித்தலுக்கும் அஞ்சாமல் எடுத்துக்கொண்டு போயினர். அவர்களா கிருஷ்ணராயர் தந்திரத்துக்குள்பட்டவர்?

"கொடியை எடுத்துப்போனவர் அது போன ஒருமாதத்திற்குள் சக்ரவர்த்தி முன்பாகத் தோன்றி, அவர் பாதாரவிந்தத்தில் விழுந்து மன்னிப்புக்கேட்காத விஷயத்தில் அவர்களை எப்படியாவது மந்திரதந்திரப் பிரயோகங்களினால் கண்டுபிடித்து கொடுந்தண்டனை விதிக்கப்படும்" என கிருஷ்ணராயன் குடிகளுக்கும் சிற்றரசர்களுக்கும் தெரிவிக்கும்படி திம்மராயருக்கு உத்தரவு கொடுத்தவண்ணமே எங்கும் அவ்வுத்தரவு பரவுவதற்கு

பறைசாற்றப்பட்டது. இப்படியெல்லாம் நடந்தும் ஒன்றும் பலிக்கவில்லை. கிணற்றில் கல்போட்டதுபோல் யாதொருசங்கதியும் வெளிப்படவில்லை. சக்ரவர்த்தியின் அரண்மனைக்கு விசுவநாதநாயக்கரும் இராமச்சந்திரவர்மரும் அடிக்கடி வந்தபொழுதிலும் இச்சங்கதியைப்பற்றி தாங்கள் கேள்விப்பட்டதாக அவர்களும் ஒன்றுஞ் சொல்லவில்லை. பலராமர் மாத்திரம் தான் அவமானம் அடைந்ததினம் முதற்கொண்டு கிருஷ்ணராயரைப்பார்க்கவும் இல்லை. அவருக்குக் கடிதமும் எழுதவில்லை.

அரசன் அரண்மனையிலுள்ளோர் யாவருக்கும் கர்னாடகதேசத்தரசன் பேரில் மிகுந்த சந்தேகம். அவர்தான் கொடியை அபகரித்து இருக்கவேண்டுமென்றும் விசாரணையில்லாமலே யவரைப்பிடித்து தண்டனைவிதிக்க வேண்டுமென்றும் திம்மர் அடிக்கடி கிருஷ்ண ராயரிடத்தில் சொன்னபொழுதிலும் அவர் "பண்டம் ஒரு இடத்தில் பழி பத்து இடத்தில்" என்கிற பழமொழிப்பிரகாரம் எவர் கொடியை எடுத்துக்கொண்டு போயினரோ தாம் வீணாக அவரை வதைப்பானேன்" என்று மறுமொழிகூறினர். இன்னம் அப்படி கர்னா

டகத்தாயிலை திருடியிருக்கும் பட்சத்திலும் இப்பொழுது அவனைப்பிடித்து சிக்ஷிக்கவாரம்பித்தால் இராஜ்யத்தில் பெருங்கலகம் விளையும். அப்பொழுது புறப்பகைஞராகிய துருக்கரையும் உள்விரோதியாகிய கர்னாடகத்தானையும் ஜயித்தல் அசாத்தியமாகும். ஆனதினால் விஷயங்கள் உள்ளது உள்ளபடி யிருக்கட்டும்: என்பதே சக்ரவர்த்தியின் அபிப்பிராயம். புறப்பகைவரைக்காட்டிலும் உட்பகைஞர் ஜயிப்பதற்கு அசாத்தியமானவர் எனப் பலமுறை திம்மருக்குச்சொல்லியும் திம்மர் கர்னாடகதேசத்தானை தண்டியாதவரையில் விஜயநகர இராஜவம்சத்தின் கீர்த்திக்கு நஷ்டம் வந்துவிட்டது என்பது தன்னுடைய தேர்ந்த கொள்கையென்றே வற்புறுத்தினார்.

இப்படிச் சக்ரவர்த்திக்கும் பிரதானிக்கும் அபிப்பிராயம்முரண ஏற்பட்டபொழுது கிருஷ்ணராயர் சற்று ஆலோசித்துவிட்டு திம்மரைப் பார்த்து "பிரதான், அக்பர் அதிருஷ்டைக்கு ஜோஸியம் தெரியுமென்றும் ஆருடத்தில் தேர்ச்சியடைந்தவளென்றும் எழுதியிருந்தனனே. அதைப் பரிக்ஷிக்க இதே தகுந்த காலம். அதிருஷ்டையையழைத்து, கொடியை இழந்துபோன விஷயத்தைப்பற்றி ஆருடம்

கேட்போம்" எனச்சொல்ல திம்மர் "என்ன, ஜோஸியம் பார்ப்பானேன், ஜோஸியம் சிலசமயங்களிற்றான் பலிக்கின்றது. இப்பேர்ப்பட்ட விஷயங்களில் தைரியத்தையும் புத்தி நுட்பத்தையும் உபயோகிக்கவேண்டுமே யொழிய சாஸ்திரம் பார்ப்பதாவது" என்று சொல்ல, சக்ரவர்த்தி "இருக்கட்டும், ஆக்பர் சொன்னதையும் அறிந்துகொள்ள வேண்டுமல்லவா? தாங்கள் தயவுசெய்து ஆள் அனுப்பி அதிருபையைத் தருவிக்க வேண்டும்" என்றனன்.

உடனே பிரதானியும் அதிருபைக்கு ஆள் விடுத்தனன். அதிருபை வருகிறவரையில் கிருஷ்ணராயரும் திம்மரும் பேசிக்கொண்டதை நாம் இங்கு எடுத்துச்சொல்லவேண்டியதில்லை. கொடியின் விஷயத்தைப்பற்றித்தான் சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். திம்மராயருக்குமட்டும் கர்னாடகத்தான்பேரில் மிகுந்த குறிப்பு.

அரைநாழிகை கழிந்தது, அதிருபை தன் கையில் ஒரு பையை எடுத்துக்கொண்டு தோன்றினள். சக்ரவர்த்திக்கும் திம்மருக்கும் வந்தனம்செய்து நிற்கவே, அரசன் வீற்றிருக்கும்படி உத்தரவு கொடுத்தான். அதிருபை பக்கத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து

கொண்டு, எதிரேயிருந்த மேசையின்மேல் பையையவிழ்த்தாள். அப்பையில் பலவித கற்களிருந்தன. அவைகளில் ஒன்று, பெரிதாயும் கருப்புப்புள்ளியுடையதாயும் இருந்தது.

பையையவிழ்த்துக்கொண்டே "மகாப் பிரபோ, நாராயணன் வந்து கூப்பிடும்பொழுதே என்னை ஆரூடத்திற்கு அழைக்கின்றீர்கள் எனத்தெரிந்துகொண்டேன். ஆதலால் சாமக்கிரியைகளோடு சான்னித்தியமாய் வந்தேன்.

அரசன்.—எங்களுக்கு நீ யொன்றுசொல்ல வேண்டியிருக்கின்றது. அப்படி—

சர்மா.—பிரபோ, அதை அதிநபைசொல்லட்டும். நீங்கள் முன்சொல்லக்கூடாது.

அதிநபை.—தங்களுக்கு, தாங்கள் இன்னவிஷயத்தைப்பற்றி யாரிடம் பார்க்கின்றீர்கள் என்று சொல்லவேண்டியதுதானே? நல்லது. (காயையுருட்டுகிறாள்). பத்து உதயம். மகராசி. சுக்கிரன் மூன்றில் குரு விரயாதிபதி, சந்திரன் ராஜா அவன் நீசத்துவமடைந்தான். ஓஹோ, இராஜ சின்னங்களில் ஒன்று உங்களுக்கு விரயம் வந்திருக்கவேண்டும். அதைப் பற்றித்தான் கேட்கின்றீர்கள்.

அர.—திம்மரே, பார்த்ீரா, நல்லது எந்த இராஜசின்னம இழந்துவிட்டோம்?

அதி.—பிரதான், தயவுசெய்து நூற்று எட்டில் குறையச் சொல்லவேண்டும்.

திம்.—எழுபத்திநாலு.

அதி.—ஒன்பதெட் டெழுபத்திரண்டு, பாக்கி இரண்டு.

"கேளப்பா ரிஷபமது உதயமானல்
கேளாமல் உன்றன் சொத்து விரயமாகும்,
பாரப்பா பாங்காக மாந்தியுந்தான்
பரிவுடனே புதனுடனே கூடிட்டாலும்
சொல்லப்பா குறியுடனே இராஜசின்னம்
இரவேதான் இன்னொருவன் றறிந்திடாமல்
பரிவுடனே யபகரித்து போயிட்டானே.
இராஜசின்னம் நீயுந்தான் என்னவென்றால்,
இரவிபோல் விளங்குகின்ற கொடியும் கிரீடம்,
இந்திரனார் இச்சிக்கும் இரத்நாபரணம்."

இன்னம் சுகர் சொல்லுகின்றார். இருந்த பொழுதிலும், நீங்கள் இழந்த வஸ்து கொடி, கிரீடம், இரத்நாபரணம் இவைகளில் ஒன்றாக இருக்கவேண்டும்.

அர.—பேஷ், கொடிதான். நீர் பாட்டில் சொன்னபிரகாரம் இரவில்தான் கொடிபோனது.

தம்.—பிரபோ, அதைக அதிகாரியை சொல்லட்டுமே.

அர.—அதுதான் பாட்டில் வந்துவிட்டதே நல்லது அதை யார் எடுத்திருக்கக்கூடும்.

அக்.—(சற்று ஆலோசித்து) அரசர்களில் ஒருவனாக விருக்கவேண்டும்.

அர.—அது கிடைக்குமா. அவ்வரசனைக்கண்டு பிடிப்பதெப்படி ?

அக்.—(வெகுநேரம் யோசித்துக் கொண்டிருந்து) பிரபோ, எனக்கு இன்னார் எடுத்தார் என்று இப்பொழுது புலப்படவில்லை. நான் ஒரு உபாயம் ஒன்று சொல்லுகின்றேன்.

தம்.—என்ன ?

அக்.—தாங்கள் தங்களுக்கு சந்தேகமிருக்கக் கூடிய அரசர்கள் யாவரையும் என் முன் நிறுத்தினால் இன்னான்தான் திருடினான் எனக் காட்டிவிடுகின்றேன்.

அர.—அது உனக்கெப்படித் தெரியும்.

அக்.—அவ்வித்தையையும் கற்றிருக்கிறேன்.

அர.—உன்னால் முடியுமானால் நிச்சயமாகச் சொல்லு, தகுந்த ஏற்பாடு செய்துசொல்லியனுப்புகிறேன்.

அந்.—என்னுடையவனே, சொன்ன சொல்லுக்கு வேறு உண்டா; இராஜசமுகத்தில் பொய் சொல்லலாமா?

அர.—அப்படியானுல் போய்விட்டுவா நேரமாய்விட்டது. ஏற்பாடு செய்து சொல்லி யனுப்புகிறேன்.

அந்.—அப்படியே மகாராஜ், வந்தனம் வந்தனம் (போகின்றான்.)

அர.—திவானே, அந்தனை மிகச்சமர்த்தி.

திவா.—எனக்கும் ஆச்சரியமாகவே யிருக்கின்றது. எல்லாம் ஏதோ கூத்து இருக்கலாம், பார்ப்போம்.

அர.—உனக்கு எதிலும் சந்தேகந்தான். இதற்குத்தகுந்த ஏற்பாடு செய்யும்.

இவ்வகை கொஞ்சநேரம் வேடிக்கையாகப் பேசிக்கொண்டிருந்து இருவரும் பிரிந்தார்கள்.

---

## அதிகாரம்—26.

---

நாம் இப்பொழுது கிருஷ்ணராயர் கூடாரத்துக்கு நான்கு நாழிகைவழிதூரத்தில் ஒரு பெரும் மைதானத்தில் வந்திருக்கிறோம். இம்

மைதானம் காததூரம் சதுரமாய் மனைப்பாங்காயுள்ளது. அதின் மத்தியில் முளைத்திருக்கும் சிறுசெடிகள் இரத்னகம்பளமாகிய வெண்மைதானத்தின் உடலில் பச்சைப்பூப் போட்டதுபோல் பார்வைக்கு இரமணியமாயிருந்தது.

தற்காலத்திற்காக கிருஷ்ணராயர் உத்தரவின்படி மூங்கிற் கால்கள் நாட்டி பிருமாண்டமான கட்டடங்கள் நிருமிக்கப்பட்டன. மைதானத்தின் மத்தியில் ஒரு பெரிய வளைவு கட்டப்பட்டிருந்தது. அதை நாம் இப்பொழுது "கமான்" என்றும் "ஆர்க்" என்றும் சொல்லுகிறோம். கவர்னர் முதலிய பெரிய அதிகாரிகள் வந்தால் மூங்கிலினால் "கமான" வளைத்து வர்ணக்கடுதாசுகளினால் சித்திரிப்பது போலவே இம்மைதானத்தின் மத்தியில் ஏற்படுத்தப்பட்ட வளைவும் நயனத்திற்கு ஆனந்தத்தையுண்டுபண்ணும்படி கட்டப்பட்டிருந்தது. இவ்வளைவிற்குக் கீழ்பக்கத்தில் "காலரி" ஒன்று மரப்பெஞ்சுகளினால் ஏற்படுத்தப்பட்டிருந்தது. அக்காலரிக்கும் மேலே மிகவும் சன்னமான "மஸ்லின்" துணிகளினால் நாலாபக்கமும் கவரப்பட்ட கூடாரம் ஒன்று அடிக்கப்பட்டிருந்தது. அக்கமானுக்குச் சமீ

பத்தில் வடபக்கத்தில் இருபத்தைந்து நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. இப்பெரிய கட்டடத்தைச்சுற்றி ஆயிரம் சிப்பாய்கள் காவல் இருந்தார்கள்.

வளைவிற்குச் சமீபத்திலுள்ள நாற்காலிகளில் முதல் நாற்காலியின் பக்கத்தில் அதிரூபை நின்றுகொண்டிருந்தாள். அவள் வலதுகையிலிருந்த சங்கிலியினால் பிணிக்கப்பட்ட ஓர் நாய் மிகவும் கம்பீரமாய்க் கீழேபடுத்துக் கொண்டிருந்தது. இரண்டாவது நாற்காலியில் கிருஷ்ணராயர் வீற்றிருந்தனர். அவருக்குப் பக்கத்தில் திம்மராயர் உட்கார்ந்திருந்தார். மற்ற ஆசனங்களில் சக்ரவர்த்திக்குப் பந்துக்களாகிய இராஜவம்சத்தவர்கள் வீற்றிருந்தனர். காலரி முழுவதும் சக்ரவர்த்தியின் அரண்மனை யுத்தியோகஸ்தர்கள் இருந்தார்கள். மஸ்லினினால் கவரப்பட்டுள்ள கூடாரத்தில், இராஜஸ்திரீகள் இருந்தனர். அவர்களில் காந்திமதி, சுலோசனை, கமலம், விசாலம் முதலியவர்களுமிருந்தார்கள். காந்திமதி திரைக்கு சமீபத்திலிருந்து நடக்கும் விஷயங்களை நன்றாகப் பார்க்கவேண்டுமென்று வந்திருந்தனள். இவ்விராஜஸ்திரீகள் திரைக்கப்புறமிருந்து வெளியே நடக்கும் சங்கதியாவையும் நன்றாகப்பார்க்

கக்கூடுமானாலும், திரைக்கு வெளியே புள்ள எவரும் அவர்களைப்பார்க்க முடியாது. இஸ்திரீரத்நங்கள், தாங்கள் இருப்பதைத் தெரிவிக்கவேண்டுமென்றோ அல்லது அறியாமலோ. இடை இடையே மின்னலைப்போன்ற தங்கள் கரங்களை திரைக்கு வெளியே நீட்டி நீட்டிப் பிறகு உள்வாங்கிக்கொண்டனர்.

இவ்விராஜகுமாரர் இருந்த இடத்திற்கு அரை நாழிகை தூரத்தில் பட்டாளம் பட்டாளமாக சைன்னியங்கள் தோன்றின. திடீரென்று ஒரு பீரங்கி போடப்பட்டது. அதைக் கேட்டவுடனே கிருஷ்ணராயர் “ஓஹோ இன்னும் பத்துவிநாடி யிருக்கின்றது. இரண்டாவது குண்டுக்குத்தானே சைன்னியங்கள் இடம் பெயர்ந்து வரும்படி கட்டளையிட்டிருக்கின்றார்கள்” எனத் திம்மரைப்பார்த்து சொன்னார்.

திம்மர்.—ஆமாம், தங்கள் உத்தரவு அப்படித் தானே.

கிருஷ்ணராயர்.—சகலமான சிற்றரசர்களும் வந்திருக்கின்றார்களா?

திம்.—போய்ப்பார்த்தேன். யாவரும் வந்து ஆயத்தமாயிருக்கின்றார்கள்.

சந்.—“அதிருபை”, உன்னை நம்பி இவ்வளவு ஆடம்பரங்களை செய்துவிட்டோம். நீ தவறவிடக்கூடாது அப்படிச் செய்தால் ஆக்பர் சோதிக்கும் என் கண்ணியத்திற்கும் அழிவு நேரிடும்.

அதிருபை.—பிரபோ, அதற்கு ஐயமுண்டா? நீங்கள் பயப்படவேண்டாம். நானல்லவா பாத்தியம்.

சந்.—திம்மா, அக்பருக்குக் கடிதம் எழுதினீர்களா?

திம்.—கடிதம் எழுதி தங்களிடத்தில் கையெழுத்து வாங்கவில்லையா? வாராததற்குக் காரணம் தெரியவில்லை.

சந்.—வராவிட்டாலும் கடிதமாவது எழுதுவாரே? (இரண்டாவது பிரங்கி வெடிதீர்த்தார்கள்) இதோ இரண்டாவது குண்டு, சைன்னியங்களும் நெருங்குகின்றன. அதிருபை, உஷார்!

அதி.—மகாராஜ அப்படியே (என்று நாயைத் தட்டிக்கொடுத்தனள்.)

இரண்டாவது குண்டு போட்டவுடனே, தூரத்திலுள்ள சைன்னியங்கள்யாவும் இடம் பெயர்ந்தன. முதல் முதலில் மைசூர் மகா

இராஜ்ஜியத்தை மிகவும் கீர்த்தியுடன் ஆண்டு வரும் ஜயசிங்க மஹாராஜ் சைன்னியம் வந்தது. இப்பொழுது கண்ணுக்கெட்டிய தூரத்தில் வந்தார்கள். நெருங்கிவந்து விட்டார்கள். ஜய சிங்கர் சக்ரவர்த்தியின் கிட்டவந்தபொழுது கிருஷ்ணராயரைக்கண்டு வந்தனஞ்செய்தார். கிருஷ்ணராயரும் நின்றுகொண்டு பதில் வந்த னஞ்செய்தார். அதிரூபை தன் நாயைத் திரும்பிப்பார்த்து சும்மாவிருந்தாள்.

இச்சைன்னியம் அதிரூபையைத் தாண்டிப் போவதற்கு முன்பாக அதை ஒருவாறு வரு ணிப்போம். ஜயசிங்கர் பட்டாளத்தின் மத் தியில் ஒரு வெண் குதிரையின்மேல் சவாரி செய்து வந்தனர். அவருக்கு வலதுபக்கத்தில் அவர் பிரதானியும், இடதுபக்கத்தில் சேனாதி பதியும் ஆயுதபாணிகளாய் சிவந்தநிறமுள்ள அசுவத்தின்மேல் வீற்றிருந்தனர். இம் மூவர்க்கும் முன்னாலே ஆயிரம் சேனாவீரர் பத்தி பத்தியாகச் சென்றனர். பின்னாலும் அப்படியே ஆயுதபாணிகளாய் தங்கள் அர சனைக் காத்துக்கொண்டு ஏகினர்.

இதற்குப்பின் மலையாள தேசத்தரசன் சைன்னியங்கள் சென்றன. அவர்களுக்கு நடுவில் இராமச்சந்திர வர்மர் ஒரு பெரிய

இரதத்தில் நாலு குதிரைகளினால் இழுக்கப்பட்டு கம்பீரமாகச் சென்றனர். வரும் ஒவ்வொரு சிற்றரசர்களும் சக்ரவர்த்திக்கும் பிரதானிக்கும் வந்தனம் செய்தார்களென நாம அடிக்கடி சொல்லவேண்டுவதில்லை.

மலையாள சைன்னியத்திற்கு அடுத்தாற்போல் கர்னாடகதேசத்து சைன்னியங்கள் வந்தன. கிருஷ்ணராயர் அதிருபையைப் பார்த்து சைகை செய்தார். அதிருபை பைரவனைத் தட்டிக்கொடுத்தாள். திம்மரும் "அதிருபை, உஷார்" எனக்கர்ச்சித்தார். முதலில் கர்னாடகதேசத்துக் குதிரைப்படைகள் இருபதுபத்தியாக வந்தன. அவைகளுக்குப்பின் பலராம மகா இராஜன் ஒரு பர்வதம்போன்ற ஆனையின்பேரில் சவாரிவந்தனன். இருபுறத்திலும் இரண்டு விகடகவிகள் கட்டியங் கூறினர். பலராமர் கிருஷ்ணராயரைப் பார்த்து "சக்ரவர்த்திஜி வந்தனம், வந்தனம்" எனப்பகரவே கிருஷ்ணராயர் "வந்தனம்" என மறுமொழிகூறி அதிருபையைப் பார்த்தார். திம்மர் "அதிருபை, தூங்காதே" என்றார். கர்னாடக சைன்னியங்களும் மற்ற பட்டாளங்களைப்போல் "கமானுக்கு மத்தியில் சென்று நீண்ட மைதானத்தில் போயின. கிருஷ்ணராயர் அதி

ருபையைப்பார்த்து "என்ன!" என்க, அதி ருபை "மஹாராஜ், அவ்விஷபத்ரை என்னி டத்தில் பொறுப்புக்கட்டுங்கள்" என்றுள்.

கர்னுடகதேசத்து சைன்னியத்திற்குப் பின் றல் மதுரைப் பட்டாளங்கள தோன்றின. அவர் காலாட்படை பத்தி ஒன்றுக்கு நாறு பெயர் விகிதம் பத்துப் பத்தியாகச் சென்றனர். இவர்களுக்குப்பின் குதிரைப்படை சென்றது. கடைசியாக ஆனைப்படை வர்ந்தது. ஆனைப் படைக்கு முன்னர் விசுவநாதநாயக்கர் ஒரு பஞ்சவர்ணக் குதிரையின்பேரில் இராஜரீக ஆடம்பரங்களுடன் வர்தனர். கிருஷ்ணரா யரைத்தாண்டி காலாட்படைகளும் சென் றன. குதிரைப்படையும் சென்றன. விசுவநாத நாயக்கர் கிருஷ்ணராயரைப் பார்த்து தன் இருகரத்தையும் தூக்கி வந்தனம்செய்து முடிப்பதற்கு முன்னர் அதிருபையின் நாய் விசுவநாதநாயக்கர் கழுத்தில் வாயைப்போட் டுக் குதிரையினின்றும் கீழே வீழ்த்தியது. இதைப் பார்த்து "மோசம், மோசம்" என யாவரும் கத்தினர்கள். மதுரைச் சைன்னியங் களில் சிலர் கர்னுடகத்தார் கொடியைப் பிடிங்கினதற்கு பட்டபாடு தெரியாதா எனச் சும்மா விருந்தனர். பலர் ஆயுதங்களை எடுத்து

யுத்தஞ்செய்ய வாரம்பித்தார்கள். இதற்குள் கிருஷ்ணராயர் சைன்னியங்கள் ஒன்றுகூடி மதுரைச் சைனியத்தை வளைத்துக்கொண்டன. முன்னேற்சென்ற ஜயசிங்கரும் மற்றுஞ் சில வரசர்களும் பின்னால் வரும் அரசர்களும் ஓடிவந்து "இது என்ன படுமோசமா யிருக்கின்றது" என்றார்கள். பைரவன் இன்னம் விசுவநாதநாயக்கன் கழுத்தை விடவில்லை. ஜயசிங்கர் முன்வந்து "சக்ரவர்த்தி, நாயை விலக்குங்கள். இது நன்றாக இல்லை" என்றனர். அதிருவை இதைக் கேட்டவுடனே பைரவனுக்குச் சைகை செய்ய அது தன் பிடியைவிட்டது. விசுவநாதநாயக்கருக்கோ, பரிதாபம், மூர்ச்சையிட்டு பேச்சுமூச்சு இல்லை. காயமும் கொலைக்காயந்தான்.

கிருஷ்ணராயர் சகலமான சிற்றரசர்களைப் பார்த்து "என் மஹாராஜாக்களே, தயவு செய்து தங்கள் சைன்னியங்களை இருப்பிடத்திற்கு அனுப்பிவிடுங்கள். நானும் என் சைன்னியத்தையும் அனுப்பிவிடுகிறேன். நான் உங்களுடன் பேசவேண்டியிருக்கிறது" என, ஜயசிங்கர், நாங்கள் "சைன்னியத்தை அனுப்பிவிட்டு என் செய்வது. மோசம் போவோம்" என்றார். அதற்குக் கிருஷ்ணராயர் "இராஜர்

காள் அப்படி போசம் செய்வேனேயாகில் கோமாமிசத்தைச் சாப்பிட்ட பாவத்தில் போவேனாக" என்று சொல்லிச் சமாதான பேரிகையடிக்க உத்தரவு கொடுத்தனர்.

இதற்குள் பகைவர் சைன்னியங்களில் ஐந் நூறு பெயரும், சக்ரவர்த்தியின் சைந்நியத் தில் நூறு பெயரும் மடிந்தார்கள். சமாதான பேரிகை கேட்டவுடனே இருதரத்தாரும் யுத் தத்தை நிறுத்தினார்கள்.

உத்தரவுப்பிரகாரம், அரசர்களுடைய சைன்னியங்கள் யாவும் தங்கள் தங்கள் இருப் பிடம் சென்றன. விசுவநாதநாயக்கனுக்குச் சிகிச்சை செய்யும்படி அரண்மனை வைத்திய னிடம் ஒப்புவித்தார்கள்.

திடீரென துருக்க சக்ரவர்த்தியினிட மிருந்து கடிதம் "ஜனாப், ஹுசூர், கிருஷ்ணராயர் தக்ஷிண சக்ரவர்த்திக்கு எங்கே யிருந்தாலும் உடனே கொடுக்கவும்" என்ற மேல்விலாசத் துடன் வந்தது. அதைக் கிருஷ்ணராயர் திறந்து முதலில் மெள்ள வாசித்துவிட்டு "அர சர்காள் இதோ ஆக்பர் கடிதம் எழுதியிருக் கின்றார். கேளுங்கள் :—

சபா மண்டபத்திற்கு இருபது நாழிகைக்கு யாவரும் வந்துவிடுங்கள். நானும் ஆக்பருக்குக் கடிதம் எழுதுகின்றேன்.

இச்சங்கதியைக் கேட்டவுடனே யாவரும் பிரிந்து சென்றனர். கிருஷ்ணராயருக்கு மிகுந்த சஞ்சலம் உண்டாயிற்று. தான் இன்னவிதமாக விசுவநாதநாயக்கன்தான் திருடினான் என ருசுப்படுத்துவதென அவருக்குப் புலப்படவில்லை. தான் செய்தது முட்டாள் தனமென எண்ணினார். அதிருஷ்டையோ விசுவநாதநாயக்கன்தான் எனச் சாதிக்கின்றாள். கடைசியாக "ஆக்பர் சொல்லுவதைக் கேட்போம், அது நமக்கு சாதகமில்லாவிடில் யுத்தஞ்செய்வதே சரி" யெனத் தீர்மானஞ் செய்தார். விசுவநாதன் குற்றம் வெளிப்படுவதற்கு முன்பாக அவன் இறப்பது உசிதமல்லவென நினைத்து "வரும்போது சையிட் அப்டல்லாவையும் அழைத்துவரும்படி" ஆக்பருக்கு எழுதுக என சக்ரவர்த்தி திம்மருக்குக் கட்டளையிட்டனர்.

## அதிகாரம்—27.

மறுநாள் காலமே சூரியன் உதயமாயினன். நாழிகையாகவே உச்சியில் தோன்றி வரவர மேற்கு நோக்கித் தாழ்ந்தனன். இருபது நாழிகையாகவே சபாமண்டபத்தில் சகலமான சிற்றரசர்களும் கூடினார்கள்.

இவர்கள் ஒருவருடன் ஒருவர் முதல் நாள் நடந்த மோசத்தையும் வஞ்சனையையும் குறித்து சம்பாஷித்துக்கொண்டிருந்தனர். கிருஷ்ணராயர் இவ்வளவுதூரம் மோசவழிக்குப் போவாரென்று அவர்கள் நினைக்கவேயில்லை. சிலர், கிருஷ்ணராயருக்கு இன்று தொடங்கி கீர்த்திஹானி என்றனர். சிலர், தட்சிணதேசம் இன்றுமுதல் ஆக்பருக்குத் தான் என்பர். வேறு சிலர், விஜயநகர வம்சத்தின் பூண்டு இன்றோடே அற்றுப்போய்விட்டது என்றார்.

ஜயசிங்கனும் பலராமனும் சேர்ந்து உட்கார்ந்தார்கள். "பலராமரே, என்ன, நாமெல்லாரும் இருக்கும்போது இப்பெரிய மோசம் நடந்துவிட்டதே, தகுந்த ருசுக்கிடைக்காத விஷயத்தில், என்ன செய்வதாக நினைத்திருக்கிறீர்கள்" என்று ஜயசிங்கர் பலராமரைப்பார்த்துச் சொன்னார்.

பலராமர்.—சகோதரரே, எனக்கும் ஆச்சரிய மாகத்தானிருக்கிறது. நீங்கள் எதுசெய் வதாக உத்தேசித்திருக்கிறீர்கள்.

ஜய.—என் உத்தேசத்தைத்தான் நான் திருவ் ணராயனுக்கு நேரே சொல்லிவிட்டே னே. யுத்தம்செய்ய ஆயத்தமாயிருக் கின்றேன்.

பல.—நானுமப்படித்தான். விசுவநாதநாயக்கர் பிழைத்துக்கொள்வாரா? பிழைத்துக் கொண்டால் திருவ்ணராயனைச் செக்கில் வைத்துத் தீர்த்துவிடுவார்.

ஜய.—அது சந்தேகமில்லை. நேற்றையதினம் திருவ்ணராயர் அரண்மனை வைத்திய ரும் என் அரண்மனை வைத்தியரும் சிகிச் சைசெய்தார்கள். விசுவநாதநாயக்கர் ஜீவிப்பது கஷ்டம் எனச் சொல்லிவிட் டார்கள்.

பல.—அப்படியானால் இங்குதான் அக்பர் சக் ரவர்த்தி வரப்போகிறாரே! சையிட் அப்டல்லாவைத் தருவித்து விசுவநாத நாயக்கனுக்கு வைத்தியம் செய்யவேண் டுமெனப் பிரார்த்தித்துக்கொள்வோம்.

ஜய.—நல்ல யோசனை. அக்பர் பெருந்தன்மை யுள்ளார். மறுக்கமாட்டார். அவர் வந்

தவுடன் இதைத்தான் கேட்கப்போகின்றேன்.

பல — அப்படியே செய்யுங்கள்.—என்ன எக்காளம் ஊதுகின்றது? கிருஷ்ணராயன் வருகிறான் போலும்.

பலராமர் இவ்வார்த்தைகளை மிகவும் கம்பீரமாய்ச் சொன்ன பத்து விநாடிக்கெல்லாம் சபாமண்டபத்தில் கிருஷ்ணராயரும் அவர் பிரதானி திம்மருவும் இன்னொருவரும் வந்தார்கள். இவர்கள் வந்ததும் சபையிலுள்ள சகல சிற்றரசர்களும் நின்றார்கள்.

கிருஷ்ணராயரும் புதிதாகவந்த புருஷரும் தங்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஆசனத்தில் வீற்றிருந்தவுடனே சிற்றரசர்களும் உட்கார்ந்தார்கள். ஜயசிங்கருக்கு இப்புது மனிதர் யாரென மிகச்சந்தேகம். அதேமாதிரியே அச்சபையிலுள்ள நிருபர்கள் யாவருக்கும்.

இப்புருஷர் மிகவும் உயர்ந்தவர். சுமார் இருபத்தைந்து வயதிருக்கலாம். பார்ப்போர் குறிப்பிட்டு இவர் யாவர் என வினவும்படி அவ்வளவு கம்பீரமுள்ளவர். இவர் முகம் தங்கம்போன்ற நிறமுடையதாய் சரீராகிருதிக்குத்தக்க ரூபத்தையுடையதாயிருந்தது. நய

துஸ்தானத்தைக் கீர்த்தியுடன் ஆண்டுவரும் சக்கிரவர்த்தியுமாகிய ஆக்பர். அவர் தயை கூர்ந்து நம் கடிதத்தின் வேண்டுகோட் பிரகாரம், நம் மாண்மனைக்கு இன்று காலமே வந்தனர். அவருடைய கீர்த்தியையும், யோக்கியதையையும், புத்திநுட்பத்தையும் பற்றி யாம் இங்கு எடுத்துச் சொல்லவேண்டியதில்லை. அவர் ஜீவகாருண்ணியம் பிரசித்தமானது. நம் பதாகை யிழுந்த விஷயத்திற்கு நியாயாதிபதியாக இச்சபையோர் நியமித்திருக்கின்றனர். எல்லாருடைய சம்மதத்துடன் ஆக்பர் மஹா சக்ரவர்த்தியை அக்ராஸ்தானத்தை வகிக்கும்படி கேட்டுக்கொள்ளுகின்றனர்" எனப் பிரசங்கித்து உட்கார்ந்தார்.

ஜயசிங்கன் உடனே எழுந்திருந்து "கனவான்காள். ஆக்பர் மஹா சக்ரவர்த்தியை அக்ராஸ்தானதிபதியாக நியமிப்பதில் ஆமோதிக்கின்றேன் என்றனன். ஆக்பரும் எழுந்திருந்து தான் அக்ராஸ்தானத்தை வகிப்பதற்கு முன்னர் அங்கிருக்கும் அரசர்கள் இன்னரென்றும் அவர்கள் தேசவிஸ்தீரணமும் தெரிய வேண்டுமெனக் கிருஷ்ணராயரை வேண்ட, அவரும் மனம் உவந்து ஆக்பருக்கு ஒருவர் ஒருவராக இவர் மலையாளதேசத்தரசன், இவர்

மைசூர் அரசன் என வருத்தஞ் சொல்லிக் கொண்டு போனான். அக்பரும் முறைமையே ஒவ்வொருவருக்கும் வந்தனஞ் செய்தனன்.

இவ்விஷயம் முடிந்தவுடனே எல்லோரும் நமஸ்காரஞ் செய்ய, அக்பர் அக்ராசனத்தை வகித்தனன். தக்ஷிணதேச ராஜாக்கள் எழுந்திருந்து "அக்பர் ராஜாதிபதி மேலவிஷயத்தை நடத்துவதற்கு முன்பாக நான் அவர்களைக் கேட்டுக்கொள்ளவேண்டிய தொன்றிருக்கின்றது. விசுவநாதநாயக்கர் அசிரத்தையின் துஷ்டநாயால் கடியுண்டிருந்து மரண வேதனைப் படுகின்றனர். நம்பிக்கையில்லை எனவும் வைத்தியர்கள் சொல்லுகின்றார்கள். அவரையும் பிழைப்பூட்டி அவர் வாய்மொழியைக் கேட்கவேண்டியது மிகவும் நியாயமும் உசிதமுமாயிருக்கின்றது" எனச் சொல்லவே, கிருஷ்ணராயரும் எழுந்திருந்து "சக்ரவர்த்தி, தங்களுக்கு நாம் எழுதிய கடிதத்திலும் ஸையிட் அப்டல்லாவை அழைத்துவரும்படி கண்டிருந்தோம். அது தங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். விசுவநாதநாயக்கருக்கு ஸையிட் அப்டல்லா வைத்தியஞ் செய்வதில் நமக்கும் சம்மதமே" என மறுமொழி பகர்ந்தனர்.

இதைக்கேட்ட ஆக்பர் புன்னகைகொண்டு எழுந்திருந்து "மஹாராஜர்காள், ஹிந்துஸ்தானத்தை யாளும் மஹா சக்ரவர்த்தியாகிய ஆக்பரும் நாம்தான்; தட்சிணத்தை யாண்டுவரும் மஹா சக்ரவர்த்தியாகிய கிருஷ்ணராயருக்கு வைத்தியம் செய்த சையிட் அப்டல்லாவும் நாம்தான். நம் சகோதரர் கிருஷ்ணராயர் சுரத்தினுல் அவதிப்பட்டதைக் கேட்க மனம்பதறி மாறுவேஷம்பூண்டு உங்கள் சக்கிரவர்த்தியின் அரண்மனையில் சையிட் அப்டல்லாவாக வைத்தியம் செய்தனம். நாம் நம் வைத்தியனையே அனுப்பியிருக்கலாம். ஆயினும் அவன் எங்கு ஒருவாறு கிருஷ்ணராயர் உயிருக்கு வஞ்சனையால் சேதம் விளைவிப்பனே என்கிற பயத்தினுல் நாமே வேஷம்மாறி வந்தனம்" எனச் சொல்லவே, கிருஷ்ணராயர் "என் உயிர்கொடுத்த தாதாவே, என்னருமைச் சகோதரரே" என ஆக்பரைக் கட்டித்தழுவினர். எல்லோரும் இது என்ன ஆச்சரியம் என்று திகைத்திருந்தனர். கிருஷ்ணராயர் "ஆக்பரைப் பார்த்தவுடன், சையிட் அப்டல்லா முகச்சாயல் தெரிந்ததினுல் வைத்தியன் சக்ரவர்த்திக்கு பந்துத்துவம் உண்

டோ" எனக் கேட்பதாக எண்ணியிருந்த தாகச் சொன்னார். ஜயசிங்கரைப் பார்த்து பலராயர் "சையிட் அப்டல்லாவுக்கு முப்பது முப்பத்தைந்து வயதிருக்குமே; ஆக்பருக்கு இருபத்தைந்து வயதிருக்குமே; இருவரும் ஒருவராக எப்படியிருக்கக்கூடுமென வினவ அதற்கு அவர் "அப்பொழுது பொய்த்தாடியும் மீசையும் வைத்திருந்ததினால் அப்படித் தோன்றினன்" என மெள்ள மறுமொழி கூறினர்.

வைத்தியனும் சக்ரவர்த்தியும் ஒன்றாய்ப் போனதினால் உண்டாகிய ஆச்சரியமடங்கிய பிறகு ஆக்பர் எழுந்திருந்து பின் வருமாறு பிரசங்கித்தார்:—

"என்னருமைச் சகோதரராகிய சக்ரவர்த்தி, மஹாராஜாக்களே, நாம் அக்ராஸ்தானத்தை வகிக்க அருகன் அல்லம், என்றாலும் நமக்குத் தாங்கள் செய்த கண்ணியதையைப் பற்றி மிகவும் திருப்தி யடைந்தோம். நம்மை இன்ன விஷயத்திற்கு நியாயாதிபதியாக நியமித்தீர்களென நமக்கு நன்றாகத் தெரியும்.

"இப்பொழுது தட்சிண மஹாசக்ரவர்த்தினம் விசுவநாதநாயக்கரை துஷ்டநாயைக் கொண்டு கடிக்கவிட்டு மோசமாக அவர் உயிர்

வாங்க எத்தனித்ததாகக் குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறார். கிருஷ்ணராயர் அப்படித் தனக்குள் அரசாண்டுவரும் அரசர்களுக்குள் மிகவும் கீர்த்திவானும் புத்திமானுமாயுள்ள ஒரு சிற்றரசரை மோசமாக சுவானத்தைக் கொண்டு கடிக்கவிட்டது மிகவும் அநியாயந்தான். அவர் அப்படிச் செய்தது இராஜநீக தர்மத்திற்குமுற்றும் விரோதமே. அதற்கு அவர் கொடுந்தண்டனை யடையவேண்டியதே. தனக்குத்தான் பலமிருக்கிறதென ஒருவன் அநியாயமாய் வேறொருவருக்கு கெடுதிசெய்தால் அவனைத் தண்டிக்க நாம் தயாராகவிருக்கின்றோம்.

"ஆயினும் கிருஷ்ணராயர் செய்த குற்றம் மாறக்கூடியதா, அன்று? என நாம் கவனிக்க வேண்டியது. கிருஷ்ணராயருடைய மனிதன் அதிருபையின் துஷ்டநாயினால் பிடிபட்ட விசுவநாதநாயக்கர் வாஸ்தவமாகவே தக்ஷிண சக்ரவர்த்தியின் பதாகையைத் திருடினா இல்லையா? என நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும். விசுவநாத நாயக்கன் கொடியைத் திருடினது வாஸ்தவமென ருசுவாகும்பக்ஷத்தில், கிருஷ்ணராயர் குற்றவாளியைக் கண்டுபிடிக்க உபயோகித்த வழி எப்படியிருந்தபொழுதி

னும் அவர் குற்றம் அவரைவிட்டு நீங்குமென்பது விகசிதம்.

விசுவநாதநாயக்கரே கொடுமையைத் திருடினாரென நிரூபிப்பதற்கு சாட்சியங்கள் நம்மிடத்திலேயே யிருக்கின்றன. மஹாராஜர்காள். தயவுசெய்து கேளுங்கள்: (என்று தன்சட்டையின் பையினின்று ஒரு கடிதத்தை எடுத்து) இக்கடிதம் நமக்கு சுமார் பதினைந்து தினத்திற்கு முன்பாக விசுவநாதநாயக்கனால் எழுதப்பட்டது. அதைக் கவனித்துக் கேளுங்கள். அப்பொழுது உங்களுக்குக் குற்றம் வெளிப்படும். வாசிக்கின்றோம்:—

'ஹிந்துஸ்தானத்தையாளும் கனம் சக்கிரவர்த்திக்கு மதுரை இராஜ்யாதிபதி இராஜ விசுவநாதநாயக்கர் எழுதியது:—சகோதரரே, தாங்கள் தக்ஷிணத்தைக் கைக்கொள்ள எண்ணங்கொண்டவர்களென தாங்கள் படையெடுத்து வந்ததினாலேயே தெரிந்தது. தட்சிணத்தை யாண்டுவரும் கிருஷ்ணராயன் மிகவும் துஷ்டன். சிற்றரசர்களை வதைப்பவன். பகா கொடூரன். ஆனதினால் சிற்றரசர்கள் ஒன்றுகூடி என்னை அவனை மாள்விக்கும் விதத்தை எப்படியாவது தேடவேண்டுமெனப் பிரார்த்தித்தார்கள். நான் அப்படியே தங்கள் இப்

பாய்களில் ஒருவனாகிய துருக்கனைக்கொண்டு கொலைபுரிய எத்தனித்ததில் தங்களால் அனுப்பப்பட்ட அதிருஷ்டையின் சாமர்த்தியத்தினால் அது முடியாமற்போய்விட்டது. கிருஷ்ண ராயர் கொடியை அபகரித்து அவர் கீர்த்தியை யிழக்கும்படிச்செய்தேன். இவ்விஷயங்களினால் தங்கள் சத்துருவாகிய கிருஷ்ணராயரை என்னுடைய சத்துருவாகநினைத்து அவனைப் போக்கும்வழியைத் தேடுகிறேன் என்பது புலப்படும். நான் தங்களிடத்தில் சிற்றரசனாக ஊழியஞ்செய்ய மனமுடையவனாயினேன். இஷ்டப்பட்டு உத்தரவு கொடுத்தால் சிற்றரசச் சைன்னியங்களைத் தங்கள்பட்சம் கொண்டுவந்து தங்களுக்கு தக்ஷிணத்தைக் கைவசப்படுத்துகின்றேன். இதற்குக்கைம்மாறு தாங்கள் என்னை தட்சிணமுழுவதற்கும் மஹாராஜனாகச் செய்யவேண்டியதுதான். இக்கடிதத்தை வெளிப்படுத்தாமல் பத்திரப்படுத்தவும்.

வேணும்,

த. விசுவநாத நாயக்கன்.'

"இக்கடிதத்தைக் கேட்ட அளவில் உங்களுக்கு விசுவநாத நாயக்கன் யோக்கியதை பூராவாக வெளிப்பட்டிருக்கும்."

இப்படி கூட வாசிக்கும்பொழுதே திம்மர் கிருஷ்ணராயர் முகத்தைப்பார்த்தார்; கிருஷ்ணராயர் ஜயசிங்கரைப்பார்த்தார். இதை யெல்லாம்பார்த்த ஆர்பர், "அரசர்களே, நீங்கள் ஆச்சரியப்படுகின்றீர்கள். வாஸ்தவந்தான். உலகத்தில் துஷ்டர்கள் தான் மிருதுபாஷிணி யாயும் சாதுக்கள் போலவும் தோன்றுவார்கள். நாம் இப்பொழுது விசுவநாத நாயக்கன் குற்றவாளியெனவும் அவன் மரணதண்டனையடைய வேண்டுமெனவும் தீர்ப்பு செய்கின்றோம். உங்களுடைய அபிப்பிராயத்தை யறிய மனமுள்ளவரு யிருக்கிறோம்." எனச்சொல்லி முடித்துத் தன் ஆசனத்தில் உட்கார்ந்தார்.

ஜயசிங்கர் எழுந்திருந்து, "அக்ராசனாதிபதி, நான் இப்பொழுது இங்கிருக்கும் அரசர்களுடைய அபிப்பிராயத்தை வெளியிடுகிறேன். கிருஷ்ணராயர் கொடூரன் எனவும் துஷ்டன் எனவும் கடிதத்தில் கண்டிருப்பதுமிகவும் பிசகானவிஷயம்; ஆதாரமில்லாதபொய். சிற்றரசர்கள் ஒன்றுகூடி விசுவநாதநாயக்கனைப் பார்த்து தட்சிணசக்கிரவர்த்தியை மாளவிக்கும்படி பிரார்த்தித்தார்கள் என்பதும் மகா அபத்தம். தெய்வபக்தியும் பந்துவிசுவாஸமுமுள்ள கிருஷ்ணராயருக்கு விரோதம்நினைத்து

விசுவநாதநாயக்கர் மரணதண்டனைக்கு அரு கரே." என்றனர்.

ஆக்பர் மறுபடியும் எழுந்திருந்து "மஹா ராஜர்களே இப்பொழுது விசுவநாதநாயக்கன் குற்றவாளியெனத் தீர்மானமாயிற்று. அவ் விசுவநாதநாயக்கன் குற்றத்தை வெளிப் படுத்துவதற்குக் காரணமாயுள்ள அதிரூபை யின் வரலாற்றை ஒருவாறு சொல்வோம். சோழதேசத்திலிருந்து கிருஷ்ணராயரிடத்தில் தளகர்த்தனுத்தியோகம்பெற்றிருந்த வீரசே னன்தான் இவ்வதிரூபை. (இங்கே கிருஷ்ண ராயர் திம்மருடன் ஏதோ இரகசியமாகப்பேசி னர்.) கிருஷ்ணராயரால் கொடியின் நஷ்டத் திற்காக வீரசேனன் கொலையுண்டு இறக்கும் படி தீர்ப்புச்செய்யப்பட்ட சங்கதி உங்கள் யாவர்க்கும் தெரிந்திருக்கலாம். அப்பொழுது நாம் கையிட்டப்டல்லாவாக கிருஷ்ணராயர் அரண்மனையிலிருந்தோம்." 'சௌ. காந்தி மதி வீரசேனன்பேரில்கொண்ட காதல் மிகு தியாயிருத்தலினால், தாங்கள் தயவுசெய்து எப்படியாவது வீரசேனனை உயிர் தப்பிக்க வேண்டியது.' என கிருஷ்ணராயர் இராக் கினி சுலோசனை சீமாட்டியினிடமிருந்து எமக்கு அப்பொழுது கடிதம்கிடைத்தது.

அதைக்கொண்டு யாம் கொலையாளர்களுக்கு பயக்கமான வஸ்துக்களைக்கொடுத்து அவர்களுக்குத் தெரியாமலே வீரசேனனை நாம் கைவசப்படுத்திக்கொண்டோம். வீரசேனனையும் காந்திமதியையும் எப்படியாவது சேர்த்துவைக்கவேண்டியது நம் கடமையெனத் தோன்றியதினால் மறுபடியும் வீரசேனனை அதிருஷ்டபாத அனுப்பினம். கொடிபோனகாலத்தில் அவ்விடத்திலேயேயிருந்து அவஸ்தைப்பட்ட வீரசேனன் நாய் தன் மேரூப்பாசக்தியினால் பதாகையை யபசரித்தவனைக் கண்டுபிடித்துவிட்டது.

"மஹாராஜர்களே, நாம் சொல்லவேண்டிய விஷயங்களையாவையும் சொல்லிவிட்டோம். நாளையதினமும் கிருஷ்ணராயர் அரண்மனையில் விருந்தினராகவிருந்து மறுநாள் போகப்போகின்றோம். வேறுவிசேடமில்லாததினால் சங்கம் கலைத்தோம்." என ஆக்பர் பிரசங்கித்து சங்கத்தைமுடித்தனர்.

---

## அதிகாரம்—28.

---

சையிட் அபடல்லா ஆக்பரானதும், அதிருஷ்டை வீரசேனனாகமாறியதும் அரண்மனை

முழுவதும் மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. கிருஷ்ணராயருக்கு வீரசேனனிடத்திலிருந்த கோபமெல்லாந்தணிந்து மிகுந்த சந்தோஷம் ஜனித்தது. சுலோசனை தன்னைக் கேளாது ஆக்பருக்குக்கடிதம் எழுதினதற்காக ஒருதடவை கோபிப்பார். பிறகு குற்றமில்லை: வீரசேனன் மிகவும் சௌரியவான் எனத்தேற்றிக்கொள்வார். காந்திமதியும் வீரசேனனாகிய அதிரூபனையும் இணைபிரியாது இருந்த சங்கதி தான் கேட்டிருந்தபடியால் அதற்குக்காரணம் இப்பொழுதுதான் புலப்பட்டது.

கௌதமரிஷியும் நடந்த வர்த்தமானமெல்லாம் அறிந்து அரண்மனைக்குவந்தார். அத்தருணத்திற்றான் சோழமகாராஜனிடமிருந்து கடிதம் ஒன்றுவந்தது. சோழன் தனக்குப் பகைஞன் ஆனதினால் என்ன எழுதியிருக்கக் கூடுமென ஆச்சரியத்துடன் கடிதத்தைப் பிரித்துப்பார்க்கையில், அதில் சோழமகாராஜனுடைய ஏக புத்திரனாகிய ஜயசாம்பசிவ சோழன் தனக்குத்தெரியாமலே விஜயநகர மகாராஜனாகிய கிருஷ்ணராயர் குமாரத்தியை மணம்புரிவதற்காக, வீரசேனன் என மாறு வேஷம் பூண்டுவந்து தன் சௌரியத்தினால்

தளகர்த்தனுயிருப்பதாகத் தான் கேள்விப்பட்டதினால் அதன் உண்மை தெரியவேண்டுமென்றும், அப்படி வீரசேனன் என்கிற ஜயசாம்பசிவ சோழன் அங்கு இருக்கும்பட்சத்தில் பத்திரமாகவைத்துக்கொண்டு கடிதம் எழுதினால் தான் வருவதாகவும் சோழமகாராஜன் எழுதியிருந்தனன். இச்சங்கதியுண்மைதானென்று கௌதமரிஷியும் சொன்னார். ஆதியில் வீரசேனன் தன் பூர்வோத்திரங்களை கௌதமரிஷியினிடத்தில் வெளிப்படுத்தித் தன்னைக்கேளாமல் அதை யொருவருக்கும் தெரிவிக்கக்கூடாதெனக் கேட்டுக்கொண்டபடியால் அவமகான் இதுவரையும் அவ்விரகசியத்தை வெளிப்படுத்தவில்லை.

இவ்வாச்சரியகரமான சங்கதியை ஆக்பா சக்ரவர்த்திக்கும் தெரியப்படுத்த வேண்டுமென்று அவருக்குக் கிருஷ்ணராயர் ஆள் அனுப்ப, அவரும்வந்து அச்சங்கதி தனக்கு முந்தியே தெரிந்ததாகவும் அதை வீரசேனன் பகிரங்கப்படுத்தக்கூடாதெனச் சொன்னதாகவும் அதனுற்றான் தான் அச்சங்கதியை சங்கத்திற்குமுன் சொல்லவில்லையென்றும் சொன்னார்.

அத்தருணத்தில் அவிரூபத்தைமாற்றி முன் போலவே வீரசேனனாய் ஜயசாம்பசிவசோழ னும் கிருஷ்ணராயரிடத்தில் தோன்றினன். அவனும் தன் வரலாற்றைப் பூராவாக வெளிப் படுத்த, கிருஷ்ணராயருக்கு அடக்கக்கூடாத ஆஹ்லாதகம் உண்டாகி "சாம்பசிவசோழனே நீயே எனக்கு மருமகன். நீயே எனக்கு மகன். நீயே இன்றுமுதல் சோழதேசத்தையும் விஜய நகர மகாஇராஜ்ஜியத்தையும் சக்ரவர்த்தி யாக ஆள்வாய். என் செல்வப்புதல்வனே, என் புத்திரிக்கு ஏற்றகணவன் நீயே. என் காந்திமதிக்கு இசைந்த பாத்ரா நீயே" எனச் சொல்லி வீரசேனனைக் கட்டித்தழுவி முத்த மிட்டனன்.

அக்பர் வீரசேனனைப்பார்த்து "மகாவீரா, உம்மைப்போல் சௌரியவான் யாம் பார்த்த தில்லை. உம்மை நம் புத்திரன்போல் பாவிப் போம். இன்றுமுதல் யாம் தட்சிணத்தைக் கைக்கொள்ளும் எண்ணத்தை விட்டுவிட் டோம். இன்றுமுதல் நீரே தட்சிணத்திற்கு சுயாதிகாரச் சக்ரவர்த்தியாய் அரசாளும்." எனப் பகர்ந்தனன்.

(முற்றும்.)